# தமிழர் சரித்திரம்

(நான்காம் பதிப்பு)



ஆசிரியர்:

திரு. ந. சி. கந்தையா பிள்ளை.

கிடைக்குமிடம்:
ஆசிரியர் நூற்பதிப்புக் கழகம்
பவழக்காரத் தெரு சென்னை-1.

 1964 [விலை ரூ. 5/-

முதலாம் பதிப்பு : 1939
இரண்டாம் பதிப்பு : 1945
மூன்ரும் பதிப்பு : 1950
நான்காம் பதிப்பு : 1964

The Progressive Printers, Madras-1.

**K. SUBRAMANIA PILLAI, M.A., M.L.,**
ADVOCATE
*Tagore Professor of Law (1920)*
(Professor of Tamil,
ANNAMALAI UNIVERSITY)

16, RANGANATHA STREET,
T. N., MADRAS.

*Dated, 16 — 5 — '40*

யாழ்ப்பாணத்து நவாலியூர்ப் பெரும் புலவராகிய திருவாளர் **ந. சி. கந்தையா பிள்ளை** அவர்கள் இயற்றிய **'தமிழர் சரித்திரம்'** என்னும் நூலானது மக்கள் தோற்றத்தைப் பற்றிய தொன்னூல்கள் பலவற்றின் ஆராய்ச்சிப் பயனுகவும் எகுப்தியர், சுமேரியர், பழைய சிந்து நாட்டினர் முதலிய பண்டை நாகரிக மக்களின் வரலாற்றினைப் பண்டைத் தமிழர் வரலாற்றிேடு ஒப்பிட்டு ஆய்ந்ததின் பயனுகவும் அமைந்துள்ளது கண்டு பெருமகிழ் வடைந்தேன். இந்நூல் எளிய தமிழ் நடையில் தக்க முறையில் எழுதப்பட்டுள்ளது. ஐவகை நில மக்கள், நால்வகை மரபினர், சங்க நூற்றெய்வங்கள், பண்டைத் தொழில் வகைகள், தமிழர் ஆரியர் கலப்பு என்பவற்றைப் பற்றிய அரிய கருத்துக்கள் கற்பாருக்குப் புத்தறிவு பயப்பன.........தமிழுலகம் இவ்வாசிரியருக்கு நன்றி பாராட்டக் கடமைப்பட்டுள்ளது.

---

வே. வெங்கடராஜுலு ரெட்டியார்,
Junior Lecturer in Tamil,
University of Madras.

மயிலை,

2—12—'40

யாழ்ப்பாணத்து நவாலியூர், திரு. ந. சி. கந்தையா பிள்ளையவர்களைத் தமிழறிஞர்கள் நன்கு அறிவார்கள். பிள்ளையவர்கள் 'தமிழகம்' என்னும் ஆராய்ச்சி நூலை எழுதித் தமிழ் மக்களின் நன்மதிப்பினைப் பெற்றிருக்கின்ருர்கள்; அன்றியும், பழைய தமிழ் நூல்கள் சிலவற்றை உரை நடையில் எழுதியிருக்கின்ருர்கள்.

திரு. கந்தையா பிள்ளையவர்கள் இப்போது எழுதியிருக்கின்ற 'தமிழர் சரித்திரம்' என்னும் நூல், சிறந்த ஆராய்ச்சியை உடையது. ஆங்கிலத்திலும் தமிழிலும் அறிஞர் பலர் எழுதியுள்ள பற்பல நூல்கள் முதலியவற்றிலிருந்தும் தமிழ் நூல்களிலிருந்தும் தக்க மேற்கோள்களைக் காட்டித் தமது கொள்கையினை நிறுவியிருப்பது பாராட்டத்தக்கது. தொல்காப்பியத்தில் சில சூத்திரங்கள் இடைச் செருகலா யுள்ளன என்னுங் கூற்று இன்னும் ஆராய்ந்து உண்மை காண்டற்பாலது.

'தமிழர் சரித்திரம்' என்னும் இந்நூல் தமிழ் மக்கள் அனைவரும் மேற்கொள்ளத் தக்கதுவே யாகும். இதனை எழுதிய திரு. கந்தையா பிள்ளை யவர்கட்குத் தமிழுலகம் நன்றி செலுத்துங் கடமைப்பாடுடையது.

## நான்காம் பதிப்பின் முன்னுரை

இந்நூலின் முதற் பதிப்பு 1939-ல் வெளி வந்தது. அதன் பின் பல ஆராய்ச்சி நூல்களும் ஆராயச்சிக் கட்டுரைகளும் வெளி வந்துள்ளன. இந்நூல் எழுதப்பட்ட காலத்தில் ஆராய்ச்சியாள ரால் வெளியிடப்பட்ட நூல்களிற் பல வற்றைப் படிக்கும் வாய்ப்புக்கிட்ட வில்லை. இந் நூல் எழுதப்படு முன்னும் பின்னும் வெளிவந்த ஆங்கில நூல்கள் பல வற்றினின்றும், இந் நூலிற் கூறப்படும் கருத்துக்களுக்கு ஆதாரமாகவுள்ள மேற் கோள்களைத் திரட்டி வெவ்வேறு தலைப்புகளில் ஒழுங்குபடுத்தி இறுதியில் பின் சேர்ப்பாகத் தந்துள்ளோம்; சில மேற்கோள் களை நூலகத்தே அடிக்குறிப்புக்களாகச் சேர்த்து முள்ளோம். இந்நூலிற் கூறப்படும் கருத்துக்களே இன்று ஆராய்ச்சி அறிஞரால் பெரும்பாலும் கொள்ளப்படுகின்றன என்பது பின் சேர்ப்பாகவுள்ள மேற்கோள்களால் எளிதிற் புலனாகும்.

யாழ்ப்பாணம்
30 - 5 - 1964.

ந. சி. க.

## முதலாம் பதிப்பின் முன்னுரை

தமிழர் பழஞ் சரித்திரத்தை ஆரம்பத்திலிருந்து கூறும் தமிழ் நூல்கள் இல்லை. பழந்தமிழ் மக்களைக் குறித்தும், இடைக் காலத்தில் வந்து அவர்களோடு கலப்புற்ற ஆரியரைப் பற்றியும் தமிழ் மாணவரும் பிறரும் தெளிவாயறியுமாறு இந் நூல் எழுதப் படலாயிற்று. தமிழரின் சிந்து நதிப் பள்ளத்தாக்கின் நாகரிகம் முதல் (கி. மு. 3500) கிறித்துவுக்குப் பின் சில நூற்றாண்டு களுக்குப் பிற்பட்ட காலம் வரையுள்ள நாகரிகம், மொழி உற்பத்தி, வாழ்க்கை முறை, சமயம் ஆகியவற்றை விளக்கமாக இந்நூல் கூறுகின்றது.

இவ்வுலகம் முழுமையிலும் வாழ்ந்த பழைய நாகரிக சாதியாருள் தமிழ்ச் சாதியாரே தொன்மையுடையவர்களென் பதும், பிறமொழிகளும் சமயங்களும் தோன்றுவதன் முன் அவர்களுடைய தமிழ் மொழியும் சிவமதமும், ஞால முழுமையும் பரவியிருந்தன வென்பதும் இந்நூலைக் கற்குந்தோறும் உள்ளத் தில் உறுதிப்படுவனவாகும்.

ஐயுறவுக்கு ஏதுவான பொருள்களைத் தக்க மேற்கோள்கள் காட்டி வலியுறுத்தி யிருக்கின்றோம். தமிழ் மக்கள் தம் முன்னோரின் வரலாற்றை எளிதிற் கற்றறிய வேண்டுமென்னும் ஒரே நோக்கத்துடன் இந்நூல் எழுதப் படலாயிற்று.

நவாலியூர்
தமிழ் நிலையம்
5 - 3 - 1939.

ந. சி. க.

# FOREWORD

## BY (LATE)

## NALLUR, SWAMI GNANAPRAKASAR

*(Author of " Etymological and Comparative Lexicon of the Tamil language; President: Jaffna Historical Society; Vice President: Jaffna Oriental Studies Society; Member Royal Asiatic Society, C. B.)*

No history of the Tamil people, worth the name, has been so far written in their own language. Only sporadic attempts are made from time to time, to put together anything like a connected narrative of the origin, progress, culture, &c. of the Tamil race, which, nevertheless boasts of one of the oldest civilizations in the world. There are, indeed, many scholarly views on the Tamils and their history expressed by a number of writers in English. But they are not available to readers who know Tamil only. To all such, Mr. N. S. Kandiah Pillai has done a great service in this work, by bringing together views and conclusions on this subject scattered in various English writings, and adding to them a vast quantity of historical or quasi-historical material from the ancient Tamil classics known as Sangam works.

Although a small volume intended for the ordinary reader, it is a *multum in parvo* presenting a good summary of all that is known about the Tamils at the present moment. Mr. Kandiah Pillai is a serious

student of ancient history, and this is not the first book that has come out from his fertile pen. He is not afraid to depart from traditional beliefs where critical research has proved them false. His Tamil is simple and easy, but forceful. It makes a striking contrast with the highly involved bombastic style of a certain type of Tamil writers.

I should like to see this work in the hands of every Tamil teacher, who is sure to derive from it a wealth of information on things he ought to know. Many a hard passage in the classics will be easily explained by a knowledge of the customs and habits of ancient Tamil land. Another excellent idea would be, I think, to introduce this work into Tamil Training schools so as to give the students an early taste for making researches in the history for their own land. A great drawback among students coming out from Tamil schools is the want of a spirit of research. Works of this kind should be encouraged more and more, if one wishes to turn out young men with a spirit of enquiry and zeal for further study.

# பொருளடக்கம்

## 3. கடவுட்கொள்கை





## 4. மொழி



## 5. தமிழர் நாகரிகச் சிறப்பு



## 6. தமிழர் ஆரியர் கலப்பு

## பிழை திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 3 | 32 | ead | lead |
| 21 | 30 | consonent | consonant |
| 76 | 27 | தீயுட்டி | தீயூட்டி |
| 116 | 24 | W.S. | U. S. |
| 136 | 31 | தமிழ்ச் காலத்தில் | தமிழ்ச்சங்க காலத்தில் |
| 162 | 30 | கிளவரை | கிளர வரை |
| 184 | 27 | hisory | history |
| 217 | 27 | ஈருல | ஈருன |
| 218 | 23 | Purana | puranas |
| 234 | 2 | Gondwana | name gondwana |
| 248 | 22 | meshered | meshed |
| ” | 34 | mistery | mystery |

# தமிழர் சரித்திரம்

—— : o : ——

## 1. பழமை

### மனிதனின் தொன்மை

இந் நிலவுலகில் மனிதன் [1]இலட்சக்கணக்கான ஆண்டுகளாக வாழ்ந்து வருகின்ருன். அவன் காலந்தோறும் வாழ்க்கையில் திருத்த முற்றுப் பலவகை நாகரிகங்களுக் கூடாக வந்திருக்கிருன். அவனது முற்பருவத்து வாழ்க்கை முறைகளை அறிந்து கொள்ளுதற்குரிய ஆதாரங்கள் மிகச் சிலவே கிடைத்துள்ளன. மனிதன் கற்கால நாகரிகத்தில் இருந்த காலத்துப் பயன்படுத்திய கல்லாயுதங்கள், உலகின் எல்லாப் பாகங்களிலும் கண்டெடுக்கப்பட்டன. இவற்றையும், வரலாற்றுக் காலத்திற்கு முற்பட்ட சமாதிக்குழிகளிற் கிடைத்த பழம் பொருள்களையும் கொண்டு மனிதன் காட்டுமிராண்டியாக வாழ்ந்தது முதல் நாகரிகத்தில் படிப்படியே வளர்ச்சியடைந்து திருத்தமடைந்தது வரையிலுள்ள வரலாறுகளை ஆராய்ச்சியாளர் ஊகித் தெழுதியிருக்கின்றனர்.

சாமுவேல் லயங்[2] என்னும் ஆசிரியர், “மனிதனின் தொன்மை” என்னும் நூலிற் கூறியிருப்பது வருமாறு:

---

[1] “Recent discoveries have established the fact that the years of man's career must be estimated in hundreds of thousands and probably even more than million.”—*The Origin of Civilization—Prof. Elliot Smith.*

[2] Samuel Liang—*Antiquity of Man.*

"மனிதன் இம்மண்ணுலகில் எல்லையில்லாத காலம் முதல் வாழ்ந்துவருகின்றானென்பதும், அவன் காட்டுமிராண்டியாக விருந்து அறிவிலும், ஒழுக்கத்திலும், நாகரிகத்திலும் படிப்படியே முன்னேறி வந்திருக்கிறானென்பதும் தற்கால ஆராய்ச்சிகளால் வெளியாகின்றன. [3]உலோக காலத்துக்கு முன் கற்காலம் இருந்ததென்பது நெடுநாளாக அறிந்த உண்மை. தீத்தட்டிக் கற்களாற் செய்த அம்புத்தலை, கற்கோடரி, கத்தி, உளி முதலிய ஆயுதங்களும், முரடான பானை சட்டிகளும், மனித எலும்புகளும், நிலத்தின் மேற்பாகங்களிலும் சமாதிக் குழிகளிலும் கண்டெடுக்கப்பட்டன. வேளாண்மைத்தொழில் விருத்தியடைதலும் சமாதிகள் மறைந்துபோயின.

"மனிதன் பூமியில் தோன்றிய காலத்தைப் பத்தாயிரக் கணக்கான அல்லது நூறாயிரக் கணக்கான ஆண்டுகளைக் கொண்டு அளவிடவேண்டுமென்று தெரிகின்றது. மேற்கு ஐரோப்பா தொடங்கி திபெத்து வரையிலும், மத்திய ஆஸ்திரேலியாவிலும், உறைபனிக்காலத்துப் பனி மூடியிருந்த வடபகுதிகளல்லாத பிற இடங்களிலும் கண்டெடுக்கப்பட்ட மனிதன் பயன்படுத்திய பதினாயிரக் கணக்கான கல்லாயுதங்கள் நூதன பொருட்காட்சிச் சாலைகளில் வைக்கப்பட்டிருக்கின்றன. பாபிலோனிய கட்டடங்கள் 9000 ஆண்டுகளுக்கு முற்பட்டனவென்று சொல்லப்படுகின்றன. மனிதன் இவ்வுலகில் உயிர் வாழத் தொடங்கிய காலத்தில் இஃது ஒரு சிறு பகுதி எனக் கூறலாம்."

[3] The fact is in southern India iron appears immediately after stone age, whereas in the North a copper age comes between the two periods. The absence of bronze age between those of stone and iron is a special feature of South Indian pre-history and it should add ,that the bronze objects found in the tombs of Tinnevely are not weapons—*Ancient India and Indian Civilization—Paul Masson Oursel*.



ஜாவாவிலுள்ள சோலோ ஆற்றங்கரையில் ஒரு மனித மண்டையோடும், இடது தொடை எலும்பும், இரண்டு கொடுப்புப் பற்களும் [4]யூகின் தூபோயிஸ் என்பவரால் 1884-ஆம் ஆண்டு கண்டெடுக்கப்பட்டன. அவ்வெலும்புக்குரிய ஜாவா மனிதனை நிமிர்ந்து நிற்கும் குரங்கு மனிதன் என்னும் பொருளில் 'பிதிகந்தரோபஸ் எரக்டஸ்[5] என மனித வியலார் கூறுவர். இந்த ஜாவா மனிதனின் காலம் பத்தி லட்சம் ஆண்டுகளுக்கு[6] அப்பாற்பட்டதெனப்படுகின்றது. ஜாவா மனிதனுக்கு முற்பட்டவன் 'பீக்கிங் மனிதன்[7]'. இவனுடைய எலும்புகள் சீனாவிலுள்ள பீக்கிங் என்னுமிடத்திற் கண்டெடுக்கப்பட்டன. இம்மனிதனை மனிதவியலார் 'சினன்துரோ பஸ்[8]' என வழங்குவர்.

அண்மையில் ஜாவா மனிதனுக்கும் முற்பட்ட காலத்திய ஒரு பெண்ணின் மண்டையோடும் கீழ்வாயெலும்பும் கண்டெடுக்கப்பட்டன. இவை மனிதனின் தொன்மையை இன்னும் சில நூறு ஆயிரம் ஆண்டுகளுக்கு அப்பாற் கொண்டுபோய் விடுகின்றன[9].

[4] Dr. Eugene Dubois.

[5] Pithecanthropus erectus.

[6] The human being of whom we have any knowledge is the man of Java, whom they call as Pithecanthropus, because of his strong likeness to the apes. He lived probably about a million years ago.—*Men of Dawn* P. 40.

[7] Peking man. [8] Sinanthropus.

[9] "The Java anthropologist Kolningo Wald has recently found another example of prehistoric man, a female skull and mandible of Pithecanthropus. The Pre-historic Congress of the Far East, recently held at Singapore was thrilled by the claim that Pithecanthropus, the Java pre-historic man was probably older than Sinathropus, the Peking pre-historic man. If investigation and discussion ead to general adoption of this opinion, the antiquity of

மனிதன் எவ்வளவு காலத்துக்கு முன் இவ்வுலகிற்றோன்றி வாழ்ந்து வருகின்றானென்பது அறிய முடியாமலிருப்பது போலவே அவனது நாகரிகம் எப்போது ஆரம்பமாயிற்றென்பதும் அறிய முடியாமல் இருக்கின்றது.

ஆறாயிரம் ஆண்டுகளுக்குமுன் எழுப்பப்பட்ட எகிப்திய பிரமிட்டுச் சமாதிகள் இன்று உலக வியப்புக்களுள் ஒன்றாக விளங்குகின்றன. பல்லாயிரமாண்டுகளாக அங்கு வாழ்ந்த பின்னரே அம்மக்கள் மிகப் பெரிய கட்டடங்களை அமைக்கும் அறிவினைப் பெற்றிருப்பார்கள். எகிப்திய மக்கள் சிவப்படைந்த கபில நிறமுடையவர்களா யிருந்தார்கள். அக்காலத்து எகிப்தியர் அறிந்திருந்த மக்கட் சாதியினரின் உருவங்கள், முகவெட்டோடு நிறமும் புலப்படும்படி நிறமைகளால் சமாதிக் கட்டிடச் சுவர்களில் வரையப்பட்டிருக்கின்றன. இதனால் இக்காலத்தைப்போலவே அக்காலத்தும் தோற்றத்தால் வேறுபட்ட பலமக்கட் கூட்டத்தினர் வாழ்ந்தார்களென அறிகின்றோம்.

தார் நிறமனிதன் முதல் வெண்ணிற மனிதன் வரை உள்ள எல்லாச் சாதியினரும் ஒரே தொடக்கத்தைச் சேர்ந்தவர்களென்றும், வாழும் இடங்களின் வெப்பதட்பநிலை, உணவு, பழக்க வழக்கம் ஆகியவற்றால் ஒரே மக்கட் கூட்டத்தினர் பல கூட்டத்தினராகப் பிரிகின்றனரென்றும்[10] மக்கள் நூலார் கூறுவர். இவ்வாறு மக்கட் கூட்டத்தினர் பல இனங்களாகப் பிரிந்து வாழ்வதற்கு மிக நீண்ட காலம் எடுத்திருக்க வேண்டுமென்பதில் ஐயமில்லை.

இப்பொழுது உலகில் வழங்குகின்ற முக்கிய மொழிகள் ஆயிரம் வரை யுள. அவையிற்றை இலாத்தின், [illegible], ஆரியம், திராவிடம் என்பனபோற் சில இனங்களாகப் பிரித்துவிடலாம். இச்சில இனங்கள் பின் சில இனங்களுள் அடங்கும். இவ்வினங்கள் இறுதியில் ஒன்று அல்லது இரண்டில் அடங்கும். மொழிநூலார் இவ்வுண்மையை நன்காராய்ந்து கூறுகின்றனர். மக்களின் தோற்றம் ஒன்றானது போலவே ஆதியிற்றோன்றிய மொழியும் ஒன்றே என்பதும் புலனாகின்றது[11]. ஒரு மொழியே ஆயிரக்கணக்கான மொழிகளாகத் திரிந்து வழங்குவதற்கு மிக நீண்ட காலம் வேண்டுமென்பது இதனாலும் பெறும்.

---

pre-historic man must be put back further than at present considered probable since Sinanthropus, the Peking prehistoric man, is placed a million years ago. If the Java prehistoric man is older, the antiquity of man is still greater by a few hundred thousand years—*Daily News, Ceylon.*

[10] First that all tribes of men from the blackest to the whitest, the most savage to the most cultured have such general likeness in the structure of their bodies and the working of their minds, is easiest and best accounted for by their being descended from a common ancestry—*Anthropology P. 4.—Sir E. B. Taylor Kt.*

"The whole migrating tribes underwent bodily alteration through change of climate, food, and habits, so that the peopling of the earth went on together with the growth of fresh, races—*Ibid P. 5.*

[11] Sir H. Rawilisson showed that Accadians of Mesopotamia were Turanian speaking agglutinative languages. The term includes not only the Turks, Mongols, Chinese, Finns and others of North, but the Kolarians and Dravidians Malays and Siamese of the south whose languages are agglutinative and ultimately connected. In Europe the Hungarians, Basques, Finns, Lapps and Ugrians represent this stock which was also present in Italy in the Etruscans as early at least as 1000 B.C. Col. Condor however holds that the roots of all known speech are the same in the simplest causes as amounting to some 200 in all.—*Faiths of man Vol. III—G.R. Forlong.*

## தமிழர் உற்பத்தி

ஆராய்ச்சியாளர் தமிழரின் உற்பத்தியைக் குறித்து ஒரு தலைப்படக் கூருது பல திறப்படக் கூறியிருக்கின்றனர். அவற்றை அறிதல் தமிழர் வரலாற்றின் சில பகுதிகளை விளங்கிக் கொள்வதற்குத் துணைபுரியும். அவற்றுள் சில முக்கிய கொள்கைகளை இங்குக் கூறுகின்றோம்.

### 1. மத்திய ஆசிய அல்லது சித்திய உற்பத்தி

மத்திய ஆசியாவில் வாழ்ந்த ஓரின மக்கள் *சித்திய ரென்றழைக்கப்பட்டனர். சித்திய உற்பத்திக்கொள்கை கால்ட்வேல் பாதிரியாரால் கொண்டுவரப்பட்டது. இதற்கு ஆதாரம் இருமொழிகளுக்கும் பொதுவாயுள்ள இலக்கணம், சொல், நாசிவழியாய்ப் பிறக்கும் எழுத்தொலிகள் ஆகிய சிலவற்றின் ஒற்றுமைகளாகும். அவர் கூற்றின்படி, மத்திய ஆசியாவில் வாழ்ந்துவந்த ஆரியரல்லாத துரானிய வகுப்பினர் இமய மலையின் வடமேற்குக் கணவாய் வழியாக இந்தியாவை அடைந்தனர். இவர்களுக்குப் பின் படை எடுத்து வந்த ஆரியர் இவர்களை வென்று தெற்கே துரத்தினர்கள். இக்கொள்கையை மேல் நாட்டு ஆராய்ச்சி-யாளர் பலர் வழிமொழிந்திருக்கின்றனர். தற்கால ஆராய்ச்சியின்படி மற்றைய வகுப்பினரிலும் பார்க்கத் தமிழர் காக்கேசிய அல்லது இந்து-ஐரோப்பிய இனத்தைச் சேர்ந்தவர்களாகக் காணப்படுகின்றனர். ரேயின்ஹோல்ட் ரோஸ்ட் (Reignhold Rost) என்னும் ஆசிரியர் மக்கிலின் (Macleane) கூறியதை எடுத்துக் காட்டித் தமிழர் சித்திய இரட்டை வகுப்பில் ஒருவரெனக் கொள்ளுதல், மக்களி-னங்களைக் குறித்து ஆராயும் எல்லா ஆராய்ச்சியாள-ராலும் மறுக்கப்படுகின்றது எனமொழிவர். ஜூலியன் வின்சன் என்னும் ஆசிரியர் (Prof. Julian Vinson) தமிழர் சித்திய வகுப்பைச் சேர்ந்தவர்களென்னுங் கொள்கை

*Scythians



நம்பக்கூடாத மூடத்தனமானது எனக் கூறினர். கோவர் என்னும் ஆசிரியர் (C. F. Gover) கால்ட்வேல் பாதிரியார் காட்டிய சித்திய தமிழ் இலக்கண ஒற்றுமைகளை ஆராய்ந்து காட்டித் தமிழர் துரானிய வகுப்பினரல்லரெனக் காட்டுவர். வாரர் என்னும் ஆசிரியர் (Mr. Farrar) இலக்கியம், சரித்திரம் முதலியன இல்லாத ஒரு சாதியாரை, கோட்டை-களையும், நிலையான அரசியலமைப்பையும் மிகப்பெரிய ஆலயங்களையும் உடையோரும், வானநூல், உழவு, சிற்பம், நெசவு, திருந்திய மொழி, இலக்கியம், நீதி நூல் முதலிய நாகரிகத்தின் சின்னங்களைப் பெற்றிருந்தோரு மாகிய தமிழரோடு ஒப்பிடுதல் தகா தெனக் கூறுவர்.

### 2. மங்கோலிய உற்பத்தி

திபெத்தினின்றும் இந்தியநாடு போந்த மங்கோலிய வகுப்பினரே தமிழர் என 1800 ஆண்டுகளுக்கு முந்திய தமிழர் என்னும் நூல் எழுதிய திரு. வி. கனகசபைப் பிள்ளை யவர்கள் சாதித்தனர். இக்கொள்கையை [1]வெர்குசன், [2]ஹண்டர், [3]மார்ஷ்மன் முதலிய ஆசிரியர்கள் வழி மொழிந்திருக்கின்றனர். மக்கள் இனத்தைக் குறித்த ஆராய்ச்சியால் இக்கொள்கை ஏற்றுக் கொள்ளப்பட வில்லை. மொழியின் ஒலிசம்பந்தமாகிய ஆதாரமும் உறுதிப் படவில்லை. திபெத்தில் வழங்கும் மங்கோலிய மொழிகளில் தமிழிற் காணப்படுவது போலவே, ழ, ஞ, ங முதலிய எழுத் தொலிகள் காணப்படுதலும், சேரர் வானவர் எனப்படுவது போலச் சீனர் வானவர் எனப்படுதலுமாகிய இவையே தமிழர் மங்கோலிய வகுப்பினர் என்று கொள்வதற்குரிய ஆதாரங்களாகும்.

### 3. சுமேரிய உற்பத்தி

தமிழரைச் சுமேரியர் எனச் சாதித்தோர் டாக்டர் ஒப்பேட், பண்டிதர் சவரிராய பிள்ளை ஆகியோராவர். இக்

[1]Mr. Fergusson. [2]Sir. W. W. Hunter. [3]Mr. Marshman.

கொள்கையின்படி, சுமேரியர்* பாரசீக வளைகுடாக்கடல் வழியாகவும், போலன் கணவாய் மார்க்கமாகவும் இந்தியாவை வந்தடைந்து மேற்குக் கடலோரத்திலும், வட இந்தியாவிலும் குடியேறினர். இக்கொள்கைக்கு ஆதாரம் சுமேரியாவுக்கும் இந்தியாவுக்கும் பொதுவாகிய வெள்ளப் பெருக்கைக் குறிக்கும் புராணக் கதையும், இரு நாடுகளுக்கும் பொதுவாகிய எல்லம்[12] என்னும் மலைப்பெயரும், சுமேரிய மொழிக்கும் தமிழுக்குமுள்ள ஒலி ஒற்றுமையுமாகும். நோவாவின் பேழை எல்லம் அல்லது எவ்வொன்ட் மலையிற்றங்கியதாகச் சுமேரிய வரலாறு கூறுகின்றது. இக்கொள்கையின்படி தமிழர் மெசபெதேமியாவிலிருந்து வந்தவராவர்[13].

## 4. இந்து ஆப்பிரிக்க ஆஸ்திரேலிய உற்பத்தி

இக் கொள்கையின்படி, இந்து சமுத்திரத்தினூடே, இந்தியா, தென்னுப்பிரிக்கா, ஆஸ்திரேலியா, சீனு முதலிய நாடுகளைத் தொடுத்துக் கொண்டிருந்த பூகண்டத்தினின்று இந்தியாவை அடைந்தவர்களே தமிழராவர். இக்கொள்கையை ஆதரிப்போர் குருக்ஸ் (Crooks), கேன் (Keane), மாரிஸ் (Morris) என்னும் ஆசிரியர்களாவர். இந்து

* சுமேரியா-தென் பாபிலோனியா.

[12] இளாவிருதம் மேருவின் சிகரத்திலொன்று எல்லவிருதம் இளா விருதமாயிற்றுப் போலும்.

[13] We, therefore, conclude that the so-called Mediterranean race had its origin in peninsular India, which was a part of the original Dravidian home which was in the submerged continent and connected South India with Africa, when the Indo Gangetic basin had not probably been formed. So the Dravidian element is not to be found in Indian culture alone but is largely traceable in Cretan, Aegean, Sumerian, Babylonian, Egyptian, Polynesian and other cultures of ancient world.—*Origin and Spread of the Tamils P. 29.—V. R. Ramachandra Dikshitar, M. A.*



சமுத்திரத்தினூடே கிடந்த பூகண்டத்துக்கு இலெமூரியா எனப் பெயரிட்டனர் ஹேக்கல் என்னும் பண்டிதர். இலெமூரியாக் கண்டத்திலேயே மக்கள் உற்பத்தி ஆதியில் ஏற்பட்டதென்றும், இலெமூரியாவே பழைய தமிழகமென்றும் தக்க காரணங்கள் காட்டிச் சாதித்தனர் திரு. பா. வே. மாணிக்க நாய்க்கரவர்கள்.

## 5. மத்தியதரை உற்பத்தி

இக்கொள்கையின்படி மத்தியதரைக் கடலை அடுத்த நாடுகளிலிருந்த சாதியார் மெசபெதோமியாவிற் றங்கிப் பின் பலுசிஸ்தானம் வழியாக இந்தியாவை அடைந்து குடியேறினர். இது சுமேரிய நாகரிகம் உதயமாவதற்கு முற்பட்ட செய்தி. சரித்திர காலத்துக்கு முற்பட்ட இந்திய சமாதிகள், கிரீட், சைபிரஸ், அனரோலியா (ஆசியாமைனர்) பாபிலோனியா முதலிய மத்தியதரைக்கடலை அடுத்த நாடுகளின் சமாதிகளை ஒத்திருக்கின்றன. இக்கொள்கையைச் சிலேடர் (Dr. Slater), ஜேம்ஸ் ஹார்னெல் (James Hornell) முதலியோர் ஆதரிப்பர்.

கிரீட்டினின்றும் புறப்பட்டுச் சின்ன ஆசியாவிலும், மெச-பெதோமியாவிலுந் தங்கிச் சுமேரியரோடு பழகியவர்களாய் சிந்து ஆற்றங்கரையில் வந்து தங்கிய மத்தியதரைச் சாதியாராகத் தமிழர் காணப்படுகின்றனர் என டாக்டர் சட்டர்ஜி (Dr. Chatterjee) என்னும் ஆசிரியர் சாதிப்பர்[14]

## 6. பி. தி. சீனிவாச ஐயங்காரின் கொள்கை

இவ்வாசிரியரின் கொள்கைப்படி ஆதிகாலந் தொட்டுத் தமிழ் மக்கள் இந்திய நாட்டில் வாழ்ந்து வருகின்றனர்.

[14] The whole of the district included in Assyria, Chaldea and Media was originally inhabited by the Sumarian race with agglutinative languages who invented cuniform system of writing—*Principles of comparative phylology p. 392—A. H. Sayce.*

மனித உற்பத்தி ஆதியில் தண்டகாரணியத்துக்கும் கடலுக்கும் இடையில் ஏற்பட்டதென அவர் ஓரிடத்துக் கூறியிருக்கின்றார்[15].

## 7. இலங்கையுற்பத்தி[16]

இக்கொள்கையின்படி மனிதன் ஆதியில் இலங்கையிலே உற்பத்தியாகி ஜாவா முதலிய நாடுகளுக்குச் சென்றிருக்கிறன். யாவானியருடைய பழைய நூல் ஒன்று 'ஆதாமின் வமிசத்திலுள்ள பிரமா யாவாவிற் சென்று மக்கட்சந்ததியைப் பெருக்கினர்' என்று கூறுகின்றது. இலங்கையிலுள்ள ஆதம்பாலம், ஆதம்மலை முதலியன இக்கொள்கைக்கு ஆதாரமாகும்.

"இதை (ஆதம் மலையை) ஆதிப்பெற்றோர் சாபம் பெற்றபின் வாழ்ந்த இடமெனக் கொள்வர் அராபியர். பூர்வ கிறிஸ்தவர்கள் ஆதம் ஏவாள் இவ்விடத்திற்செழித்து வளர்ந்த ஒரு தருவின் கனியைப் புசித்து, ஒரு விசாலித்த இலையை உடுத்தார்களென்றனர். இதன் சிகரத்துக்குச் செல்லும் பாதைகளுள் இலேசான பாதையை (ஆதாம் ஏறிச் சென்றதாதலால்) பிதாவின் பாதை என்றும் அழைப்பர்*.

## 8. சிந்து வெளி நாகரிகம்

சிந்து நதிப் பள்ளத்தாக்கில் அரப்பா, மொகஞ்சதரோரசன்னுதரோ முதலிய தமிழரின் பழைய நகரங்கள் புதைபொருள் ஆராய்ச்சியாளரா லகழ்ந்து கண்டு பிடிக்கப்

[15] "Man therefore most probably rose and grew in the comparatively narrow strip of coast between the jungle (Dandkaraniam) and the Indian ocean"—*Stone Age in India P. 3.*

"Since South India is in the centre of the diffusion area of palaeolithic stone industries and may have been their birth place, the same might be also true regarding the first beginning of the higher civilizations and................. Whether it was in South India, in Ceylon, or possibly in one of the farther South East Asian countries that the first world culture sharted we do not know. In this region, at any rate, we are on the soil which is quite likely to be the most ancient place of human civilization. Madras, as a symbol of a wider zone, though not as a city, may therefore well be considered as the possible birth place of a long enduring and wide-spread civilization in the earliest history of mankind"—*Madras, the oldest culture centre of the world—U. R. Ehrenfels Ph. D. The Hindu Sep. 4—1949.*

[16] Dr. Durbois discovered in 1894 in Java the bones of what then was considered to be the most primitive man a kind of missing link. The tropical origin of man has gained some support from tradition. The origin of man in Ceylon according to the old tradition is illustrated by the names, Adam's peak and Adam's Bridge. The Koran which places the paradise in the seventh heaven says that, "after the fall Adam descended to Ceylon and propagated the human race" It may also be noted that according to some old Javanese manuscripts recently published (Clarendon press) Brahmah, descendant of Adam went from Ceylon and colonised Java—The Aryans—*A Lecture by the Hon. Mr. K. Balasingam, 1920.*

* *இலங்கைச் சரித்திரம், பக்கம் 3—யோன்போதகர்*

This......is likely to prove that there was a grain of scientific truth in the simple belief of the first Arab pilgrims and traders who came to South India. Prof. S. M. Nainar accounts in his translation and commentary of Tuhfat-al Mujahidin that they visited Malabar on their way to the Adam's Peak where they hoped to worship the foot-prints of the "first prophet" or—*culture hero*, as a scintific language would put it—*Madras the oldest Culture* Centre *of the World—The Hindu Sep. 4—1949.*

பட்டுள்ளன[17]. அங்குக் காணப்பட்ட மாடிகளோடு கூடிய வீடுகள், வீதிகள், கோயில், குளங்கள், எழுத்துப் பொறித்த முத்திரைகள் ஆகியவற்றால் தமிழரின் வரலாற்றுக் காலத்திற்கு முற்பட்ட நாகரிகம் வெளிச்சத்துக்குக் கொண்டுவரப்பட்டிருக்கின்றது. அரப்பா, மொகஞ்சதரோ முதலிய நகரங்களில் வாழ்ந்த மக்களின் நாகரிகத்தை விளக்கும் மூன்று பெரிய நூல்கள் சர்ஜான் மார்ஷல் (Sir John Marshall) என்னும் ஆசிரியரால் வெளியிடப்பட்டுள்ளன. அந்நூலிற் காணும் பொருட் சுருக்கம் வருமாறு :

பழஞ்சரித்திர ஆராய்ச்சி நம்மை ஐயாயிரம் ஆண்டுகளுக்கு அப்பாற் கொண்டுபோய் விடுகின்றது. சிந்துநதியின் கிழக்குமேற்குப் பள்ளத்தாக்குகளையும், பலுச்சிஸ்தானத்தையும் நோக்குமிடத்து இந்தியா, சுமேரியாவோடும் *ஈலத்தோடும் தொடர்பும் ஒற்றுமையும் உடையதாய் இருந்திருக்கின்றது. இதற்கு ஆதாரமாகவுள்ள சின்னங்கள் பஞ்சாப்பிலும், சிந்துவிலும் மிகுதியாகக் காணப்படுகின்றன. பஞ்சாப்பிலுள்ள அரப்பாவென்னும் பழைய நகரின் அழிபாடு சிந்து நதியின் கீழ் ஊற்றுவரை அகழப்பட்டது. செல்வ வளம் பொருந்திய அழகிய நகரொன்று அவ்விடத்தில் ஐயாயிரம் ஆண்டுகளுக்குமுன் இருந்ததாக அறியப்படுகின்றது. எவ்வகை நாகரிகம் அங்கு நிலவியதென்று அறிதற்குரிய ஆதாரங்கள் கிடைத்திருக்கின்றன. நகர் செங்கல்லால் கட்டப்பட்டிருக்கின்றது. சுவர்கள் நில மட்டத்துக்கு மேல் செங்கல்லால் கட்டப்பட்டிருக்கின்றன. கீழ்த்தளம் முரடான செங்கல்லால் இடப்பட்டிருக்கின்றது. சில சுவர்கள் கற்களால் எடுக்கப்பட்டுள்ளன. மொகஞ்சதரோவிலும் அதன் சுற்றுடல்களிலும் கற்கள் கிடைப்பதரிது. வீதிகள் ஒழுங்காக அமைக்கப்பட்டிருக்கின்றன. வீடுகள் பெரும்பாலும் கிணறுடையனவாகவிருக்கின்றன. கிணறுகளின் ஊற்றுக்கள் ஆற்றினின்றும் வந்தன. குளிக்கும் அறைகளோடுகூடிய வீடுகள் பல காணப்படுகின்றன. வீடுகளின் அழுக்குநீர் வெளியே கழிவதற்குச் செங்கற்பதித்த வாய்க்கால்கள் இருந்தன. வாய்க்கால்கள் வீதியில் முடிவெய்தின. வீதியில் கழிவுநீர் செல்வதற்கு செங்கற்பதித்த வாய்க்கால்களிருந்தன. இவ் வாய்க்கால்கள் நகருக்கு வெளியே செல்லவில்லை. வீட்டுக் கூரையின் நாற்புறத்துமுள்ள அழுக்குகள் பீலிவழியாக வந்து தொட்டியில் விழக்கூடியதாகக் கூரைகளுக்குப் பீலிகள் அமைக்கப் பட்டிருந்தன. வீடுகள் மாடிகளோடு கூடியனவாகவிருக்கின்றன. மாடிக்குச் செல்லும் படிகள் அழகாகக் கட்டப் பெற்றிருக்கின்றன. வீடுகளின் அமைப்பைக்கொண்டு அந்நகரம் மிகச் சிறப்புற்றிருந்ததெனத் தெரிகின்றது. மெசபெதேமியா இம்முறையில் ஒத்திருக்கவில்லை. அங்குள்ள சாதாரண வீடுகள் கீழான நிலைமையில் இருந்தன. சிறு குடிசைகள் இன்றேல் அரண்மனைகள் போன்ற மாளிகைகளே அங்குக் காணப்பட்டன.

மொகஞ்சதரோவில் வீடுகளல்லாத பெரிய கட்டிடங்களும் காணப்படுகின்றன. அவற்றின் பயன் யாதென்று துணிந்து கூறமுடியாது. ஒருபோது அவை வழிபாட்டுக்குரிய இடங்களாகவிருக்கலாம். சாந்தினால் மெழுகப்பட்ட கட்டடமொன்று சிறப்பாக அவ்விடத்திற் காணப்படுகின்றது. இஃது ஒருபோது அரசாங்க சபை கூடும் இடமாகவிருக்கலாம் அழகிய கட்டடங்களோடு கூடிய கேணி

[17] As Marshall believes Mohenjo-Daro represents the oldest of all Civilizations known. But the exhuming of prehistoric India has just begun; only in our time has archaeology turned from Egypt across Mesopotamia to India. When the soil of India has been turned up like that of Egypt we shall probably find there a civilization older than that which flowered out of the mud of Nile—*The Story of Civilization* p. 396—*Will Durant* (*New York*—*1954*).

* சுமேரியாவுக்குக் கிழக்கிலிருந்த நாடு

ஒன்றும் அவ்விடத்திற் காணப்படுகின்றது. இது மக்கள் நீராடுதற்கு அமைக்கப்பட்டதாக இருக்கலாம்.

அங்கு வாழ்ந்த மக்களின் வாழ்க்கை முறைகளையும், பழக்க வழக்கங்களையும் அறிந்து கொள்ளக்கூடிய சின்னங்கள் பல காணப்படுகின்றன. கோதுமையும், வாற்கோதுமையும் அங்குப் பயிர் செய்யப்பட்டன. உணவின் பொருட்டு மக்கள் ஆடுமாடுகளையும், கோழிகளையும் வளர்த்தார்கள். உணவின் பொருட்டு மக்கள் ஆற்றுமீனைப் பயன்படுத்தினர். பழைய ஆரியர் இவ்வுணவிற் கருத்துச் செலுத்தினர்களெனத் தெரியவில்லை. பல விலங்குகளின் என்புக்கூடுகள் அங்குக் காணப்பட்டன. அவற்றால், எருமை, ஒட்டகம், யானை, பலவகை மானினங்கள் அங்கு வாழ்ந்தனவென்று தெரிகின்றது. யூனிகாண் (unicorn) என்னும் ஒரு கொம்புடைய குதிரையும் அங்கு வாழ்ந்ததாகத் தெரிகின்றது. புலி, குரங்கு, முயல் முதலிய விலங்குகளின் உருவங்கள் கல்முத்திரைகளிற் காணப்படுகின்றன. இதனால் அங்குள்ள மக்கள் இவ்விலங்குகளை அறிந்திருந்தார்களெனத் தெரிகிறது.

மொகஞ்சதரோவிலுள்ள மக்கள், பொன், வெள்ளி, செம்பு, ஈயம் முதலியவற்றாற் செய்த பட்டையங்களைப் பயன்படுத்தினர். அவர்கள் வெள்ளியின் பயனை நன்கறிந்திருந்தனர். இருக்கு வேதகால ஆரியர் வெள்ளியை அறியார். வெள்ளியை அறிந்த காலத்து அவர் அதனை ‘வெண்பொன்’ என வழங்கினர். அவர்கள் சாதாரண ஆபரணங்களையும், பானை, சட்டிகளையும் செம்பினாற் செய்து பயன்படுத்தினர். எலும்பு, ஆனைத்தந்தம், சிப்பி, மணி ஆகியன அணிகலன்களாகப் பயன்படுத்தப்பட்டன. நீலநிறக் கண்ணாடியாற் செய்த கைவளைகளும் காணப்பட்டன. கம்பளியாலும், பஞ்சாலும் ஆடைகள் நெய்யப்பட்டன. நூல்நூற்கும் கதிர்கள் காணப்படுகின்றன.

ஈட்டி, கோடரி, குறுவாள், வில், கவண் முதலியன அவர்கள் பயன்படுத்திய போர்க் கருவிகளாகும். கவணில்



வைத்தெறியும் உருண்டைக்கற்கள் மிகப் பல காணப்படுகின்றன. வாளும், தற்காப்புக்குரிய ஆயுதங்களும் இருந்தன. மட்பாண்டங்கள் திரிகையிற் செய்யப்பட்டன. வழுவழுப்பான நிறம் பூசிய பானை சட்டிகளும் காணப்பட்டன.

சிறுவர் விளையாடுவதற்கேற்ற விளையாட்டுப் பொருள்கள் பெரிதும் காணப்படுகின்றன. அக்காலத்து ஒவ்வொரு பிள்ளையும் ஒவ்வொரு விளையாட்டுப் பொருளை வைத்திருந்தது எனத் தெரிகின்றது. கிலுகிலுப்பை, பாவை, ஊதுகுழல், சிறுவண்டிகள் ஆகியன விளையாட்டுப் பொருள்களிற் சில. அக்கால விளையாட்டு வண்டிகளைப் போல இக்காலம் சிந்து நாடுகளில் பயன்படுத்தும் வண்டிகள் காணப்படுகின்றன.

அங்குக் கண்டெடுக்கப்பட்ட பொருள்களுள் அக்கால வழக்கிலிருந்த ஓவிய எழுத்துகள் பொறித்த கல்முத்திரைகள் முக்கியமானவை. அவை சுமேரிய மொழிக்குரியனவாயிருக்கலாம். சுமேரிய மொழிக்கும், இம்மொழிக்கும் பொதுவான ஒரு தொடக்கம் இருத்தலுங்கூடும். மாடு, எருமை, ஒற்றைக் கொம்புள்ள குதிரை முதலியவற்றின் ஓவியங்கள் கல்முத்திரைகளிற் காணப்படுகின்றன. இவை அக்கால மக்களின் ஓவியம் வரையும் திறமையைக் காட்டுகின்றன. முத்திரைகளிற் காணப்படும் எழுத்துக்களைப் போன்றவை சட்டி பானைகளிலும் காணப்படுகின்றன. அவ்வெழுத்துகள் இன்னும் வாசிக்கப்படவில்லை. எழுத்துக்குப் பதில் பயன்படுத்தப்பட்ட சில குறிகளே அவ்வெழுத்துகளாகும். ஒவ்வொரு குறியும் ஒவ்வொரு சொல்லைக் குறிக்கும். சீனரின் எழுத்தெழுதும் முறை இதனோடு ஒத்திருக்கிறது. ஒரு மரத்திற் பிரிந்த இரண்டு கிளைகளுள் ஒன்று இவ்வெழுத்தும் மற்றது சீன எழுத்துமாயிருக்கலாம். அரப்பாவில் பயன்படுத்தப்பட்ட எழுத்துக்கள் முற்றாக மறைந்துவிட்டன. இவ்வெழுத்தைக் குறித்துப் பலவகையாக ஊகிப்பது பயனற்றது. அம்மொழி சமக்கிருதமன்று எனத்

தீர்மானமாகக் கூறலாம். அது திராவிடமொழியோவென்பது சந்தேகம். முத்திரைகளில் ஓவியங்களைப் பொறிப்பதில் மாத்திரமன்று; சிற்பத் தொழிலிலும் அம்மக்கள் திறமை அடைந்திருந்தனர். செங்கல்லினுற் செய்த தலையில்லாத மனிதச் சிலை ஒன்று அங்குக் கண்டெடுக்கப்பட்டது. அது கிரேக்கரின் கைவேலை என்று முதலிற் கருதப்பட்டது. கிரேக்கர் வருகைக்கு இரண்டாயிரத்தைந்நூறு வருடங்களுக்கு முற்பட்டது இச்சிலை என்று இக்காலம் நன்றுகத் துணியப்படுகின்றது[18].

அக்கால மக்களின் சமயமும் ஒருவாறு அறியப்படுகின்றது. சத்தி வழிபாடே பெரும்பாலும் மக்களுக்குரியதாயிருந்தது. பழங்கால வழிபாடு பெரும்பாலும் இவ்வகையினதே. மூன்று முகங்களுடைய தெய்வத்தின் வடிவம் ஒன்று காணப்படுகின்றது. இது சிவன் சிலையாகும். பிற்காலத்து வந்த ஆரியர் சிவனையும் தமது தெய்வங்களோடு சேர்த்துக்கொண்டனரென்பதில் ஐயம் இல்லை. விலங்குகளையும், மரங்களையும் மக்கள் வழிபட்டனர். இறந்தவர்களைச் சுடுதலும், புதைத்தலும் அக்கால வழக்கு.

சிந்து ஆற்றுப் பள்ளத்தாக்கின் நாகரிகம் ஈலம், மெசபெதேமியா முதலிய நாடுகளின் நாகரிகத்தோடு

---

[18] A statue carved in red sand stone was found (at Harappa) of a boy of such exquisite workmanship, and such complete competence that at first sight might be mistaken for good Greek work of the fourth century B.C. Yet from the context in which it was found it seems that it must certainly belong to the 3rd millennium. Here is an artistic majesty of the first order which can only be explained by further discovery. Finds of this nature show that the progress of art is not comparable to the progress of history. Indians may prove to have been the earliest naturalistic sculptors in the East—*Progress of archaeology p. 35—Stanley Casson.*



ஒற்றுமையுடையது. கல்லாயுதங்களுக்குப் பின்வந்த உலோக ஆயுதங்கள் பெரிதும் பயன்படுத்தப்பட்டாலும் அக்காலம் கல்லாயுதங்கள் முற்றுக மறைந்து போகவில்லை. பழைய நாகரிகத்துக்கும், கலை வளர்ச்சிக்கும் அறிகுறியாகச் சிந்து ஆற்றுப் பள்ளத்தாக்கிற் காணப்பட்ட முத்திரை போன்ற பொருள்கள் ஈலத்திலும் காணப்பட்டன. இவ்விரண்டு நாடுகளுக்கு மிடையே போக்குவரத்திருந்ததென்றறியப் பிற ஆதாரங்களுமுள்ளன. மெசபெதேமியாவின் பழைய வரலாற்றுல், மொகஞ்சதரோவின் நாகரிகம் கி.மு. 3000 ஆண்டுகளுக்கு முற்பட்டதென்று நாட்டலாம். இந்நாகரிகம் கங்கைக்கரை வரை பரந்திருந்ததோ என்பது ஐயத்துக் கிடமானது. மேற் கூறப்பட்ட இந்திய மக்களின் காலம் இருக்கு வேதகாலத்துக்கு முந்தியது. ஆரியர், ஆடுமாடுகளுடன் இடம் விட்டு இடம் பெயரும் கூட்டத்தவராயிருந்தனர். இந்திய பூர்வ குடிகளோடு ஓயாத போர் புரிந்து கொண்டிருந்தமையால், அவர்கள் மொகஞ்சதரோ போன்ற பலமான ஒரு நகரை அமைத்திருக்க மாட்டார்கள். மொகஞ்சதரோவிலுள்ளவர்கள் குதிரையை அறியாதவர்களாயிருந்திருக்கலாம். வேதகால இந்தியர் குதிரையை நன்கு அறிந்திருந்தனர். இருவகையினரும் அறிந்திருந்த உலோக வகைகள் வேறு வேருனவை. மொகஞ்சதரோ மக்களின் நாகரிகம் வேதகாலத்தோடு சிறிதும் தொடர்பு படாதது[19].

**மொகஞ்சதரோ, அரப்பா என்னும் பழைய நகரங்களின் நாகரிகத்தை நன்கு ஆராய்ந்தவரும், மொகஞ்சதரோ எழுத்துகள் பலவற்றை வாசித்தவருமாகிய ஹெரஸ் பாதிரியார் கூற்று:**

பிற்கால இந்தியர் மேற்குப் புறமாகச் சென்று, மெசபெதேமியாவின் தென் கோடியிற் குடியேறிச் சுமேரியர் என்னுஞ் சாதியாராயினர்.

---

[19] The Cambridge Shorter History of India—Allan, M.A. PP. 2-6.

[24]யோகத்தில் வீற்றிருக்கும் பாவனையுடைய மூன்று முகங்களுடைய நிர்வாணமான கடவுளின் சிலை ஒன்று காணப்படுகின்றது. அதன் தலையில் முடிகள் காணப்படுகின்றன. இச்சிலையைச் சூழ்ந்து பலவிலங்குகளின் உருவங்கள் காணப்படுகின்றன. இக்கடவுள் பசுபதி என்னும் பெயர் பெறுவர்.

'ஆண்' என்னும் கடவுள் மற்றைக் கடவுளருக்குத் தலைவராகக் காணப்படுகின்றார். "ஆண்" என்னும் பெயருக்குரியவர் ஞாயிறு எனத் தெரிகின்றது. ஞாயிறு ஒவ்வோர் மாதமும் ஒவ்வோர் வீட்டில் தங்கும். ஒவ்வொரு வீட்டில் தங்கும்போதும் ஞாயிற்றினுடைய வடிவம் வெவ்வேறாகக் கொள்ளப்பட்டது. ஞாயிறு தங்கும் வீடுகள் எட்டு. ஆகவே அக்காலம் எட்டு மாதங்களும், ஒரு மாதத்தில் நாற்

[24] "A nude three-faced God seated in a sort of yoga pose wearing crescent-like head gear. Round this figure several figures are placed. It has been said this is a figure of Pasupathi. An (ஆண்) is supposed to be the highest God, the God of heaven; in fact he is, as we shall see later on, identified with the Sun. Now the sun in the course of the year travels through the constellations of the Zodiac, which were called houses. Accordingly each month of the sun being in a different house, the Sun was supposed to take a different form and since the constellations of Proto-India as said above were only eight, the forms of the Sun, *i.e.*, the Supreme Being, were eight. The eight forms of the Supreme Being were the eight constellations which were the following: The Ram, the Harp, the Crab, the Mother, the Scale, the Arrow, the Jar and the Fish or the two fishes. Images of the Supreme Being under these forms were worshipped in different parts of the country. The most popular of these forms of God seems to have been fish. Several inscriptions refer to this."



பத்தைந்து நாட்களுமிருந்தன. பழைய இந்தியர், கடவுளுக்கு எட்டு வடிவம் உண்டு எனக்கருதினர். எட்டு இராசிகளாவன: ஆடு, நண்டு, சிங்கம், கன்னி, துலாம், குடம், மீன், யாழ் என்பனவாம். இவ்வடிவங்களைக் கடவுளராக வைத்து மக்கள் வழிபட்டனர். இவ்வடிவங்களுள் மீன் மிகப் புகழ் பெற்றது. சாசனங்களிற் பலவற்றில் இப் பெயர் காணப்படுகிறது. தற்காலச் சிவனுடைய வடிவம் சாசனங்களில் தெளிவாகச் சொல்லப்படுகிறது. சிவனுக்கு மூன்று கண்களுண்டென்றும், அக்கண்கள் தனித்தனி வழிபடப் பட்டனவென்றும் சாசனங்கள் கூறுகின்றன.* கடவுள் அரசனாகவும், அரசன் கடவுளுக்குப் பதில் அவன் ஆணையை ஏற்று நடத்துபவனாகவும் கருதப்பட்டான். கடவுளுக்கு இறுவன் என்னும் பெயர் காணப்படுகின்றது. ஒரு சாசனத்தில் "தாண்டவன் இர்நால் மரம்." என்று காணப்படுகின்றது. இதற்குத் தாண்டவஞ் செய்யுங் கடவுளென்பது பொருள்.

முத்திரைகளிலிருந்து வாசிக்கப்பட்டவற்றுள் சில சொற்கள், யாழ், காய், வேல், காளைள், எண் ஆள், எண்மை (சிவன்), கலக்கு, நண்டு, நண்டூர், வேலூர், உழவன், அது, ஆண்டு, குட, குடவு, தடு, ஒட்டு, குட்டை, உதவு, அடு, அன்று, மாறு, அரி, முகில், மழைமுகில் முதலியன. 'கோயில் எல்லாக் கடவுள் அது' என ஓர் சாசனத்திற் காணப்படுகின்றது. 'கோயிலிலுள்ள கடவுள் எல்லோரிலும் பெரிய கடவுள்' என்பது இதன் பொருள். முத்திரைகளில் குறள் வெண்பாவினாலாய பாடல்கள் பல காணப்படு

*"This is the idea about Siva of modern Hinduism which we find clearly expressed with reference to God in the inscriptions of the Proto-Indians and the idea was so well known of these three eyes as we find in two inscriptions revealed to those people the idea of the Supreme Being. The three eyes were worshipped.—*Rev. Father Heras.*

கின்றன. அக்கால எழுதும் முறை வலது புறத்தினின்று இடது புறத்தே சென்று, பின் இடது புறத்தினின்றும் வலப் புறமாகச் செல்வதாகும்.

[21] வட இந்தியாவிலும் தென்னிந்தியாவிலும் வழங்கிய பிராமி எழுத்துக்கள், மொகஞ்சதரோ எழுத்துகளினின் றும் வளர்ச்சியடைந்தவை. தென்னிந்திய திராவிடர்களு டைய எழுத்து மொகஞ்சதரோ எழுத்தை நேரே பின்பற்

[21] The two Brahmi scripts, one of Northern and the other of Southern India, are developments of the Mohenjodaro script; that of the South India is the continuation and development of the Mohenjodaro script of the Dravidian people of South India. Several signs of the Mohenjodaro script are found in the pre-historic pottery of the Tinnevelly District, in rock inscriptions of the Nilgiris, and tombs in the Hyderabad state. The north Brahmi is not the natural continuation of the Mohenjodaro script. This script was adopted by the incoming Aryans who did not know any writing at the time of their invasion. The Brahmi script of Asoka is the Mohenjodaro script as developed by the Aryas. This is the difference between them which never the less reveal obvious similarities with our signs. In this connection, it may be pointed out that one at least of the signs of Mohenjodaro seems to be direct ancestor of one of the letters of the Tamil alphabet.

"Being Dravidians, the inhabitants of Mohenjodaro and Northern India naturally spoke a Dravidian language, yet this language was not one of the Dravidian languages now spoken in India, but probably their parent, which may be called Proto-Dravidian. The largest proportion of the words used in the Proto-Dravidian are also found in Tamil. This confirms the common belief that Tamil is the oldest of the present languages—*Light of the Mohenjodaro riddle-H. Heras.—The New Review, Vol. IV. No. 19.*



றியது. திருநெல்வேலியிற் கிடைத்த சரித்திரகாலத்துக்கு முற்பட்ட பானை சட்டிகளிலும், நீலகிரி மலையில் வெட்டப் பட்டுள்ள சாசனங்களிலும், ஹைதராபாத் சமாதிகளிலும் இவ்வெழுத்து காணப்படுகிறது.

வடபிராமி எழுத்துகள் மொகஞ்சதரோ எழுத்துகளின் நேர் தொடர்பான எழுத்துகளல்ல. எழுத்துகளைப்பற்றி அறியாத ஆரியர் இவ்வெழுத்தைப் பயன்படுத்தியிருக்கின் றனர். அசோக பிராமி எழுத்து ஆரியர் கையாண்ட முறை யைப் பின்பற்றி எழுதப்பட்டது. இவ்விரண்டிற்கும் இடையே உள்ள வேற்றுமை இதுவே. இவை யாம் காட்டிய எழுத்தின் அடையாளங்களோடு தெளிவான ஒற்றுமையைக் காட்டு கின்றன. இச்சந்தர்ப்பத்தில் தமிழ் எழுத்து மொகஞ்சதரோ எழுத்தினின்றும் தோன்றிற்றெனக் கூறலாம். மற்ற மொழி களிற் காணப்படாதனவும் தமிழிற் காணப்படுவனவுமாகிய ழ, ற, போன்ற ஒலிகளைக் குறிக்கப் பழைய பிராமியில் எழுத்துகள் இருந்தனவெனப்படுதலின் பிராமி எழுத்தைச் செய்தவர்கள் தமிழரே எனக்கருதப்படுவர்.*

மொகஞ்சதரோவிலுள்ளோர் திராவிடராயிருந்தமையின் வடஇந்தியாவிலுள்ளவர்கள் தமிழையே பேசினர்கள். ஆனல், அம்மொழி இப்பொழுது இந்தியாவில் வழங்கும் திராவிட மொழியாகத் தெரியவில்லை.

சிந்து நதிப் பள்ளத்தாக்கில் கிடைத்த சில சாசனங் களில் காணப்பட்ட வானநூற் குறிப்பைக் கொண்டு

*Though the script of these inscriptions is Brahmi of the southern variety, the language employed in many of them is Tamil in its formatic stages. The writing was alphabetic and already included signs for peculiarly Dravidian sounds like *ற, ழ, ள, ண*. Other notable features are that vocalic consonants were presented by two symbols; first the sign of the consonent and then the complete vowel sign—*A History of South India—p. 87. K. N. Sastri.*

மொகஞ்சதரோ முதலிய நகரங்களின் நாகரிகம் கி. மு. 5,610 ஆண்டுகளுக்கு முற்பட்டதென ஹெரஸ் பாதிரியார் கூறுவர். மனிதன் பூமியில் தோன்றி, ஆயுதங்களின் பயனை அறிவதற்குப் பல்லாயிரம் ஆண்டுகள் சென்றிருக்கவேண்டு மென்றும், உலோகத்தின் பயனை அறிந்து ஆயுதங்கள் செய்யப் பழகிக் கற்காலத்தினின்றும் உலோக காலத்துக்கு வருவதற்கு இருபதினாயிரம்[22] அல்லது ஒரு இலட்சம் ஆண்டுகள் சென்றிருக்க வேண்டுமென்றும் மக்கள் நூலார் கூறுவர். சிந்து வெளி நாகரிகம் கற்காலத்தின் அந்தமும் உலோக காலத்தின் தொடக்கமுமாகிய காலமெனத் தெரி கின்றது. ஆகவே, அம்மக்கள் கற்கால நாகரிகத்தில் அங்கு குறைந்தது இருபதினாயிரம் ஆண்டுகளாவது வாழ்ந்தார் களாதல் வேண்டும்.

சிந்து நதி தீரத்து நாகரிகம் வேறெவ்விடத்தேனு மிருந்து வந்ததென்று கூறுவதற்கு ஒரு காரணமுமில்லை எனச் சர் ஜான் மார்ஷல் என்னும் ஆசிரியர் கூறுவர்.[23]

---

[22] "Some geologists have suggested twenty thousand years while others say 'a hundred thousand or more'—Anthropology p. 25 Sir E. B. Taylor Kt.

[23] "There is no reason to assume that the culture of this region was imported from other lands or that its character was profoundly modified by outside influences"—Sir John Marshall.

Never for a moment was it imagined that, five thousand years ago before even the Aryans were heard of, the Punjab and Sind, if not other parts of India as well, were enjoying an advanced and singularly uniform civilization of their own, closely akin, but in some respects even superior, to that of contemporary Mesopotamia and Egypt—*Mohenjodaro and Indus Civilization—Ibid.*



ஆரியர் இந்தியாவை அடைவதன் முன் சிந்து நாட்டிலும், இந்தியாவின் மறு இடங்களிலும் வாழ்ந்தோர் மெசபெதேமியா, எகிப்து முதலிய நாடுகளின் நாகரிகத் தோடு ஒற்றுமையுடையதும், சிலவகையில் அவையிற்றிலும் மேலானதுமான நாகரிகம் பெற்றிருந்தார்கள் என மேற்படி ஆசிரியர் கூறுகின்றனர்.

ரிஸ்லி என்னும் ஆசிரியர், திராவிடரே இந்திய பழங் குடிகளென்றும், இந்தியாவினின்றும் சென்ற மெசபெ தேமிய நாகரிகம் செமித்திய நாகரிகத்துக்கு அடிப்படை யாகவிருந்த தென்றுங் கூறுவர்[24].

சிந்து வெளி நாகாரிகத்தைக் கொண்டு தமிழர் வட இந்தியாவினின்றும் தெற்கே போந்தார்களெனச் சொல்லப் படுகின்றது. சிந்து நாகரிக காலத்தில் இந்தியா முழுமையி லும் ஒரே வகைப் பழக்க வழக்கமுடைய மக்கள் வாழ்ந் திருக்கிறார்கள். மொகஞ்சதரோ நாகரிகத்தின் ஆரம்ப காலம் கி. மு. 10,000 எனக் கூறுவர் தேயிலர் என்னும் ஆசிரியர்.

## சுமேரியரும் தமிழரும்

ஆராய்ச்சிகள், சுமேரியர் இந்தியாவை அடைந்து தமிழர் ஆயினர்; அல்லது தமிழர் சுமேரியாவை அடைந்து சுமேரியராயினர் என்னும் கொள்கைக்குக் கொண்டு வந்து விடுகின்றன.

சுமேரியா ஒரு சிறு நாடு, அங்கு வாழ்ந்த மக்கள் சுமேரியாவின் அயல்நாடுகளில் வாழ்ந்தவர்களைவிட உடற் கூற்றாலும், மொழியாலும் வேறுபட்டவர்கள். சுமேரியர்

---

[24] "The Dravidians were original inhabitants of the Indian Peninsula and they developed a civilization which was taken to Mesopotamia and formed the basis of Semitic civilization"—H. Risley.—*People of India.*

இந்தியாவுக்கு வந்து குடியேறினராயின் அவர் தமக்கு அயலே உள்ள நாடுகளிற் குடியேறிய பின்னரே வேறுநாடுகளுக்குச் சென்றிருக்கவேண்டும். அவர்கள் அவ்வாறு சுமேரியாவுக்கு அடுத்த நாடுகளிற்சென்று குடியேறியவர்களாகக் காணாமையின், வேறு நாடுகளினின்றும் போந்தவரே சுமேரியர் என்று புலப்படுகின்றது.

[25]மெசபெதேமியாவுக்கும், இந்தியாவுக்கும் சிந்து நாகரிக காலத்தே நெருங்கிய தொடர்பிருந்ததாகத் தெரிகிறது. பேராசிரியர் ஹென்றி பிராங்போட் என்பார் அண்மையில் பாக்டாட்டுக்குச் சமீபத்திலுள்ள டெல் அக்ராப் என்னுமிடத்தில் அகழ்ந்து கண்டுபிடித்த மட்பாண்டங்களையும் பிறவற்றையும் கொண்டு இந்து சுமேரிய தொடர்பை நன்கு விளக்கியிருக்கின்றார்.

---

[25] "We have no evidence that animals were worshipped in Mesopotamia, yet the contemporary civilization of India supplies ample evidence that this was so in the country. Thus we may have here more link in the (as yet) incompletely dicovered claim of similarities connecting the early culture of Mesopotamia with that of the Indus Valley —Dr. Frankfort, field director of the Iraq expedition of the Oriental Institute of the University of Chicago—*The Illustrated London News—Nov. 6th 1937.*

"Prof. Frankfort emphasises the importance the Sumerians evidently attached to cattle and hints at the possibility of bull worship. In connection with a vase design, including a bull......showing a humped bull of Indian type unknown in Mesopotamia...he said that, although no scene of animal worship had yet been found on Mesopotamian sites, it was a common motive of ancient Indian seal stones. 'Our vase fragments he added put the problem of Indo—Sumerian connections on entirely new basis—*Ibid.*



## வரலாற்றுக்கு முந்திய தென்னிந்திய சமாதிகள்

தென்னிந்தியாவில் சித்தூருக்கு வடகிழக்கே மூன்றரை மைல் தூரத்தில் பாண்டுவரம், தேவால் என்னும் சமாதிகள் காணப்படுகின்றன. சமாதியின் உட்புறம், கீழே ஒரு கருங் கற்றகடும், நாற்புறங்களில் ஒவ்வோர் கல்தகடும் மேற்புறத்தில் ஓர் கருங்கல்தகடுமாக ஆறு கருங்கற்றகடுகள் அடங்கியதாய்க் காணப்பெறுகின்றது.* மேலே மூடியிருக்கும் கல்லின் நடுவே மனிதனின் பிணம் நுழையக் கூடிய வட்டமான துவாரம் காணப்படுகின்றது. அத்துவாரம் வழியாகப் பிணங்களை உள்ளேயிட்டு, மூன்று அல்லது நாலு அடி உயரத்துக்கு மண்ணால் மூடிவிடுவது அக்கால வழக்கமாயிருந்தது. மண்ணினால் செய்த நீண்ட தாழிகளில் பிணங்களை வைத்து அடக்கஞ் செய்வதும் அக்காலவழக்கு. இவ்வகைத் தாழிகளும் அங்குக் காணப்பட்டன. பிணப் பெட்டியின் வடிவுள்ள அத்தாழிகளுள் மனித எலும்பும், வைரமான மண்ணாலும், மண்ணோட ஓட்டின் துண்டுகளும், சிறிய மண்பானை, சட்டிகளும், பழங்கால ஈட்டியின் அலகு, வாள் முதலியனவும் கண்டெடுக்கப்பட்டன. பானை, சட்டி

---

*ஈமத்தாழிகள் புதைக்கப்பட்ட இடத்தைச் சுற்றிப் பெருங் கற்களை வட்ட வடிவில் நிறுத்தி உட்புறத்தே கற்களைக் குவித்துவிடுதல் அக்கால வழக்கு. கல்வட்டம் கற்கிடை எனப்படும். கல்வட்டங்களோடு கல்குவிக்கப்பட்ட இடங்கள் Cairns என ஆங்கிலத்தில் வழங்கும்; கற்கிடையினுள் சுமைதாங்கி வடிவில் மூன்று கற்களை நிறுத்தி மேல் ஒரு கல் வைக்கப்பட்ட அடக்கம் பாண்டவக் குழி (Dolmen) எனப்படும். சவப்பெட்டி போன்ற கற்கட்டு அமைப்பை (குரக்குப் படையை) சுற்றித் தரைமட்டத்தின்மேல் கற்கிடையும் அதனுள் கற்குவியலும் உள்ள இடம் தாழ்வயின் (Cist) எனப்படும். அடக்கத்தின்மேல் கற்கிடையும் பாண்டவக் குழியும் அமைத்து பாண்டவக் குழியின் பாவுகல்லின்மேல் கற்குவிக்கப்பட்ட அடக்கமும் உண்டு. இது Dolmenoid Cist எனப்படும்.

கள் அழகிய வடிவமுடையனவாய்க் காணப்படுகின்றன. இச்சாமதிகளை உண்டு பண்ணினோர் இரும்பின் பயனை நன்கு அறிந்திருந்தார்கள்.

திருநெல்வேலிக்குப் பதினைந்து மைல் கிழக்கில் பழைய இடுகாடொன்று காணப்படுகின்றது. தாழிகளுள் வைத்துப் புதைக்கப்பட்ட எலும்புகள் அங்கு காணப்படுகின்றன. பிணங்களின் ஒவ்வோர் உறுப்பு மாத்திரம் தாழிகளுட் காணப்படுதலின் அக்காலத்தில் பிணங்களைச் சுடும் வழக்கும் இருந்ததென்று கருதப்படுகின்றது. தாழிகளின் வாய்கள் பிணங்களை உள்ளே இடமுடியாத ஒடுக்கமுடையனவாய்க் காணப்படுகின்றன. பொற்றகட்டால் செய்த முட்டை வடிவுடைய இலைகள் கோத்த நெற்றியிலணியும் பொன்மாலை ஒன்று கண்டெடுக்கப்பட்டது. கண்டெடுக்கப்பட்டவற்றுள் இரும்பினால் செய்யப்பட்டவை: வாள், குத்துவாள், ஈட்டியின் அலகு, அம்பின் அலகு முதலியன. வெண்கலப் பொருள்கள்: பாத்திரம், மோதிரம், காப்பு, மாலை முதலியன. வெண்கலத்தாற் செய்யப்பட்ட பொருள்கள் அழகிய வேலைப்பாட்டோடு கூடியனவாய்க் காணப்படுகின்றன. இவ்வுலோகத்தாற் செய்த வளைந்த கொம்புடைய எருமைகளும், பசுக்களும் காணப்படுகின்றன. இவையன்றி எலும்புகளும், கல்லாயுதங்களும் தாழிகளுள் காணப்பட்டன.

மேட்டுப்பாளையத்துக்கு எட்டு மைல் தூரத்திலுள்ள சிறுமுகை என்னும் கிராமத்தில் அகழ்ந்தெடுத்த தாழிகள் நாலடி உயரமும், இரண்டரையடி குறுக்களவும் உடையனவாக இருக்கின்றன. இத்தாழிகளுக்குள், மண்டை ஓடு, எலும்பு, மணி, கல்துண்டு, தண்ணீர் குடிக்கும் பாத்திரம், சோறுண்ணும் பாத்திரம், இரும்பாயுதம், சிறிய பானை சட்டிகள் முதலியன காணப்பட்டன. பானை, சட்டிகள் நல்ல முறையில் செய்யப்பட்டிருக்கின்றன. சில பானை சட்டிகள் வழுவழுப்பான கறுப்பு நிறம் பூசப்பெற்றனவாக இருக்கின்றன. இங்கு காணப்பட்ட நாலுகாலுடைய தாழிகளைப் போன்றன பெரும்பயர், பல்லாவரம் என்னும் இடங்களிற் காணப்பட்டன.



ஆதிச்சநல்லூர்ச் சமாதிகளில் கிடைத்த மண்டையோடு தமிழனது மண்டையோட்டின் அளவுக்குச் சமமாக இருக்கின்றது. இந்தியாவில் காணப்படும் வரலாற்றுக்கு முற்பட்ட சமாதிகள் பிரிட்டன், பிரான்ஸ், மத்திய ஜெர்மனி, ஸ்காந்திநேவியா, சார்டினியா, சீரியா, காகேசஸ் முதலிய விடங்களில் காணப்பட்ட சமாதிகளை ஒத்திருக்கின்றன.[26]

## இந்திய மொழி

[27] "தாம் புதிதாக வந்த வட இந்தியாவில் தமது மொழியை நாட்டுவதில் ஆரியர் சித்தியடைந்தது போலத்

---

[26] J. B. Brown.—Quoted in 'The Stone Age in India —P. 42.

[27] It is indeed strange how the Aryans failed to supplant the Dravidian speech in the southern part of India, though it most successfully did in North India, where I have no doubt the Dravidian language prevailed before the advent of the Aryans. This will be seen from the fact that Bruhi the language of the mountaineers in the Khanship of Kelat in Baluchistam contains not only some Dravidian words, but a considerable infusion of distinctively Dravidian forms and ideas......It is also a well-known fact accepted by all scholars that there are many Sanskrit words which are all Dravidian and this will confirm the conclusion that the Dravidian tongue was prevalent in North India before the Aryans came and occupied it. The same conclusion is forced upon us by an examination of all vernaculars of North India. No reasonable doubt can therefore be entertained as to the Dravidian...........speech once being spoken in North India—*Lecture in the Ancient History of*

தென்னிந்தியாவில் சித்தி எய்தாதிருந்தது ஆச்சரியப் படத் தக்கதே. (ஆரியர் வருகைக்கு முன் வட இந்தியாவில் வழங்கிய மொழி) தமிழ் என்பதில் எனக்குச் சிறிது கூடச் சந்தேகமில்லை. பலுசிஸ்தானத்திலுள்ள மலைச் சாதியாரின் மொழியில் தமிழ்ச் சொற்கள் மாத்திரமல்ல, அவைகளின் சொல் வடிவங்களும் கருத்துக்களும் செறிந்திருப்பதைத் தெளிவாகக் காணலாம். அநேக சமக்கிருதபதங்கள் தமிழ்ச் சொற்களாக இருத்தலை ஆராய்ச்சிக்காரர் ஒப்புக் கொள்ளுகின்றனர். ஆரியர் வந்து வட இந்தியாவில் குடியேறுவதன் முன் அங்கு வழங்கிய மொழி தமிழ் என்பதை இது வலியுறுத்துகின்றது. வட இந்தியாவில் இப்போது வழங்கும் மொழிகளை ஆராயுமிடத்து இம்முடிவே ஏற்படுகின்றது. வடஇந்தியாவில் ஆதியில் தமிழ் வழங்கிற்று என்று சொல்வதற்கு மாறான சந்தேகம் எதுவும் இருப்பதாகத் தெரியவில்லை எனப் போராசிரியர் எம். டி. பண்டார்க்கர் கூறுவர்.

தற்காலம் வட இந்தியாவில் வழங்கும் சமக்கிருத சம்பந்தமுடையன வென்று கருதப்படும் மொழிகள் இலக்கண அமைப்பிலும், வசன ஒழுங்கிலும் திராவிட மொழியை ஒத்திருக்கின்றன. திராவிட மொழியிலுள்ள வசனங்களை வட இந்திய மொழிகள் எவற்றிலேனும் அம்மொழிச் சொற்களைச் சொல்லுக்குச் சொல் வைத்து மொழி பெயர்த்தல் இலகுவில் அமையும். (தற்கால இந்தியா முழுமையிலும் வழங்கிய மொழி தமிழே;) சமக்கிருத பிராகிருத சம்பந்தமான மொழிகள் வழங்கவில்லை. இவ்வுண்மையை பி. தி. சீனிவாச ஐயங்கார் "இந்தியாவின் கற்காலம்" என்னும் நூலில் விளக்கியிருக்கின்றனர்[28].

---

*India on the period from 650 to 325 B. C. delivered in 1918 by M. D. Bandarkar, M.A., Professor of Ancient Indian History and Culture, Calcutta University.*

[28] "The neolithians of North India spoke languages of their own which, I hold, were allied to the so-called Dravidian family of languages and not to Sanskrit Prakrit—*Stone Age in India P. 44.*



## தமிழோடு உறவுடைய பிறநாட்டு மொழிகள்

[29]கம்ஸ்கற்கா, நியுசிலாந்து, இத்தாலியிலுள்ள ரஸ்கானி முதலிய நாடுகளில் வழங்கும் மொழிகள் தமிழுக்கு உறவுடையனவாகக் காணப்படுகின்றன. சீனமொழிக்கும், தமிழுக்கும் தொடர்பு உண்டென்று சொல்லப்படுகிறது. எபிரேயம், கிரேக்கு, சமக்கிருதம் முதலிய மொழிகளில் தமிழ்ப்பதங்கள் காணப்படுகின்றன. பழைய ஜெர்மன், காதிக், இலாத்தின் முதலிய மொழிகளிலுள்ள சில சொற்கள் தமிழடியாகப் பிறந்துள்ளன. சுமேரிய மொழி தமிழோடு சம்பந்தமுடையது. இந்து ஐரோப்பிய மொழிகளுக்கும் தமிழுக்கும் பழைய தொடர்பு காணப்படுகின்றது. பின்லாந்தில் வழங்கும் மொழியில் பல தமிழ்ச் சொற்கள் காணப்படுகின்றன.

ஹோ கோனர் என்னும் ஜெர்மன் ஆசிரியர் ஐரோப்பாவிலும், மேற்கு ஆசியாவிலும் அநேக இடப்பெயர்கள் தமிழ்ப் பெயர்களாக இருப்பதைக் காட்டியிருக்கின்றார். அவர் காட்டியவற்றுள் சில, ஸ் ஆறு = சத்தம்போடும்

---

"The modern dialects of North India now called Sanskritic or Gaudian have a fundamental grammatical frame work and a scheme of syntax, the same as that of the Dravidian dialects can be translated into any one set of dialects by the substitution of word for word without causing any breach of idiom. These facts can only prove that people were speaking dialects allied to Tamil. Tamil once inhabited the whole of India and not that these people must necessarily have come into India from outside the country. No single fact has yet been adduced that compels us to believe that the ancient people of India were not auto chthones—*History of the Tamils P. 2.*

ஆறு; இளப் ஆறு=இளம் ஆறு; மத ஆறு—மதத்த ஆறு என்பன[30].

உலகிலுள்ள மொழிகள் எல்லாவற்றையும் ஆராய்ந்து செல்லுமிடத்து, அவை ஒரு பொதுத் தொடக்கத்துக்குக் கொண்டுபோய் விடுகின்றன என்றும், எல்லா மொழிகளுக்கும் அடிப்படையில் திராவிட சம்பந்தம் காணப்படுகின்றதென்றும் சிறந்த ஆராய்ச்சியாளர் கூறுகின்றனர்[31].

---

[29] "The languages spoken now at Kamschatca, the North Eastern corner of Asia, is considered to be a dialect of Tamil (Sir. W. Hunter). The language spoken by the Maores in the far-off New Zealand which denote utmost southern limits of 700 Kathams of Tamil land from Cape Comorin and the languages spoken in the numerous groups of islands between these two boundaries are allied to Tamil (Indian Antiquity Vol. X). The language spoken at Twseany in Italy is a dialect of Tamil, (J. R. A. S.). It is said that the Chinese has some affinity to it (T. P. P. 1913). The three classic languages of the world *viz.* Sanskrit, Hebrew and Greek contain Tamil words in vocabulary (Rys Davids). —*Tamil India, P. 38.*

[30] "There are hundreds of Indo-European words which are to be traced to old Dravidian forms, forcing us to draw the conculsion that there is 'an ancient conection between the Dravidians and Indo-European Languages' Herr Schoener as well remarked"—*Rev. S. Gnanaprakasar, O. M. I.*

[31] "The problem of the affiliation of the Dravidian languages has been studied for many years and various theories have been propounded towards its solution. Caldwell was of opinion that the family to which they are most nearly allied is the Finno-ugric branch of Scythian group of languages. Bleek pointed out Australian affinities and was supported by Norris and Trumbetti. Relation with



பழைய பிரித்தானியர்களுள் அறிவாளிகள் திராவிடர் என்று அழைக்கப்பட்டனர். இதனால் பழைய திராவிடரில் ஒரு பிரிவினர் பிரிட்டனில் குடியேறினார்கள் என்று கருதப் படுகின்றது[32].

## தமிழரின் இந்திய உற்பத்தி

தமிழர் பிறநாடுகளிலிருந்து வந்து, இந்திய நாட்டில் குடியேறினார்கள் என்று கூறுவதற்குரிய கதை ஒன்றேனும் பழந்தமிழ் இலக்கியங்களில் காணப்படவில்லை. ஞாயிறு காயும் கொடியவெயில், தென்னிந்தியாவில் காணப்படும் பெரிய நிழல் மரங்கள், அழகிய புள்ளினங்கள், புலி, சிங்கம், யானை முதலிய கொடிய காட்டு விலங்குகள்

---

Sumerian Oceanian and the Austic dialects have also been discovered.

• Caldwell supposed that the dravidian tongues exhibit traces of their existance at a time prior to the final separation of the Indo-European languages from the Scythian. It may be that we shall discover that most of the tongues spoken by men go back to common sources and that the Dravidian group has preserved a larger number of roots. To what else does the discovery of affinities between language-groups so widely separated as Oceanian, Indian, African, Dravidian. Indo-European and Ural-Altaic point"—*Quarterly Journal of Mythic Society, Vol. XXI, No. 2.*

[32] "It would be interesting to note that the term "Dravid" which frequently applied to wise persons among the early Britons in the pre-Roman days may have also some connection with the Sanskrit word "Dravid" thus showing how the early Dravidians from India colonized and civilized Great Britain"—*Quarterly Journal of Mythic Society, Vol. XXI-3.*

முதலியவற்றைக் குறித்தே அவை கூறுகின்றன. அவற்றில், பனியைக் குறிப்பதற்குரிய சொற்கள் காணப் படுவது போல பனிக்கட்டியைக் குறிப்பதற்குரிய சொல் காணப்படவில்லை; தட்பமுள்ளவற்றை விருப்புக்குரியன வாகவும், வெப்ப முள்ளவற்றை வெறுப்புக்குரியனவாகவும் அவை கூறுகின்றன. மத்திய ஆசியாவிலுள்ள சம பூமி களையும், சாலதியர் நாடுகளையும் குறிக்கும் தமிழ்ப் பதங்கள் காணப்படவில்லை. யானை, புலி முதலிய விலங்குகளும், தினை, வரகு முதலிய தானியங்களும், வேங்கை முதலிய மரங்களும் தமிழ் நாட்டு மலைகளில் காணப்படுவன வாகும்.

மிகப் பழைய காலந் தொட்டு மனிதன் கையினால் செய்த பொருள்களும், அவன் பயன்படுத்திய ஆயுதங்களும் தொடர்பாகத் தென்னிந்தியாவில் கிடைக்கின்றமையால் பழைய கற்காலந் தொட்டு உலோக காலம் வரையில் மக்கள் தென்னிந்தியாவில் வாழ்ந்து படிப்படியே நாகரிகம் அடைந்திருக்கின்றனர். அவர்கள் ஒவ்வொரு வகையான நாகரிக காலத்தும் பயன்படுத்திய சொற்கள் தமிழ் மொழிக்குரியனவாய் இருக்கின்றன. அக்கால மக்களின் பழக்க வழக்கங்களையும், வாழ்க்கை முறைகளையும் பழந் தமிழிலக்கியங்கள் விரிவாகக் கூறுகின்றன. இன்னோரன்ன மறுக்கக் கூடாத பல காரணங்களால் தமிழ் மக்கள் தென்னிந்திய பழங்குடிகள் எனத் துணிந்து கூறலாம்[33].

[33] "Moreover the artefacts and other relics of ancient times discovered so far in South India from an unbroken series, showing that there has been in this country a regular evolution of culture which was never rendered discontinuous by any catastrophe, from the lowest palaeolithic stage to the latest age of metals, the language existed in South India during the course of the evolution. The words necessary for the linguistic expression of every stage of the culture are found in the earliest strata of Tamil, and the customs of this early age continued sufficiently long to be enshrined in the earliest extant specimens of Tamil literature. It may therefore be taken as fairly certain that the Tamils were indigenous to South India—*History of the Tamils, p. 231—P. T. Srinivasaiengar, M. A.*



## ஆரியரும் தமிழரும்

சிந்து நதிப் பள்ளத்தாக்குகளில் காணப்படும் மொகஞ்சதரோ, அரப்பா, சன்னுதரோ முதலிய தமிழருடைய பழைய நகரங்களின் அழிவுக்கு ஏது வெள்ளப் பெருக்கே அன்றிப் படையெடுப்பு அன்று என ஆராய்ச்சியாளர் கூறுகின்றனர். சிந்து நாகரிகத்தில் ஆரியரின் நாகரிகம் சிறிதும் காணப்படவில்லை. ஆகவே அரப்பா, மொகஞ்சதரோ முதலிய நகர்களின் அழிவுக்குப் பின்னரேயே ஆரியர் இந்தியாவை அடைந்தனர் ஆதல் வேண்டும்.

கி. மு. 2000 வரையில் ஆரியர் இந்தியாவை அடைந்தனர் என்று சரித்திரக்காரர் கூறுகின்றனர். ஆரியர் இந்தியாவை அடைந்தபோது இங்கு வாழ்ந்தோர் தமிழர்களே. இவர்கள் ஆரியரால் தாசுக்கள் என்று அழைக்கப் பட்டனர். தாசுக்களுக்கும் ஆரியருக்கும் இடையில் ஓயாத போர் நடந்ததென இருக்கு வேத பாடல்கள் கூறுகின்றன. தாசுக்கள் கரியநிற முடையவர்களென்று சொல்லப்படுகின்றனர். தாசுக்களை அழிக்கும்படி இந்திரனை வேண்டி ஆரிய முனிவர்கள் பாடிய பாடல்கள் பல இருக்கு வேதத்தில் காணப்படுகின்றன. தாசுக்கள், ஆடு, மாடு முதலிய மிகுந்த செல்வ முடையராய், மதில்கள் சூழ்ந்த அழகிய நகரங்களில் வாழ்ந்தார்கள்.

நெடுங்காலப் போராட்டத்திற்குப் பின் தாசுக்கள் எனப்பட்ட தமிழர் தெற்கே சென்று தங்கினர். இருக்

வேதகாலம்* கி. மு. 1200 வரையில் என்று சொல்லப் படுகின்றது.

## பாரதம்

பாண்டு புத்திரருக்கும் துரியோதனுதியருக்கும் இடையே நடந்த போரைக் கூறும் நூல் பாரதமாகும். வட மொழியிலுள்ள பாரதம், பழைய பாடல்களோடு காலத் துக்குக் காலம் பாடிச் சேர்க்கப்பட்ட புதிய பாடல்களையு முடையது. அப்பாடல்கள் கி. மு. நாலாம் நூற்றூண்டில் தொகுக்கப் பட்டவை. [34]கி. மு. 400 முதல் கி. பி. 400 வரையிற் செய்யப்பட்ட பாடல்கள் அதனிடத்தே காணப் படுகின்றன என வின்சன் சிமித் என்னும் ஆசிரியர் கூறுவர்.[35] பாரதப் போர்[36] கி. மு. 1500 க்கும் கி. மு. 750 க்கும் இடையில் நேர்ந்ததென டாக்டர் கிருஷ்ணசாமி ஐங்கார் கூறுவர்.[37] வேலாங்கைக் கோபாலையர், பாரதப் போர் கி. மு. 1194-இல் நிகழ்ந்தது என்பர்.[38] பாரதம் இற்றைக்கு 5000 ஆண்டுகளுக்கு முன் நிகழ்ந்ததென வைத்தியா என்னும் ஆசிரியர் கூறுவர். பாரத காலத் திருந்த வியாசரால் பாரதம் செய்யப்பட்டதென்பதும், அது ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட நிகழ்ச்சி என்பதும் மக்களிடையே இருந்துவரும் பொதுவான நம்பிக்கை-களாகும்.

* "The Rig Veda (Verse—Veda) of Indian Aryans (Circa 1200 B C)"—*A Short History of Hindu India—Krishnaswamy Aiyangar, M.A., Prof. of Indian History and Archaeology, University of Madras.*

[34] The Mahabharata, as we have it now, was probably put together at least as early as the fourth century B. C. from traditional war songs founded on events which took place at a much earlier date—*Ibid—P. 33.*

[35] "The Mahabharata which, in its present form, is rather an encyclopaedia of moral teaching than an epic properly so called, includes compositions supposed to range in date between 400 B. C. and. 400 A. D.—*The Oxford Students' History of India—P. 28. Vincent Smith*

[36] மகாபத்மநந்தனுக்கு 1050 ஆண்டுகளின் முன் குரு வமிசத்திலுள்ள பரிச்சித்து பிறந்தான் என்று புராணங்கள் கூறுகின்றன. சந்திரகுப்தனின் ஆளுகை தொடங்குவதற்கு நாற்பது ஆண்டுகளின் முன் மகா பத்மநந்தனின் ஆட்சி ஆரம்பித் ததென வாயு புராணங் கூறுகின்றது. சந்திரகுப்தன் கி. மு. 322-ல் ஆட்சி தொடங்கினன் எனக் கொண்டால் பரிச்சித்து கி. மு. 1412-ல் இருந்தவனுவன்—*Prehistoric ancient Hindu India—R. D. Banerji.*



பாரதத்திற் பிற்காலப் பாடல்கள் பல உள்ளன என்று ஆராய்ச்சியாளர் ஒரு தலையாக ஒப்புக்கொள்கின்றமை யின், அதன் முற்கால பிற்காலப் பாடல்களைப் பிரித்தறி யினன்றி அது தென்னிந்திய பழஞ் சரித்திர ஆராய்ச்சிக் குச் சிறந்த பிரமாணமாக மாட்டாது.

திரௌபதியின் சுயம்வரத்துக்குச் சென்றவர்களுள் பாண்டிய அரசன் ஒருவனென்றும், சோழரும், பாண்டியரும் தருமனுக்குக் காணிக்கை அளித்தார்களென்றும், அருச் சுனன் பாண்டியன் புதல்வியாகிய சித்ராங்கதையை மணந் தானென்றும் பாரதம் கூறுகின்றது.

## இராமாயணம்

இராமாயணம் எழுதப்பட்ட காலத்தைக் குறித்து ஆராய்ச்சியாளர் பலவகைக் கருத்துக்களை வெளியிட் டிருக்கின்றனர். இராமாயணம் கி. மு. மூன்று அல்லது நாலாம் நூற்றூண்டில் செய்யப்பட்டதென டாக்டர்

[37] "The inter-tribal war typified in the Mahabharata took place in the period between 1,500 and 1,000 B. C.; while the events of Ramayana should be placed between 1,000 and 750 B. C.—*Ancient India P. 3.*

[38] The Chronology of Ancient India. PP. 51—104.

கிருஷ்ணசாமி ஐயங்காரவர்கள் கூறுவர்[39] இராமாயணத்தின் பெரும்பகுதி கி. மு. ஐந்தாம் நூற்றாண்டிற்குமுன் செய்யப்பட்டதென்றும், பல நூற்றாண்டுகளுக்குப்பின் பாடப்பட்ட பாடல்களும் அதில் சேர்க்கப்பட்டுள்ளன என்றும் வின்சன் சிமித் என்னும் ஆசிரியர் கூறுவர்[40] இராமாயணத்தின் பெரும்பகுதி கி. மு. ஆறாம் நூற்றாண்டில் செய்யப்பட்டதென்பதே பெரும்பாலும் ஆசிரியர்களது கருத்தாக இருக்கின்றது.

பாரத நிகழ்ச்சி இராமாயண நிகழ்ச்சிக்குப் பிற்பட்டதென்பது டாக்டர் கிருஷ்ணசாமி ஐயங்காரின் கருத்தாகும்.

இராமாயண நிகழ்ச்சி பாரதத்துக்கு முற்பட்ட நிகழ்ச்சி என்றும், இராமாயணம் எழுதப்படுவதன் முன் மாபாரதம் எழுதப்பட்டது என்றும் பெரும்பாலும் ஆசிரியர்கள் கருதுகின்றனர்.*

---

* *சாதகக் கதைகளில் இராவணன் சீதையைக் கவர்ந்ததும் இராமாயண யுத்தம் நிகழ்ந்ததுமாகிய வரலாறுகள் காணப்படாமையால் இராமரைப் பற்றியும் இராவணனைப் பற்றியும் அந்நாட்களில் தனித்தனி வழங்கிய கதைகளை வால்மீகர் இணைத்து இராமாயணம் என்னும் புதிய கதையைச் செய்தார் என்று சிலர் கருதுவர். பாணினியும் பதஞ்சலியும் வாசுதேவன், அருச்சுனன் உதிட்டிரன் முதலியோர் பெயர்களைத் தம் நூல்களில் எடுத்தாண்டிருப்பதுபோல இராமருடைய பெயரை எடுத்தாளவில்லை. பிற்காலத்தில் எழுதப்பட்ட அமரசிம்ஹத்திலும் விட்டுணுவின் பெயர்களுள் இராமரின் பெயர் கூறப்படவில்லை—Early History of Dekkan—P 17—R. G. Bhandarkar.*

[39] It (Ramayana) was composed probably in the fourth or third century B. C. "—*History of Hindu India, p. 33.*

[40] "The bulk of the Ramayana is believed to have been composed before 500 B. C. but some of the additions seem to be several centuries later—*The Oxford Students' History of India, p. 28.—V. Smith.*



இராவணன், வேதங்களிற் பயிற்சியுடையவனென்றும், அவன் சாமவேதத்துக்கு இசைவகுத்தானென்றும் கூறும் பழங்கதைகளும் உள்ளன. மாபாரத காலத்தவராகிய வியாசர் வேதத்தை நான்கு கூறுபடுத்தினரென்பது ஐதீகம். இராவணன் வேதங்களைப் பயின்று சாம வேதத்துக்கு இசைவகுத்தானாயின் அது பாரதநிகழ்ச்சிக்குப் பிற்பட்ட நிகழ்ச்சியாதல் வேண்டும். வேதகாலம் கி. மு. 1200 வரையில் என்று முன் ஓரிடத்திற் கூறப்பட்டது.

இராமாயணம், ஆந்திரர், சோழர், பாண்டியர், கேரளர்களைப்பற்றிச் சொல்லுகிறது. சுக்கிரீவன் வானர வீரரைப்பார்த்து 'பொன்னும் முத்துமுடைய பாண்டியனது பொன்மயமான கபாடத்தைக் காண்பீர்கள்' எனக் கூறியதாகவும் கூறுகின்றது. இராமாயணத்தில் உள்ள பழம் பாடல்களையும், புதியபாடல்களையும் பிரித்து அறிந்து கொள்ளாத வரை, இராமாயணம் தென்னிந்திய பழஞ் சரித்திரத்தை அறிந்து கொள்வதற்குச் சிறந்த பிரமாணமாகாது. கி. மு. ஐந்தாம் நூற்றாண்டுக்குப்பின் வட இந்தியாவிலுள்ளவர்கள் தென்னாட்டைக் குறித்து எவ்வளவு அறிந்திருந்தார்கள் என விளக்கிக் கொள்வதற்கு இராமாயணமும், பாரதமும் சிறந்த நூல்களாகும்.

பாரத இராமாயணப்பாடல்கள் தொகுக்கப்படுவதன் முன், கி. மு. 543-இல் இலங்கையை அடைந்த விசயன், பாண்டியன் குமாரத்தியை மணந்தானென்று மகாவமிசம் என்னும் சிங்கள இதிகாசம் கூறுகின்றது. சோழ அரசனாகிய எல்லாளன் இலங்கையை வென்று, கி. மு. 204 முதல் நாற்பத்து நான்கு ஆண்டுகள் அரசுபுரிந்தான். எல்லாளன் சரித்திரத்தால், அக்காலத்தில் சோழ இராச்சியம் மிக உன்னத நிலை அடைந்திருந்ததெனத் தெரிகிறது. எல்லாளனுடைய சமாதி, அழிந்த நிலையில் இன்றும் அனுராதபுரத்திற் காணப்படுகின்றது. ஊர்வலங்களில் அச் சமாதிக்கு முன்னாகக் கொட்டு முழக்குகளை நிறுத்தி மௌன

மாகச் செல்வது இன்றும் வழக்காக இருக்கின்றது. திடீரென ஓர் இராச்சியமேற்பட்டு உன்னத நிலையை அடைந்து விட மாட்டாது; அதற்குப் பல நூற்றாண்டுகள் வேண்டும்.

# 2. மக்கள்

## ஐவகை நிலம்

உலகிலுள்ள நிலப் பரப்பு, இயற்கை அமைப்பில் காடு, மலை, வயல், கடற்கரை, பாலைவனம் என்னும் ஐந்து வகையில் அடங்கும். உலகுக்கே உரிய இவ்வைந்து அமைப்பும் இந்தியாவுக்கு உண்டு. அவ்வந் நிலங்களில் வளரும் மரம், கொடி, பூண்டு முதலியவற்றின் சிறப்புகளால் அந்நிலங்கள் முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல்[1], பாலை என்னும் பெயர்களைப் பெறும். தமிழர் விந்திய மலைக்குத் தெற்கே வாழ நேர்ந்தபின் பாலை நிலத்தை அறியாராதலின், அவர் முதுவேனிற் காலத்து வெயிலின் வெப்பத்தால் மரஞ்செடிகள் தீய்ந்த[1] முல்லையுங் குறிஞ்சியும் சார்ந்த நிலங்களைப் பாலை நிலம் எனக் கூறினர். அவ்வந் நிலங்களுக்குக்குரிய தெய்வம், உணவு, விலங்கு, மரம், புள், பறை, தொழில், யாழ் முதலியன அவ்வத்திணைக்குரிய பாடல்களில் கூறப்படுகின்றன.

முல்லைக்குத் தெய்வம் மாயோன்; உணவு வரகும் சாமையும்; மா முயலும் சிறுமானும்; மரம் கொன்றையும் குருந்தும்; புள், கானங்கோழியும் மயிலும்[2] சிவலும்; பறை[3] ஏறு கோட்பறையும், முரசும்; செய்தி, வரகு களை கட்டலும், அவை அறுத்தலும் கடா விடுதலும், நிரை மேய்த்தலும், ஏறு கோடலும்; பண் முல்லை; தலைவன்

[1] முல்லையுங் குறிஞ்சியும் முறைமையிற் றிரிந்து
நல்லியல் பழிந்து நடுங்கு துயருறுத்துப்
பாலை யென்பதோர் படிவங் கொள்ளும் (சிலப்)

[2] கவுதாரி. [3] ஏறு தழுவும்போது கொட்டப்படும் பறை.



பெயர், குறும்பொறை நாடன்; தலைமகள் பெயர் கிழத்தி, மனைவி; இப் பெயர் மருதநிலத்துத் தலைமகட்கும் உரியது; பூ, முல்லையும் தோன்றியும்; நீர், கான்யாறு; ஊர், பாடியும் சேரியும்; மக்கள் பெயர், இடையர், இடைச்சியர், ஆயர், ஆய்ச்சியர்.

குறிஞ்சிக்குத் தெய்வம் முருகவேள்; உணா ஐவன நெல்லும் திணையும்; மா, புலியும் பன்றியும் யானையும்; மரம் அகிலும் திமிசும் தேக்கும், வேங்கையும்; புள் கிளியும், மயிலும்; பறை வெறியாட்டுப் பறையும், தொண்டகப் பறையும், குரவைப்பறையும்; செய்தி தேனழித்தலும், கிழங்ககழ்தலும், குன்றமாடுதலும், திணைக்கிளி கடிதலும்; யாழ் குறிஞ்சியாழ்; தலைமகன் பெயர் சிலம்பன், வெற்பன், பொருப்பன்; தலைமகள் பெயர் கொடிச்சி, குறத்தி; நீர் அருவி நீரும் சுனை நீரும்; ஊர் சிறுகுடியும் குறிச்சியும்; பூ குறிஞ்சியும் காந்தளும், வேங்கையும், சுனைக் குவளையும்; மக்கள் பெயர் குறவர், இறவுளர், குன்றவர்.

மருதந்துக்குத் தெய்வம் இந்திரன்; உணா செந்நெல்லும் வெண்ணெல்லும்; மா எருமையும், நீர்நாயும்; மரம் வஞ்சியுங் காஞ்சியும் மருதும்; புள் நீர்க்கோழியும் தாராவும்; பறை மணமுழவும், நெல்லரி கிணையும்; செய்தி நெல்லரிதலும், அவை கடாவிடுதலும், பயிர்க்குக் களை கட்டலும்; யாழ் மருதயாழ்; தலைமகன் பெயர் ஊரன் மகிழ்நன்; தலைமகள் பெயர் கிழத்தி, மனைவி; பூ தாமரைப் பூவும் செங்கழுநீர்ப் பூவும்; நீர் மனைக் கிணறும், பொய்கையும், ஆறும்; ஊர் பேரூர் எனப்படும்; மக்கள் பெயர் கடையர், கடைச்சியர், உழவர், உழத்தியர்.

நெய்தற்குத் தெய்வம் வருணன்; உணா மீன் விலையும் உப்பு விலையும்; மா சுறவும், முதலையும்; மரம் புன்னையும் ஞாழலும் கண்டலும்; புள் அன்னமும் அன்றிலும் அகன்றிலும்; பறை மீன் கோட்பறையும் நாவாய்ப் பறையும்; செய்தி மீன் விற்றலும் உப்பு விற்றலும் அவை படுத்தலும்;

யாழ் விளரியாழ்; தலைமகன் பெயர் துறைவன், கொண்கன்; தலைமகள் பெயர் நுளைச்சி, பரத்தி; நீர் மணற் கிணறும், உவர்க்கழியும்; பூ வெள்ளிதழ்க் கைதையும் நெய்தலும்; ஊர் கலமேறு பட்டினமும், சிறுகுடியும், பாக்கமும்; மக்கள் பெயர் பரதர், பரத்தியர், நுளையர், நுளைச்சியர்.

பாலைக்குத் தெய்வம் காளி; உணு ஆறலைத்தனவும் ஊரெறிந்தனவும்; மா வலியழிந்த யானையும், புலியும், செந்நாயும்; மரம் இருப்பையும், ஓமையும்; புள் கழுகும் பருந்தும் புறவும்; பறை பூசற் பறையும் ஊரெறி பறையும் [1]நிரைகோட் பறையும்; செய்தி நிரைகோடலும், சாத்தெறிதலும், சூறையாடலும்; பண் பஞ்சுரம்; தலைமகன் பெயர் மீளி, விடலை, காளை; தலைமகள் பெயர் எயிற்றி, பேதை; பூ மராம்பூவுங், குராம்பூவும், பாதிரிப் பூவும்; நீர் வறுநீர்க் கூவலும் அறுநீர்ச்சுனையும்; மக்கள் எயினர், எயிற்றியர், மறவர் மறத்தியர்; ஊர் கொல்குறும்பு.

ஐவகை நிலங்களின் கருப்பொருள் முதலியவற்ருல் அந்நிலங்களின் தன்மையும் மக்களின் வாழ்க்கை முறையும் ஓரளவில் விளங்குகின்றன.

## குறிஞ்சி நில மக்கள்

மனிதன் ஆதியில் குறிஞ்சி நிலத்திலேயே தனது வாழ்க்கையைத் தொடங்கினுன். கொடிய விலங்கினங்களினின்றும் அவனைக் காப்பதற்கேற்ற குகைகள் அங்குத் தானுண்டு. மண்ணினுல் ஏனங்களைச் செய்து அவற்றில் நீரை நிரப்பி வைத்திருக்க அவன் அறியாத காலத்தே சுனை நீரைக் கைகளால் அள்ளிப் பருகினுன்; மலையிலுள்ள நீரூற்றுகள் வறண்டனவாயின் கற்பாறை மீது பள்ளங்களில் தேக்கிநின்ற நீரை அருந்தினுன். காலடியிற் கிடந்த கற்கள், அவனுக்கு முற்பருவத்து ஆயுதங்களாக உதவின; பல வடிவங்களிற் காணப்பட்ட கற்கள், கோடாரி, ஈட்டி, உளி

[1] நிரை கொள்ளையிடுவதற்குச் செல்லும்போது கொட்டும் பறை.



முதலிய பலவகை ஆயுதங்களைச் செய்வதற்கு வேண்டிய அறிவை அவனுக்கு அளித்தன. இந்நிலைமையில் இருந்தே அவனது பண்பாடு வளர்ந்து பழைய கற்காலத்தை அடைந்தது. அக்காலமக்கள் பயன்படுத்திய கல்லாயுதங்கள் கடப்பா, நெல்லூர், வட ஆர்க்காடு, செங்கற்பட்டு முதலிய இடங்களிற் கண்டெடுக்கப்பட்டன.

மலையில் வாழ்க்கையைத் தொடங்கிய மனிதன் காய், கனி, கிழங்கு, வித்து முதலியவற்றை உண்டு வாழ்ந்தான். இவை எல்லாக் காலங்களிலும் கிடையாமற் போகவே அவன் ஊன் வகைகளையும் உணவாகக் கொண்டான். துட்ட விலங்குகளினின்றும் தன்னைக் காத்துக் கொள்வதற்கே அன்றி, உணவின் பொருட்டும் அவன் வேட்டையாட வேண்டியிருந்தது. ஆகவே அவன் வேட்டை ஆடுவதில் திறமை அடைந்தான்.

மனிதன், ஆதியில் வேட்டைத் தொழிலையே மேற்கொண்டான். உலகம் முழுமையும் காணப்பட்ட பழைய கற்காலக் கருவிகள் ஒரே வடிவின வாயிருத்தலின், மனிதன் வேடனுயிருந்தபோது [11] ஓரிடத்தில் தங்கியிராது இடம் விட்டு இடம் பெயர்ந்து வாழும் வாழ்க்கை உடையவனுகவிருந்தான் எனத் தெரிகின்றது.

வேடவனுக விருந்த காலத்து மனிதன் இரண்டு சிறந்த தொழில்களைக் கற்றுக் கொண்டான். ஒன்று வில்லின் பயன்; மற்றது தடிகளைத் தேய்த்து நெருப்பு உண்டாக்குவது. மலையில் மண்டி வளரும் மூங்கில் எளிதிற் பிளக்கக் கூடியதாக இருத்தல் அவன் கருத்திற் பட்டது. மூங்கிலைப் பிளந்து அதன் இரண்டு தலைகளையும் உலர்ந்த கொடிகளால்

[11] The ancestor of the human race must have lived in the Paliocene epoch, and the man was a roving animal at an early period, who wandered far from his home—*Men of the Dawn*, p. 40.

இழுத்துக் கட்டி, வில்லைச் செய்து, அதில் நீண்ட கூரிய முட்களை வைத்து அவன் எய்யப் பழகிக் கொண்டான்.

இன்றும் மலைகளில் வாழும் மலைச் சாதியினர் புலியை ஒரே அம்பினால் கொல்லக் கூடிய எய்யும் திறமையுடையவர்களாக இருக்கின்றனர்.

மலையிடத்து வளரும் மூங்கில், காற்றுக்கு அசைந்து ஒன்றோடு ஒன்று உரைஞ்சுதலால் தீ பிறந்தது. இதனைக் கண்ணுற்ற மனிதன், இரண்டு மரத் துண்டுகளை உரைத்து நெருப்பை உண்டாக்க அறிந்து கொண்டான். அவன் இறைச்சியை நெருப்பில் வாட்டி மெதுவாக்கி உண்டான். அம்பு வில்களுடன் திரிந்த காலத்து, அவன் வில்லைத் தோளில் தரித்துக் கொண்டும் உடம்பைத் தோலால் மறைத்துக் கொண்டும் திரிந்தான். பின்பு தோலுக்குப் பதில் கம்பளி அல்லது துணி பயன்படுத்தப்பட்டது. இவ்வாறு போர்க்கும் வழக்கம் மொகஞ்சதரோ மக்களிடையே காணப்பட்டது.

இவ் வழக்கமே பூணூலணியும் வழக்கமாகவும் அதில் (புஞ்சி) மான் தோலைக் கட்டும் வழக்கமாகவும் மாறிற்று. இதனை ஆராய்ச்சியாளர் உறுதிப்படுத்தி யுள்ளார்கள்[42].

[42] The statues represent male figures draped with a shawl-like cloth worn on the left shoulder and under the right arm so as to leave the right arm free which recalls the *upaveta* mode peculiar to India discovered during the later vedic age. Dr. Aiyengar states that this is the style in which the upper cloth is worn by the Brahmans and high class Hindus generally in South India—*Bharata Vidya—Vol. III, part I, p. 145.*

It is interesting to note in this connection that *yagnopavidita* originally represented a piece of cloth—*Cultural Heritage of India, Vol. III—Ramakrishna Mission, Calcutta.*



ஆடவர் வேட்டையின் பொருட்டு வெளியே சென்றிருந்த காலத்தே, பெண்கள் பழங்களைப் பொறுக்குவதிலும், கிழங்கு வகைகளை அகழ்வதிலும், மூங்கிலரிசி, சாமை, மலைநெல் முதலியவற்றைச் சேகரிப்பதிலும் நேரம் போக்கினர். குழந்தைகளை வளர்ப்பதும் அவர்கள் கடமையாக இருந்தது. இப் பருவத்தில் மனிதன், வீடு வாயில்களமைக்கக் கற்றுக்கொள்ளவில்லை. வீடுகள் அமைத்து வாழ்வதைவிட நிழல் மரங்களின்கீழ் அல்லது பெரிய மலைத் தாழ்வாரங்களில் தங்குவதே தென்னிந்திய தட்ப வெப்பநிலைக்கு ஏற்றதாக இருந்தது. மழை, வெயில்களிலிருந்து தன்னைக் காக்கும் நோக்கமாக ஆதியில் மனிதன் வீடமைக்கவில்லை. அக்கால மனிதனின் செல்வமாகிய உணவுப் பொருள்களைச் சேகரித்து வைப்பதற்காகவே வீடுகளமைக்கப்பட்டன. இடம் விட்டு இடம் பெயர்ந்து திரியும் வாழ்க்கையை மேற்கொண்டிருந்தமையாலும், நிலையான வீடின்மையாலும் வீட்டில் தங்கி வாழும் உணர்ச்சி அக்கால மனிதனுக்கு உண்டாகவில்லை. ஆகவே, பெண்களுக்கே சொத்துரிமை உடையதாகிய வாழ்க்கைமுறை வளர்ச்சி அடைந்தது. இவ் வாழ்க்கைக்கு வாய்ப்பாக இன்னும் சில காரணங்களிருந்தன.

முற்கால மனிதன் பெரிய மணக் கிரியைகளாற் கட்டுப்படவில்லை. காதலர் ஒரு தனியிடத்தில் சந்தித்து இயற்கை மணஞ் செய்துகொண்டனர். சில நாட்களின் பின் உறவினரை அழைத்து அவருக்கு விருந்திடுவதே அக்கால மணக்கிரியையாக இருந்தது. திருமணக் கட்டுப்பாடு எப்பொழுதும் நிலையாக இருக்கவில்லை. ஆடவருக்குச் சொத்துக்களில் சொந்தமில்லாதிருந்ததும், இடம் விட்டு இடம் பெயரும் வாழ்க்கையுமே இதற்குக் காரணமாக இருந்தன. பெண்களே சொத்துக்கு அதிகாரிகளாய் வாழும் வாழ்க்கை நீண்டகாலம் தொடர்ந்து வருவதாயிற்று.

ஆடவரும் மகளிரும், சிறப்பாகப் பெண்கள், தம்மை அலங்கரித்துக்கொள்ள விரும்பினர். குறப் பெண்கள், ஒய்வு நேரங்களில் மணிகளைப் பொறுக்கி அவற்றை மாலை யாகக் கோத்தணிந்தனர். அவற்றோடு மலர்களைப் பறித்துக் கொடிகளால் மாலையாகத் தொடுத்துச் சூடினர்; தம்முடைய காதலர் வீரத்தின் அறிகுறியாக வேட்டையாடிக் கொண்டு வந்த புலிப்பல்லைக் கயிற்றில் கோத்துக் கழுத்திலணிந்தனர். இதுவே காலத்தில் திருமணத்தின்போது கணவன் மனை விக்கு அணியும் தாலியாக மாறிற்று. கணவனை உடைய தென்னிந்தியப் பெண்கள், தாலியை மிகப் புனித முடைய தாகப் பேணிவருகின்றனர். பெண்கள் தம்மை அலங் கரித்தற்குப் பயன்படுத்திய மற்றொன்று தழை உடை. இது, அசோகு, மா, சந்தனம் முதலியவற்றின் இலைகளை உலர்ந்த கொடிகளில் பிணித்து அணியப் படுவதொன்று- கும். தென்னிந்தியாவிலுள்ள செஞ்சு முதலிய மலைச் சாதி யாரிடை இவ்வழக்கம் இன்றும் காணப் படுகின்றது.

"குறச் சிறுமியர் தினைமீது விழும் குருவிகளைப் பரண் மீதிருந்து குளிரி தட்டை முதலிய கருவிகளைத் தட்டி ஒலித்து ஓப்புவர்.[1] மலையிடத்துள்ள சுனைகளில் ஆடிப், பூக்களைச் சூடிக்குரவை ஆடுவர். குறவர் இராக்காலத்தே பரண் மீதிருந்து, பன்றி யானை முதலிய விலங்குகள் தினையை அழியாதபடி காவல் புரிவர். பரணிடத்தே அவர்கள் மாட்டிய நெருப்புக் கொள்ளிகள் உடுக்கள் போல் விளங்கும்[2]. கானவர் தாம் எய்து கொன்ற பன்றியினிறைச்சியைக் கூறுபோட்டுச் சுற்றத்தினருக்கு அளித்துத் தாமும்

[1] குருவியோப்பியும் குன்றத்துச் சென்று வைகியருவி
யாடி யுஞ்சுனை குடைந்தும் வருவோம். (சிலப்.)
தழலை வாங்கியும் தட்டை யோப்பியும்
அழலேர் செயலங் தழை அசைஇயுங்
குறமகள் காக்கு மேனல்"

(அகம். 125)



உண்பர்.[2] குறமகளிர் பாறையிடத்துத் தினையைக் காய விட்டுச் சுனையாடச் செல்வர். அதனைப் பார்த்திருந்த குரங் குகள் தினையைக் கவர்ந்துசெல்லும்.

"இரவிலே தினைப்புனத்தை மேயவரும் யானையைப் பரண்மீதிருந்த கானவன் கடும் விசையுடைய கவணுல் எறிவன். எறியப்பட்ட கல், அம்பு போற் சென்று வேங்கை யின் பூங்கொத்தைச் சிதறி, மலைச்சாரலிலுள்ள தேனைச் சிதைத்துப் பலாப்பழத்துள் தங்கும். (அகம் 292) உயர்ந்த தினைப்புனத்தே சிங்கத்தை ஒத்த வலியுடைய கானவன் பரண்மீதிருந்து கள்ளை உண்டு மகிழ, கொடிச்சி சந்தனக் குழம்பைக் கரிய கூந்தலிடத்தே தடவி மெத்தெனவருகின்ற காற்றிலே தழைத்த நீண்ட கூந்தலைக் கையினுல் அசைத்து உலர்த்திப் பெரிய மலையின் பக்கத்தே இருந்து குறிஞ்சிப் பண்பாடுவள். தினையை மேயவந்த இளையவலிய களிறு தினைக்கதிரை உண்ணுதும், நின்ற இடத்தினின்றும் பெயரா தும், உறங்காத பசிய கண்ணை மூடி உறங்கும். (அகம் 102) மலைச்சாரலிடத்தே மிளகுக் கொடி படர்ந்திருக்கும். பன்றி, கொம்பினுல் மண்ணெடுத்து உழுத புழுதியில், விதைத்த தினை விளைந்திருக்கும். தினையின் கதிரைப் புதிது உண்ண வேண்டிய கானவர், மான் இறைச்சியைப் புழுக்கிய பானை யில் மரைப்பாலை உலையாகவார்த்துத் தினை அரிசியைப் பெய்து சந்தன விறகால் சமைத்த சோற்றை வாழை யிலையிற் படைத்துப் பலரோடும் இருந்துண்பர்." (புறம் 168)

[2] குறுந்தொகை 150, 315.
பிணர்ச்சுவற் பன்றி தோன்முலைப் பிணவொடு
கணைக்கா லேனல் கைமிகக் கவர்தலிற்
கல்லதா ரும்புழை யல்கிக் கானவன்
வில்லிற் றந்த வெண்கோட் டேற்றைப்
புனையிருங் கதுப்பின் மனையோள்கெண்டிக்
குடிமுறை பகுக்கு நெடுமலை நாட. (நற். 336)

## குறிஞ்சி நிலத் தோற்றம்

“ அழகிய அசைவில்லாத மலை, அளத்தற்கரிய தவமுடைய பெரியார் போன்று நிற்கும். அழகிய பட்டாடை உடுத்தோரும், இனிய மழலைப் பேச்சுடையோரும் நாற்சந்தியிற் கூட்டமாக உலாவுவோரும் பலர் நட்பையுடையோருமாகிய அழகிய பரத்தையரின்மனம் போல எல்லை அறியப்படாதாகி, அரிய பொருளுடைய நூல்களைக் கல்லாதவரின் உள்ளம் போல நொய்த நுரையைச் சுமந்து, மெய்யை விரும்பும் மேலோர் நட்புப் போல மலையிடத் தெப்பொழுதும் அருவி ஓடிக்கொண்டிருக்கும். பசியதாளுடைய தினைப் புனந்தோறும் பரண் மீது செருகிய சந்தனக்கட்டையும் அகிலுமாகிய கொள்ளிவிளக்கின் கீழ் கவரிமான் ஆறிக் கிடந்து துயில் செய்யும்.

“ தகர மரங்களால் அழகு பெற்ற குளிர்ந்த மலைச்சாரலில், நறை, நாகம், பலா, மா, சுரபுன்னை, ஈரப்பலா, செண்பகம், குருக்கத்தி, குறிஞ்சி, வேங்கை, ஆச்சா, சூரை, வள்ளி, மால், காந்தள், குரா, பனிச்சம், திலகம், மூங்கில், வெட்சி, காட்டுமல்லிகை, தில்லை, செங்கருங்காலி, சந்தனம், அகில், இலவங்கம், ஏலம், இருப்பை முதலிய மரங்களும் கொடிகளும் நெருங்கி வளரும். இவற்றினூடாகப் பாய்ந்து வருகின்ற ஆறு, தேன் கூட்டின் புறத்தை மறைத்து மலைச்சாரலிற் பரந்து பூங்காவனத்தின் தாதை அளைந்து மலை வாழ்குறச் சிறுமியர் ஆடுஞ் சுனையை நிறைக்கும். இவ்வகைக் குறுங்காடுகளிற் குறவர் தேனெடுப்பர். பன்றி புனத்தை அழியாது காவல் புரியும் குறவர், பன்றிகள் கண்டுவெருண்டோடும்படி இருண்டுயர்ந்த வேலியிடத்து நிற்கும் மரங்கள் தோறும் வைத்த வெளிச்சம் ஒளி செய்யும். கடையாமத்துச் சோலைகள் நாற்றமிகுந்த மலர்களை அலர்த்தும்.” (பெருங்கதை)



“ கானவர், நீர் உண்ணுதற்குத்திரியும் மான் கூட்டங்களின் காற் சுவடு பதிந்த குளக்கரையிலுள்ள கிடங்குகளில் மறைந்திருந்து, நீருண்ணவரும் அகத்திப் பூப்போன்ற மருப்புடைய பன்றிகளை நடு யாமத்தே வேட்டையாடுவர். பகற்காலத்தே தாமரைப் பூவின் புறவிதழ் போன்ற செவிகளுடைய முயல்கள் ஒன்றேனும் வெளியே போகாதபடி ஒன்றோடு ஒன்று தொடுத்த வலைகளை இழுத்துக்கட்டி ஆஎன்ற வாயுடைய நாய்களுடன் சென்று பசிய புதர்களை அடித்து அவற்றை ஓட்டி வேட்டையாடுவர்.”

(பெரும்பாண்)

## முல்லை நில மக்கள்

குறிஞ்சி நிலத்தே மக்கள் பெருகினர். மலையிடத்தே கிடைக்கும் உணவுப் பொருள்கள் அவர்களுக்குப் போதாமலிருந்தன. ஆகவே அவர்கள் மலைகளினின்றும் கீழே சென்று காடுகளில் வாழத் தொடங்கினர். அவ்விடத்து வாழ ஆரம்பித்தபோது அவர்கள் வாழ்க்கையில் ஓரடி முன் சென்றனர். ஆடு, மாடு, எருமை முதலியவற்றையும், முன் தமக்கு வேட்டைக்கு உதவியாகவிருந்த நாயையும் அவர்கள் தம் வீடுகளில் வளர்த்து வந்தனர்; இதனால் ஆடு, மாடு முதலியவற்றை வளர்த்து அவை அளிக்கும் பயன்களைக் கொண்டு வாழ்கின்ற நிலையை அடைந்தனர். முல்லை நிலத்தில் ஆடு, மாடு விரைவில் பெருகுவதற்குரிய வாய்ப்புகளுண்டு. இதனால் எல்லோரும் சொத்துடையராயினர். ஆகவே அவர்கள் குடும்பங்களாகப் பிரிந்து வாழ்க்கை நடத்தினர். குறிஞ்சி நிலத்தே வாழ்ந்த காலத்து இயற்கை மணத்துக்குப்பின் புலிப்பற்றாலி அணிந்து தழை உடை அளித்தல் மணக்கிரியையாக இருந்தது. இப்பொழுது இயற்கை மணத்தின் முன் மைந்தரும் மகளிரும் மணவினை ஆற்றுதலாகிய கற்பு நிகழ்ந்தது. மாலைகளாலும் தழைகளாலும் அலங்கரித்த பந்தரின் கீழ் ஆண்களும் பெண்களு

மாகிய சுற்றத்தினர் கூடியிருந்து விருந்துண்டபின், ஆண் மக்களை ஈன்ற தாலி தரித்த *நான்கு பெண்கள் மணமகளை முழுக்காட்டிப் புது ஆடை உடுத்தி அலங்கரித்து அவளை மணமகனுக்கு அளித்தல் அக்கால மணக்கிரியையாக இருந்தது. புரோகிதர் புரியும் சடங்குகள் பிற்காலத்து உண்டாயின. இவ்வாறு திருமணங்கள் நடைபெற்றமை யானும், எல்லோருக்கும் சொத்து இருந்தமையானும், ஆண்களே சொத்துக்கு உரிமை உடையவராயினர். மிகப் பல ஆடு மாடுகளை வைத்திருக்கும் ஒரு குடும்பத்தவரின் தந்தை செல்வத்தால் அடையக்கூடிய எல்லா முதன்மை களையும் பெற்றான். நிலங்களைச் சிறுசிறு கூறுகளாகப் பிரித்தலினால் ஆடு மாடுகளை மேய்ப்பதற்குரிய வாய்ப்புக்கள் குன்றும். ஆகவே பல குடும்பங்கள் ஒன்று சேர்ந்து வாழ்ந்தன. இவ்வகைப் பல குடும்பங்களுக்கு ஒருவன் தலைவனானான். ஆதியில் அரசன் தோன்றுவதற்கு இம் முறையே காரணமாக இருந்தது.

இடையனைக் குறிக்கும் கோன் என்னுஞ் சொல் அர சனைக் குறிக்கின்றது. மந்தைகளை மேய்க்கும் இடையனது கோலே அதிகாரத்துக்குரிய செங்கோலாயிற்று. மறு நாடு களில் இடையர், இடம் விட்டு இடம் பெயர்ந்து திரியும் மக்களாக இருந்தனர். இந்திய நாட்டில் இடையர் ஓரிடத் திலேயே தங்கித் தமது வாழ்க்கையை நடத்தினர்.

காட்டிடத்தே மந்தைகள் பரந்துசென்று மேய, ஆயர் மர நிழலில் தங்கி இருந்து, குழல்களில் இனிய இராகங்களை ஊதுவர். அவர்களின் குழல்கள் மூங்கில், கொன்றைப் பழம், ஆம்பற்றண்டு ஆகியவற்றால் செய்யப்பட்டன. மாடு களை மேயும்படி விட்டு நெடுநேரம் வேலையின்றி இருப்பவர் களாதலின் ஆயர் குழலின் இனிய இசையைப் பாடுவதில் திறமையடைந்தனர். ஆயரில் ஒரு பிரிவினர் குறுகிய

*நான்கு பெண்கள் மணமகளை முழுக்காட்டும் வழக்கம் இராமநாதபுரம் மறச்சாதியினரிடையே காணப்படுகிறது.



காலுடைய குறும்பாடுகளை வளர்த்து அவை கொடுக்கும் கம்பளியினால் ஆடை நெய்தனர். இவர் குறும்பர் என்றழைக்கப்பட்டனர்.

"சீழ்க்கை அடித்தலால் மடித்தவாயுடைய கோவல ரின் குடியிருப்பு சிறிய குடிசைகளாலானது. குடிசைகளின் கால்களிடத்து ஆடுகள் தின்பதற்குத் தழைகள் கட்டப்பட் டிருக்கும். அவையிற்றின் கதவுகள் பல தடிகளைக்கொண்டு கட்டப்பட்டவை. தடிகளைவரிந்து வரகுவைக்கோல் பரப்பிக் கிடாய்த்தோல் விரித்த படுக்கையில் முதிய இடையன் காவலாகப் படுத்திருப்பான். முற்றத்தே அறையப்பட்ட குறியமுளைகளில் தாமணி தொடுத்த நீண்ட கயிறுகள் கட்டப்பட்டிருக்கும். ஊரைச் சுற்றி இடப்பட்ட முள்வேலி யிடத்தே செம்மறியாடும் வெள்ளாடும் படுத்துறங்கும்.

"தயிர் புள்ளியாகத் தெறித்த வாயுடைய மோர்ப் பானையைப் பூவால் செய்த சும்மாட்டின்மீது தலையிலே வைத்துக் குறிஞ்சி நிலத்தே போய்க் காலையிலே மோரை விற்கும் நாளுருவி அசையும் காதும், பணைத்த தோளும், ஆற்றின் கருமணல் போன்ற கரிய நெளிய கூந்தலும், நல்ல § மாமை நிறமுமுடைய ஆய்மகள், பறவைகள் துயிலெழுகின்ற வைகறைக் காலத்தே எழுவாள். எழுந்து முளைக்காளானது வெள்ளிய முகைகளை ஒத்த குவிந்த முகிழ்களையுடைய இனிய தயிரைப் புலியினது முழக்கத்தை யுடைய மத்தை, ஆரவாரிக்கும் கயிற்றால் இழுத்துக் கடைவாள்; கடைந்த பின் வெண்ணெயை எடுப்பாள். பின் மோருக்கு விலையாகக் கிடைத்த நெல்லைக்கொண்டு சமைத்த உணவால் சுற்றத்தாரை உண்ணும்படி செய்வாள். இவ் வகை ஆய்மகள், தான் நெய்யை விற்றவிலைக்கு, கட்டி யாகப் பசும் பொன்னை வாங்காளாய், பாலெருமையையும்,

§நாறுரித்த ஆம்பல் தண்டுபோன்ற நிறம்; மாந்தளிர் போன்ற நிறம்.

கரிய எருமை நாகினையும் நெய்க்கு ஒப்பாகச் சொல்லி வாங்குவாள்.[2]

"இடையர், எப்பொழுதும் செருப்புத் தரித்திருக்கும் காய்த்த காலினர்; பசுக்களுக்கு வருத்தஞ் செய்யும் தடியூன்றியகையினர்; இரண்டு தலைகளிலும் உறியினையுடைய காக்களைச் சுமந்து செல்லுதலால் தழும்பு மிகுந்ததும் மயிருடையதுமாகிய தோளுடையர்; காட்டுமரங்களின் உயர்ந்த கிளைகளிடத்தவும் கொடிகளிலுள்ளவுமாகிய பல பூக்கள் கலந்து நெருங்கத் தொடுத்த மாலையினை அணிந்தோர்; ஓர் உடையினை உடையர்: பாற்சோறுகிய உணவினர். இவ்வகை ஆயர் பசுத்திரளோடே காட்டில் தங்குவர். தங்கித் தீக்கடை கோலாற் கடைந்து கொண்ட நெருப்பினையுடைய தீக்கொள்ளியால் இடப்பட்ட கரிய துளையினையுடைய குழலிடத்தே பாலைப் பண்ணைப் பாடுவர். பாலைப்பண் பாடி வெறுத்தாராயின் உள்ளே துளை உடைய குமிழின் தடியை வளைத்துக் கட்டின மரற்கயிற்றை விரலால் தெறித்து வாசிக்கும் நரம்பினையுடைய வில்லாகிய யாழில் குறிஞ்சி என்னும் பண்பாடுவர்.

"படைத் தலைவர் இருப்பதும், விடத்தர், தொடரி முதலிய முள் மரங்கள் சூழ்ந்து வளர்ந்த வேலியுடையதுமாகிய ஊரிடத்தே, வீடுகளின் முற்றங்களில் பிடித்திரள் நிற்பது போல் வரகு முதலிய தானியங்கள் நிறைந்த குதிர்கள் நிற்கும். தலைவாயிலிடத்தே யானையினது காலை ஒக்கும் வரகுதிரிகைகள் நடப்பெற்றிருக்கும். வீடுகள், குறிய வண்டிச் சக்கரங்களும் கலப்பைகளும் சார்த்தி வைத்தலினால் தேய்ந்த சுவரும், புகை சூழ்ந்த கொட்டில்களுமுடையன. மாரிகாலத்து மேகத்தை ஒப்ப வீடுகள் வரகு வைக்கோலினால் வேயப்பட்டிருக்கும். வரகையும் பருப்பை

[2] *அளைவிலை யுணவிற் கிளையுட னருத்தி*
*நெய்விலைக் கட்டிப் பசும்பொன் கொள்ளாள்*
*எருமை நல்லான் கருநாகு பெறூஉம்* (பெரும்பாண்)



யும் இட்டுச் சமைத்த பருப்புச் சோற்றினை ஆயர் உண்பர்*. கோவலர் [1]கழுவோடே கறவைக் கலங்கள் வைத்த உறியோடு தோற்பையிடத்தே சூட்டுக் கோலையுமிட்டுச் சுருக்கிய பைகளைத் தூக்கி நீண்ட கொன்றைக் காயைப் பிளந்து செய்த குழலில் இனிய இசையைப் பாடித் தமது பசுக்களை மழை பெய்த நிலத்தே மேய்க்கக் கொண்டு செல்வர். மாடுகளை மேய்க்கப்போகும் இடையர் மூங்கிற் குழாய்களில் உணவை இட்டு மாட்டின் கழுத்திற் கட்டிச் செல்வர் (அகம் 303); முதுகிலே இட்ட ஓலைப் பறிகளில் இலை குழைகளை உருவிப் போட்டு நடப்பர்.

"காந்தள் மாலையணிந்த கோவலர், ஏறுகளுடைய ஆடு, மாடு, எருமை முதலிய கூட்டங்களை மேயவிட்டு, பல்கொட்டும்படி நடுங்குகின்ற குளிர் வருத்தந் தீரக் கையிலுள்ள கொள்ளியிடத்தே உள்ளங் கையைக் காய்ச்சி அதனால் கொண்ட வெம்மையைக் கன்னத்தே தடவுவர்." (நெடுநல்வாடை)

முல்லை நிலத்திலுள்ளோர் தஞ் சிறுமியரை, ஏறு தழுவி வீரச் செயல் காட்டும் காளையருக்கு அளிப்பதும் வழக்காக இருந்தது. கூரிய கொம்புடைய கொழுத்த எருதை அவிழ்த்துவிட, ஒருவன் அதனைப் பிடித்து அடக்குதலே ஏறு தழுவுதல் ஆகும்*. ஏறு தழுவுங்கால் எருதுகள், பல இளைஞரின் குடலைக் கூரிய கொம்புகளால்பிளந்து கொல்வதும் உண்டு. ஏறு தழுவும் காட்சியைப் பற்றிய செய்யுட்கள் பல கலித்தொகையில் காணப்படுகின்றன.

"மகட் கொடை நேர்ந்த ஆயர், சேரக் கூடி இறைவனுடைய குந்தாலிப் படைபோல கூரிதாகக்

* *பெரும்பாண்.*

[1]*கழு—தடியின் இரண்டு தலைகளையும் சீவிக் கறத்தற்கரிய பசுக்களின் கழுத்திலிடப்படுவது—கலித் தொகை.*

* *மஞ்சிவிரட்டு, (சல்லிக்கட்டு) என்பது ஏறு தழுவுதலின் நிழலாகலாம்.*

கொம்புகளைச் சீவி ஏறுகளைத் தொழுவிடத்தே புகுத்தி விட்டார்.

"அவ்விடத்து ஏறுகளைத் தழுவிப் போக்கும் படியை உட்கொண்டு வந்து வந்து திரண்டு மழை முழக்கமும் இடியும்போல ஆரவாரமெழப் புகையொடு துகள் எழ ஏறு தழுவினூர்க்குக் கொடுத்தற்கு நல்ல மகளிர் திரண்டு நிற்ப நீர்த் துறையிலும், ஆலமரத்தின் கீழும் பழைய வலியினை யுடைய மராமரத்தின் கீழும் உறையும் தெய்வங்கட்குச் செய்யும் முறைமைகளைத் தழுவித் தொழுவிலே பாய்ந்தார்.

"எருத்தினது நோக்கை அஞ்சானுய் அதின் மேலே பாய்ந்த இடையனை அவ் வெருது சாவக் குத்திக் கொம்பிடத்தே எடுத்துக்கொண்டு உடலைக் குலைக்கின்ற தோற்றம், துரௌபதையின் துய்ய கூந்தலிலே கையை நீட்டிய துச்சாதனனுடைய நெஞ்சைப் பிளந்து பகைவர் நடுவே தான்சொன்ன வஞ்சினத்தை வாய்க்கச் செய்த வீமசேனனைப் போன்றது.

"அங்ஙனம் பாய்ந்து கொம்பிடத்தே பிடித்துக் கொண்டும் மார்பிலே உறும்படி தழுவிக் கொண்டும் கழுத்திடத்தே அடங்கிக் கிடந்தும் இமில் முறியும்படி தழுவியுந் தோளுக்கு நடுவே கழுத்தைப் புகுதவிட்டுப் பிடித்தும், நெருங்கிக் கொம்புகள் தம்மேலே படுதலை ஏற்றுக்கொண்டும், நிரைத்துத் தம்மேலே சென்ற ஆயரைப் பின்னர்க் கீழே வீழ்த்து, நீண்டமருப்பு தைக்கும்படி குத்தி, அவர்கள் தழுவுகின்ற கழுத்திடத்தைத் தழுவக்கொடாதே ஏறுகள் அவரை நீக்கி நிறுத்தின; அங்ஙனம் நிறுத்தின பின்புஞ் சென்று தழுவுவாரைக் கோட்டிடத்தே சாம்படி குத்திப் பின் சென்று தழுவுவாரைப் பெருமல் நின்ற சிவந்த நிறத்தையுடைய ஏறு, உயிர் குறைகின்ற நாளிடத்தே அவர் பின்னே சென்று குற்றத்தைச் செய்து துகைத்து[1] உயிரை யுண்ணும் கூற்றுவனைப் போன்றது."

[1] வருத்தி.



"கோபத்தோடே வெவ்விதாய்த் தன்மேலே சென்ற சிவந்த ஏற்றைச் செவியடியிற் கொம்புகளைப் பிடித்துக் கொண்டு காயாம்பூமாலை அணிந்த பொதுவன் தழுவினன்"*

## முல்லை நிலத் தோற்றம்

"பொருள்வயிற் பிரிந்தாரை எதிர் ஏற்கும் கற்புடை மாதரைப் போலச் சடுதியாக முழங்கிக் கடல் சூழ்ந்த உலகம் முழுவதும் மகிழ முகிற்கூட்டங்கள் பருவகாலத்தே மழை பெய்தன. கார்காலம், பெரிய கடலிடத்தே நீரை உண்ட முகிலாகிய விதானத்தைக் கட்டி, இந்திர வில்லாகிய தூணை அழகு பெற நாட்டி, விளங்குகின்ற மின்னலாகிய விளக்கை மாட்டி, ஆலாங்கட்டியாகியவெண் மணலை அழகுபெறத் தூவி, அழகிய முழக்கத்தை முரசு போல் அதிர்த்து, பெரிய தண்ணியதுளிகளைச் சொரிந்து, வேனிலைத் தாங்குதலால் மேனி வாடிய பூமியை முழுக் காட்டும். இவ்விடத்தே பலரும் விரும்பும்படி தொலைவிற் பொருள் தேடப்பிரிந்து பொன்னுபரணங்களாகிய செல்வத்தோடு இருட்காலத்தே வந்த இனிய உயிர்க்காதலனை அடைந்த ஆபரணமணிந்த பெண்களின் இடைபோலப் பெரிய அழகிய கொடிகளை அயலே பரப்பி அப்பெண்களின் பற்கள் போல முல்லைகள் அரும்புகளைப் பரப்பிகின்றன. அவற்றினயலே குரவும் தளவும் குருந்தும் வெண்காந்தளும் அரவின் பல்லுப் போல அரும்பின. அவை அவிழ்கின்ற பதம் பார்த்து வண்டுகள் ஊதின. இவ்வாறு கார் காலத்தே அழகு பெற்ற கானம், அழகிய எல்லையை யுடையதாகி, உறங்குகின்ற பிடிகளின் விசாலித்த கைகள் ஒருங்கே நிரைத்தன போல் வளைந்த கதிருயுடைய தினையும் சோளமு முடையதாயிருக்கும். கவைத்தகதிருடைய வரகும், கார் எள்ளும், புகர் நிறப்பூவுடைய அவரை

* கலி.

யும் தொங்குகின்ற குலையுடைய பயறும், உழுந்தும், கொள்ளும், கொழுந்துடைய துவரையும், தோரை நெல்லும், பிறவும் அளவிடப்படாமல் விளைந்திருக்கும். உயர்ந்த மலையின் அருகாமையில் பெண்மரையா பால் சுரந்து ஒழுக்கி வெள்ளிய பூவுடைய முசுண்டையின் பசிய குழையை இரலை மேயும். சிறிய பெண்மானைத் தழுவிய முறுகிய மருப்புடைய ஆண்மான், செறிந்த இயல்புடைய காயாவும் பெரிய கொன்றையும் பிடாவின் தலையுடன் பின்னி மலர்ந்த பூவுடைய முல்லைநிலத்தில் பகற்காலத்தில் துயிலும்; விரிந்த புள்ளியுடையமான் கூட்டம், ஆட்டுக் கூட்டத்தோடு விளையாடும். பூங்கொத்துகளுடைய சோலையிடத்தும் நல்ல சிறந்த பண்டங்களோடு பலர்கூடி அவையிற்றை நகரத்தாருக்கு விற்பர். பல ஆக்களின் பாலைப் பெறுகின்ற வாழ்க்கையுடைய கோவலர் இவ்வகை முல்லை நிலத்தில் கூடியிருப்பர்." (பெருங்கதை)

## மருத நில மக்கள்

கடற்கரைக்கும் முல்லை நிலத்துக்கும் இடையே கிடக்கும் நிலம் வயல்களாகவிருந்தன. பழைய கற்காலத்துக்குப்பின் அங்கு வாழை, நெல், கரும்பு முதலிய பயிர்கள் உண்டாக்கப்பட்டன. இவ்விடத்தில் மனிதன் நிலத்தை உழுது தானியங்களை உண்டாக்கவும், ஆறுகளிலிருந்து வயல்களுக்கு நீர்பாய்ச்சவும் பழகிக்கொண்டான். வெள்ளத்தை இவ்வகையாக ஆண்டமையின் இவனுக்கு *வெள்ளாளன் என்னும் பெயர் உண்டாயிற்று ஆறுகளுக்குத் தூரத்தே இருந்த மனிதன், மழை நீரைக் குளங்களில் தேக்கி வைத்து, வாய்க்கால் வழியாக அதனைப் பயிர்களுக்குப் பாய்ச்சவும், கிணறுகள், நீரூற்றுகளிலிருந்து நீரைப் பயன்படுத்தவும் கற்றுக்கொண்டான். இவ்வாறு காரை ஆண்டமையின் இவன் காராளன் எனப்பட்டான்.

*வேள் என்பது நிலத்தைக் குறிக்கும் - நிலத்தை ஆள்பவன் என்னும் பொருளில் வேளாளன் என்னும் பெயர் பிறந்தது.



இப்பருவத்தில் மனிதன், மரம், தடிகளால் வீடுகள் அமைத்து அவற்றுள் தானியங்களைச் சேமித்து வைத்தான். தேவைக்கு மீதியான விளை பொருள்களைக் கடல் மீன் உப்பு முதலியவற்றுக்குப் பரதவரோடும், பால், நெய் முதலியவற்றுக்கு ஆயரோடும், கல்லாயுதம், மான் கொம்பு தந்தம், இறைச்சி முதலியவற்றுக்குக் குறவரோடும் பண்டமாற்றுச் செய்தல் அவர்க்கு இலகுவாக இருந்தது. பண்டங்களைப் பிறவிடங்களுக்குக் கொண்டு செல்ல வேண்டியிருந்தமையின், மனிதன் வண்டி செய்யப் பழகிக் கொண்டான். மனிதனுடைய நாகரிகம் படிப்படியே வளர்ச்சியுற்று மருத நிலத்தில் முடிவடைந்தது.

"பசிய கண்ணுடைய எருமை, கன்றை நினைந்து பசிய இலையிடத்து இரங்கிச் சொரிந்த பாலின் நிறமுடைய அன்னமும், நாரையும், அவற்றின் குஞ்சுகளும் வயலிடத்துள்ள ஆரவாரத்துக்கஞ்சி எழும். கரும்பிடத்தில் தொங்கும் தேன் கூட்டினின்றும் தேன், அலர்ந்த செந்தாமரை மலர் மீதுசொட்டும். இத்தோற்றம், அந்தணர் தீ வளர்ப்பதற்கு நெருப்பின் மீது நெய் சொரிவதை ஒக்கும். இவ்வகைச் சோலைகளில் பழுத்த குலைகளுடைய கமுகும், மூங்கிலும், வாழையும், குலைகளை உடைய தெங்கும், பலாவும், குருந்தும், மாவும், புன்னையும், செருந்தியும் பொன் போன்ற பூங்கொத்துகளுடைய புலிநகக் கொன்றையும், இவை போன்ற பிறவும் இடைவெளியின்றி உண்டாக்கப்பட்டிருந்தமையின் ஞாயிற்றின் கதிர்கள் உள்ளே நுழைய முடியாமையினால் பகற் காலத்தும் சோலைகளின் அகத்தே இருள் செறிந்திருக்கும். வயல்களில் தாளிற் படிந்த கனத்த கதிருடைய நெல், வரம்பிற் சாய்ந்து கிடக்கும். பெரிய எருதுகளைக் கொண்டு உழும் உழவரின் ஒலியும், வயலில் வேலை செய்யும் கூலி ஆட்களின் ஆரவாரமும், வயல்களின் இடையிடையே களை பறிப்போரும், பசிய இலைகளிற் கள்ளை வார்த்துப் பருகுவோருமாகிய கடைசியரது பாடலும்,

கிளிகளின் பாடல்களும், மத்தளத்தின் ஓசையும், கிணைப் பறையின் ஆரவாரமும், *மார்ச்சனையுடைய முழவின் ஆர்ப்பும், மடைகளின் வாய்களைத் திருத்தும் மள்ளரின் ஓதையும் இடையீடின்றி எழும்.'' (உதயணன் கதை)

"உழவர், நுகத்திலே எருதுகளைப் பூட்டிப் பெண் யானையின் வாயை ஒத்த வளைந்த வாயுடைய கலப்பையின் உடும்பின் முகத்தை ஒத்த பெரிய கொழு மறையும்படி அமுக்கி உழுது விதைகளை விதைப்பர். பயிர்கள் விளைந்து அறுக்கும் பருவத்தை அடைந்தபோது, அவற்றுள் தங்கும் குறுகிய காலினையும், கரிய கழுத்தினையுமுடைய காடை, பறக்கலாற்ருதனவும் கடம்பின் பூப்போன்ற நிறமுடையனவு மாகிய தன் குஞ்சுகளைக் கூட்டிக்கொண்டு, காட்டிடத்தே சென்று தங்கும்.

"கொல்லனது முறிந்த குறட்டினை ஒத்த காலையுடைய நண்டின் புற்றுச் சிதையும்படி கோரைப் புல்லைக் குத்தி எடுத்த மண் கிடக்கின்ற கொம்புடைய கரிய எருதுகள், பெரிய வயல்களிடத்தே நின்று போர் செய்யும். அதனூற் சேருடிய நிலத்தை ஒக்க மிதித்து உழவர் நாற்று முடிகளை நடுவர். வயல்களில் களை பறிப்போர் நெய்தற் பூவைச் சூடி வெறுத்தாராயின், முள்ளியின் பூவைப் பறித்துக் கோரைப் புல்லின் தண்டைப் பல்லாற் கிழித்து முடிந்த நாரால் தொடுத்த மாலையை ஈருடைய கரிய தலை நிறையும்படி சூடு வர்; சண்பினது காயகத்தே உள்ள பொன்போன்ற தாதை மார்பிடத்தே பூசுவர். இரும்புத்தகடு போன்று திரையாத மெல்லிய தோலினையுடைய வேலைசெய்வோரின் பிள்ளைகள், பழஞ்சோற்றின் திரணையை வெறுத்து, வரம்பிடத்துக் கட்டப்பட்ட புதிய வைக்கோலால் வேய்ந்த கவிந்த குடில் களின் முற்றத்தே அவலிடிப்பர். அவ்வோசையைக் கேட்ட கிளிகள் அஞ்சிப் பறக்கும். இவ்வாறு இடையருத புது

*இனிது ஒலிக்க மேளத்தில் வாய்ப்பூச்சிடும் கரியசாந்து.



வருவாயினையுடையதும், வளைந்த கதிர்களையுடையதுமாகிய கழனியிடத்துக் குளவிக் கூட்டத்தை ஒத்த முற்றின நெல்லுடைய தாள்களைத் தொழிலாளர் அறுத்துப் பாம்புறை கின்ற மருதின் நிழலிற்போரடுக்குவர். துணங்கையாடும் பேய்க் கூட்டம் வெண்துகில் உடுத்து நின்றது போல், சிலந்தியின் வலைகள் போரைச் சூழ்ந்து கிடக்கும். அப்போர்களைக் கடாவிட்ட பின்னர் வைக்கோலையும் கூளங் களையும் பிரித்து, ஈரம் புலரும்படி விட்டு, மேல் காற்றிலே கையால் தூவித் தூற்றின பொலி, மேருவைப்போல் தோன்றும்.

மருதநிலஞ் சூழ்ந்த குடியிருப்புகள் பசுக்கன்றுகளைப் பிணிக்கும் தாம்புகள் கட்டின தறிகள் நடப்பட்ட பக்கத் திணையும், நீண்ட ஏணிக்கும் எட்டாத உயரமும், தலையைத் திறந்து உள்ளே கொட்டப்பட்ட நெல்லினையுமுடைய பழைய குதிர்களையுமுடைய வீடுகளுடையதாகவிருக்கும். தச்சச்சிறுர் செய்த விளையாட்டுத் தேர்களை உருட்டிக் கொண்டு திரிந்த சிறு பிள்ளைகள், தமது தளர் நடையா லுண்டான வருத்தம் தம்மைவிட்டு நீங்கும்படி செவிலித் தாயரிடத்துப் பாலையுண்டு, அவர்களைத் தழுவிக்கொண்டு உறங்குவர். அங்குள்ளார் நெற் சோற்றேடு கோழிப் பேட்டின் இறைச்சிப் பொரியலை உண்பர். யானையின் குரல் போலச் சத்தமிடும் ஆலைகளில் கருப்பஞ் சாற்றைக் கட்டி யாகக் காய்ச்சுவர்.'' (பெரும்பாண்.)

"அகன்ற கழனியிடத்தே பசிய கரும்பின் பாகைக் காய்ச்சுகின்ற கொட்டிலில் நெருப்பின் புகை சுடுதலால் வயலிடத்துள்ள நெய்தற்பூ வாடியிருக்கும். காய்ந்த நெற் கதிரைத் தின்ற எருமைக் கன்றுகள் உயர்ந்த குதிர்களின் பக்கத்தே படுத்துறங்கும். குலையுடைய தெங்கும் வாழையும், காயுடைய கமுகும், மணம் வீசும் மஞ்சளும், மாமரங்களும், நுங்குடைய பனையும், அடி பரந்த சேம்பும், முளைத்த இஞ்சி யும் அக்கழனியிடத்தே செறிந்து தோன்றும். ஒள்ளிய நெற்றி

யுடைய மகளிர், உலருகின்ற நெல்லைத் தின்னும் கோழியை எறிந்த பொன்னாற் செய்த மகரக்குழை, பூண் அணிந்த சிறுர் மனையின் முற்றத்தே கையாலுருட்டும் மூன்று உருளை யுடைய சிறு தேரின் உருளையைத் தடுக்கும்.'' (நெடு நல்வாடை)

''நெருப்பு எரிவது போன்ற தாமரையை இடை யிடையே சேர்த்து அரிந்து குவித்த செங்நெல் அறுக்கும் வேலையாட்கள் கள்ளை அருந்தி, வண்டிச் சக்கரம் சேற்றுள் புதைந்ததாயின் சகடம் செல்லுதற்கு நிலத்தில் போடக் கரும்புகளைத் தெரிந்தெடுக்குமூரன்.'' (அகம் 116)

''[1]களமர், ஆரவாரமுடைய விடியற்காலத்து, ஆட்களை அழைத்து அரவஞ் செய்யும் உழவரது தூற்ருத பொலியி னின்று எழுந்த நொய்ய கூளங்கள் வானத்தை இருண்ட மேகம்போல் மறைக்கும்படி, இருள் புலர்கின்ற விடியற் காலத்து வைக்கோலைப் பெயர்த்து அலைத்துக் கடாவிடுவர். தொழிற் செருக்கால் நேர்ந்த சோர்வு நீங்கும்படி, காற் றடிக்கப் பூத்தவளவிய தளிருடைய மாவின் கிளிபோன்ற காய்க் கொத்துகளைப் பிழிந்து, மாதுளங்காய் முதலியன சேர்த்துப் புளிக்கும் செவ்வி உண்டாகச் செய்து புதுக் குடங்களில் நிறைத்து வைத்த சாரத்தை வெயிலிலே வாடப்போட்ட பனை ஓலையாற்கோலிய தட்டுப் பிழாவில் வார்த்து, மடுவில் மாடு நீர்குடிப்பதுபோல் குடிப்பர்; குடித்து கொள்ளும் பயறும் கலந்து பால்விட்டுச் சமைத்து வெள்ளிக் கோல் வரைந்ததுபோல் தோன்றும் வெள்ளிய கூழை வேண்டிய மட்டும் உண்டபின், நெற்குவியலைச் சூடாகச் சுற்றிப் பொழுது சரிய, மருதின் நிழலில் எருதுகளோடு தங்குவர்.'' (அகம்)

[1] *அரிஞர் யாத்த வலங்குதலைப் பெருஞ்சூடு*
*கள்ளார் வினைஞர் களந்தொறு மறுகுந் தண்ணடை*
*தண்ணடை-மருதநிலத்தார்.* (அகம்-84)



''கடைசியர் காலையில் முடியிடத்தே வைத்து முடிந்த பூக்களைக் களைவர். களைந்து தலையிடத்தே நாற்று முடிகளைச் சுமந்து வயல்களுக்குச் செல்வர்; சென்று கள்ளை உண்டு களித்துப் பண்ணோடு பாடுவர். செங்நெற் கதிரோடு அறுகும், குவளையும் கலந்து தொடுத்த மாலையை மேழியிற் சூட்டி ஏர்பூட்டி உழுவோர், [1]ஏர் மங்கலம் பாடுவர். நெல்லை அரிந்தோர், சூட்டைக் கடாவிட்டு, [2]முகவைப் பாட்டைப் பாடுவர். கிணைப் பொருநர் தெளிந்த ஓசையுடைய கிணைப் பறையைக் கொட்டுவர். உழவர், இரப்பவர் சுற்றத் தையும், புரப்பவர் சுற்றத்தையும் உழவிடத்தே விளைப்பர்.'' (சிலப்.)

''வயலிடத்து மயில் உதிர்த்த இறகை, உழவர் சூட் டோடு திரட்டும் வயல்களையும், கொழுவிய மீனையும், மிக்க கள்ளையு முடையோன்.'' (புறம் 13)

''விளைந்த வயல்களில் விழும் புள்ளை ஓட்டுவோர் பனங் கருக்காகிய விறகால் மீனைச் சுட்டு மது அருந்துவர்.'' (புறம் 29)

## மருத நிலத்திலுள்ள பாணர் குடியிருப்பு

''வலை வீசுவோர், [3]வஞ்சிமரமும் காஞ்சிமரமுமாகிய வெள்ளிய கொம்புகளைக் கைகளுக்கு நடுவே கலந்து வைத்து, மூங்கிற்கோலை வரிச்சாக நிரைத்து, தாழை நாரால் கட்டி, தருப்பைப் புல்லால் வேய்ந்த குறுகிய இறப்பை யுடைய குடில்களில் வசிப்பர். முற்றங்களில் மீனை வாரி

[1] *ஏர்பூட்டிப்பாடும் மங்கலப்பாட்டு.*
[2] *சூடடிக்கும்போது பாடும் பாட்டு.*
[3] *வேழ நிரைத்து வெண்கோடு நிரைஇத்*
*தாழை முடித்துத் தருப்பை வேய்ந்த*
*குறியிறைக் குரம்பைப் பறியுடை முன்றில்* (பெ-பாண்)

எடுக்கும் பறிகள் கிடக்கும் புன்னைக் கொம்பர்களை வெட்டி இடப்பட்டதும், மேலே படர்ந்த சுரையின் காய்கள் தொங்கப் பெறுவதும் மணல் பரப்பியுள்ளதுமாகிய பந்தரின் கீழே இளையோரும் முதியோரும் கூடியிருப்பர்; பின், கயலும் இருலும் பிறவும் ஆழ்ந்த குளங்களைக் கலக்கி மீன் பிடிப்பர். வளைந்த குடுமியுடைய வலைவீசும் இவர்கள் கோடை காலத்தும் வற்றுதலறியாத குளங்களில் கரையைக் காத்திருப்பர்.

"அவர்கள், குற்றுத கொழிய லரிசியைக் கழியாகத் துழாவிக் காய்ச்சிய கூழை அகன்ற வாயுடைய தட்டுப் பிழாவிலே உலரவாற்றிப் புற்றும் பழஞ்சோற்றை ஒத்த புறமுடைய நென் முளையை இடித்துச்சேர அதிலே கலந்து இனிமை பிறக்கும்படி இரண்டு பகலும் இரண்டு இரவும் அரியாமல் வைத்துச் சாடியின் கண்ணே முற்றின வெவ்விய நறிய கள்ளை மீன் சூட்டோடு அருந்துவர்.

"தூண்டிலிற் கோக்கும் இரையிட்டு வைக்கும் தோற் பையையுடைய, மீனைத் தப்பாமற் பிடிக்கும் பாணசாதியினன் மூங்கிற் கோலின் தலையிற் கட்டின கயிற்றிடத்தே தூண்டிலைக் கொளுவி அது மறையப் பொதிந்த இரையைக் கவர்ந்து அகப்படாதுபோன வாளைமீன், நீர்க்கணித்தாய் நின்ற பிரம்பினது காற்றுலசையும் நிழலை நீரில் கண்டஞ்சும். குளத்திலே தாமரையையும் இந்திர வில்லையும் ஒத்த நிறமுடைய மலர்கள் மலரும்"

(அகம்.)

## நெய்தல் நில மக்கள்

முல்லை நிலத்துக்கு அடுத்தபடியாக நெய்தல் நிலம் குடியேறப் பெற்றது. விசாலித்த நெஞ்சும் வலிமையுமுள்ள நெய்தல் நில மக்கள் கடலிடத்தே படவுகளில் சென்று மீன் பிடித்தனர். இரண்டொரு மரங்கள் ஒன்றுசேர



பிணைக்கப்பட்ட கட்டு மரங்களே அவர்களது முற் பருவத்துப் படவுகளாகவிருந்தன. இந்நிலத்தில் மீனும் உப்பும் மிகுதியாகக் கிடைத்தன. இவற்றைப் பரதவர் மற்ற நிலங்களுக்குக் கொண்டு சென்று, பிற பொருள்களுக்குப் பண்டமாற்றுச் செய்தனர். இதனால் அங்குள்ளார் பெரும்பாலும் வாணிகத்தை மேற்கொள்ள வேண்டியவராயினர். இவர்கள் பொதி மாடுகளிற் பண்டங்களை ஏற்றிச் சென்றனர். இப் பரதவரிலிருந்தே மேற்கே ஆப்பிரிக்கா அராபியா முதலிய நாடுகளுக்கும், கிழக்கே மலாயா சீன முதலிய இடங்களுக்கும் பண்டங்களை நாவாய்களில் ஏற்றிக்கொண்டு சென்று வாணிகஞ் செய்த மாலுமிகள் தோன்றினர்.

"பரதவர் கடலிற் பிடித்த இருலைச் சுட்டுத் தின்பர்; வயல் ஆமைகளைப் புழுக்கி உண்பர்; மணலிடத்தே படர்ந்த அடம்பின் பூவைத் தொடுத்துத் தலையிற் கட்டுவர்; நீரில் நிற்கும் ஆம்பற் பூவைப் பறித்துச் சூடுவர்; ஆட்டுக்கிடாய்களையும், கவுதாரிகளையும் பொருது விளையாடுதற்குக் கொண்டு சென்று அகன்ற மன்றிடத்தே கூடுவர்.

"சிவந்த தலையுடைய பரதவர், நிறையுவா நாளிலே மீன் பிடித்தற்குப் போகாது தழையுடுத்த கரிய தம் மகளிரோடு திரளுவர்; திரண்டு நெடிய தூண்டிற் கோல்கள் சார்த்தியிருக்கும் குறுகிய இறப்பையுடைய கடற்கரைக் குடியிருப்பின் நடுவில் நிலவு சேர்ந்த இருளைப்போல வலை கிடந்து உலரும் மணலுடைய மனையின் முற்றத்தில் சினையுடைய சுறுவின் கொம்பை நடுவர்; நட்டு அதனிடத்து ஏறிய வலிய தெய்வங்காரணமாக, விழுதுடைய தாழையின் அடியிடத்தே நின்ற வெண்டாளியின் பூவை அணிவர்; தாழையின் மலரைச் சூடுவர்; பனையின் கள்ளை உண்டு ஆடுவர். பின் கடலாடியும், உப்புப் போக ஆற்று நீரிலே குளித்தும், நண்டுகளை ஆட்டியும், திரையிலே விளையாடியும் பாவைகளைப் பண்ணியும் பகற் பொழுதைக் கழிப்பர்.

"கடலருகே இருக்கும் பரதவருடைய அகன்ற தெருவிடத்தே அரிய காவலையுடைய பண்டசாலை உண்டு. பண்டசாலையில் திரண்டு கடலில் ஏற்றுதற்குக் கொண்டு வந்த பண்டங்களும், கடலிலிருந்து இறங்கிய பண்டங்களும் சுங்கங்கொள்வதற்கு முத்திரை பொறித்துப் பண்டசாலைக்குப் புறம்பே அடுக்கப்பட்ட பண்டங்களும் மலைபோல் குவிந்து கிடக்கும்.[1] சுங்கங் கொள்வோர் எப்பொழுதும் ஓய்வின்றிச் சுங்கங் கொள்வர். பண்டசாலையின் முற்றத்தே ஆண்நாய், மேழகக்கிடாயோடு மூடைகளிலேறிக் குதித்து விளையாடும்." (பட்டினப்பாலை)

"வானை முட்டும் மாடத்திலுள்ள பரதவர்மகளிர் அரையிடத்தே உடுத்த மெல்லிய துகிலசையத் தோகை மயில்களைப் போலக் காலிடத்தனவாகிய சிலம்புகள் ஒலிக்க, நூலால் வரிந்த பந்துகளை அடித்து விளையாடுவர். பின், முத்தை ஒத்த வார்ந்த மணலிலே கையிற் புனைந்த வளைகள் அசையப் பொன்னால் செய்த கழங்கைக்கொண்டு மெத்தென விளையாடுவர்.

"ஆகாயத்தே திரிகின்ற தேவர் உலகுக்கு முட்டுக்காலாக ஊன்றிவைத்த ஒரு பற்றுக் கோடுபோல விண்ணைத் தீண்டும் வெளிச்சவீடு, ஏணி சார்த்தி ஏறுவதற்கு அரியதாயும், தென்னங் கிடுகு முதலியவற்றால் வேயாது சாந்திட்டு மூடப்பட்டதாயும், இராக்காலத்தே கொளுத்திய விளக்கு விளங்குகின்றதாயும் இருக்கும். கடலிடத்தே செல்வோர், இக்[2] கலங்கரை விளக்கத்தைக் கண்டு, துறைமுகத்தை அறிந்து தங்குவர். தென்னங் கீற்றுகளால் வேய்ந்த மலைபோன்ற தனி வீடுகள் காணப்படும். முற்றங்

[1] *நீரி னின்று நிலத்தேறவும்*
*நிலத்தி னின்று நீர்ப் பரப்பவும்*
*புலிபொறித்துப் புறம் போக்கி*
*மதிநிறைந்த மலிபண்டம்* (ப. பாலை)

[2] *இலங்குநீர் வரைப்பிற் கலங்கரை விளக்கமும்* (சிலப்)



களில் மஞ்சட் செடிகளும், பூஞ்செடிகளும் வளரும். அங்குள்ளோர் பலாப்பழத்தையும், இளநீரையும், வாழைப்பழத்தையும், நுங்கையும், வள்ளிக்கிழங்கையும் நுகர்வர்." (பெரும்பாண்)

உமணர், பாத்திகளிலே கடல்நீரை விட்டு, பளிங்கு போன்ற உப்பை விளைவிப்பர். விளைந்த உப்பைக் குவியல் குவியலாக வாரிக் குவிப்பர். இங்ஙனம் குவிக்கப்பட்ட உப்பைச் சகடங்களில் ஏற்றிச்சென்று, முல்லை, குறிஞ்சி, மருதம் முதலிய நிலமக்களுக்கு விற்பர். இவ்வாறு செல்லும் உமணச் சாத்தரது செலவு சங்க நூல்களுள் அழகாகச் சொல்லப்படுகின்றது.

"உமணர், தொத்தளிப்பாயால் வேய்ந்த வட்டமான கூடாரமுடைய வண்டிகளில் உப்பை ஏற்றிச் செல்வர். வண்டியின் முன் புறத்தே கோழிக்கூடுகள் கிடக்கும். மேலே கூடாரத்தில் தொங்கும் உரல்போன்ற உறியில் புளியங்காய், நெல்லிக்காய் முதலியன ஊற விட்ட காடிப்பானை கிடக்கும். வேப்பிலையைக் குழந்தைக்குக் காவலாகக் கையிடத்தே வைத்திருப்பவளும், குழந்தையைக் கையிடத்தே கொண்டவளுமாகிய உமணப் பெண், எருதை முதுகிலே அடித்து ஓட்டுவாள். தழையால் கட்டின மாலையும் பெரிய வலிய இறுகின தோளும், முறுக்குண்ட உடம்புமுடைய உமணர், சிறிய துளையையுடைய நுகத்தில் பெரிய கயிற்றாலே எருதுகளை ஒரு முகப்பட நிரைத்துக் கட்டி, இளைத்தால் பூட்டுதற்குப் பல எருதுகளைக்கொண்டு பக்கத்தே செல்வர்; செல்லுமிடத்து உப்பின் விலையைக் கூறுவர்." (பெரும்பாண்)

"உவர் நிலத்தே விளைந்த உப்பின் விலையைக் கூறிப் புழுதியுடைய வழியால் தொலைவிடத்தே செல்வோரும், கையிடத்திற் கோலுடையருமாகிய உமணர் கூட்டமாகச் செல்வர். சென்று வளைந்து சுருண்ட கொண்டை அசைய

வும், அரையில் கட்டிய பல தழைகளாலான உடை தளர வும் 'நெல்லுக்குப் பதில் உப்புக் கொள்ளீரோ' எனச் சேரி-கள் தோறும் நுவலுவர்."[1] (அகம் 390)

"உயர்ந்த திரையுடைய கடற்பரப்பில் திமிலோன் தூண்டிலிற்பிடித்த மீனை, தழையுடையுடைய பெண்கள் விழாக்கொண்டாடும் வீதியின் விலைபகரும் கடற்கரைச் சிறுகுடியிலுள்ளவன்." (அகம் 320)

"பொழுது படத் திரையிடத்தே விளையாடிய சிறுமியர் அசைகின்ற நிரைத்த வளையணிந்த கூட்டத்தாரோடு உப்பின் குவியல் மீதேறி, வருகின்ற திமிலை எண்ணும் துறைவன்." (அகம் 190)

பெரிய கடலிடத்து மீன் பிடிக்கும் சிறுகுடியிலுள்ள பரதவர் கரிய கடற்கரை வயலிடத்தே உழாது விளைவித்த வெள்ளிய கல்போன்ற உப்பின் விலையைக்கூறி, மலை நாட்டுக்குச் செல்லும், கோலைக் கையிலுடைய உமணரின் காதன் மடமகள், வளையல் ஒலிக்கும்படி கைவீசி 'நெல் லுக்குப் பதில் உப்பு' எனச் சேரியிடத்தே விலை கூறுதலின் வீட்டிற்கிடந்த நாய், அவ்வோசையைக் கேட்டுக்குரைப்ப அவள் அதற்கு அஞ்சினுள்." (அகம் 140)

"பெரிய கடலினின்றும் எம் தந்தை கொணர்ந்த கொழுத்தமீன் கருவாட்டைக் கவரும் புட்களை மணலு டைய புன்னை நிழலிலிருந்து ஒப்பியும் சிவந்த நண்டின் ஒடுங்கிய வளையைக் கிண்டியும், ஞாழல் மரத்தின் உயர்ந்த கொம்பிலும், கழியிடத்திலுள்ள வளைந்த தாழையிலும் பிணித்த ஊசல் ஆடியும், கீழ்காற்று மணலைக் கொணர்ந்து குவிக்கின்ற கடல் முகத்தே ஆயத்தோடே வெள்ளிய திரை யுடைய கடலாடியும், அழகிய பூவோடுகூடிய தழையுடுத் தும் அணித்தேயுள்ள பலவகைப் பூக்களுடைய சோலையில்

[1] *உப்பை மாறி வெண்ணெற் றரீஇய*
*உப்பு விளை கழனி சென்றனள்* (குறுந்)



வருதலாகிய கௌவையை, பேயுடைய இவ்வூரிடத்துக் கொடியவற்றை அறிந்து கூறும் பெண்டிர் சொல்லக் கேட்டு அன்னை நின்னைக் காவல் கொண்டாள்." (அகம்)

"புலவுமீன் வெள்ளுணங்கற் புள்ளோப்பிக் கண்டார்க்
கவலநோய் செய்யு மணங்கிதுவோ காணீர்."
"கடல்புக்குயிர் கொன்று வாழ்வர் நின்னையர்"
"ஓடுங்திமில் கொண்டுயிர் கொல்வர் நின்னையர்"
"கள்வாய் நீலங் கையினேந்தி
புள்வா யுணங்கற் கடிவாள்" (சிலப்பதிகாரம்)

## பாலை நில மக்கள்

பாலை நிலம், மனிதன் குடியேறி வாழ்வதற் கேற்ற வாய்ப்புடையதன்று. வேட்டையாட விலங்குகளைத் துரத்திச் செல்லும் எயினர் அவ்விடத்தில் சில காலங் தங்குவதுண்டு. அவர் கொடிய நெஞ்சுடையர்; பாலைநிலவழியே செல்-வோரை வழிபறித்துண்ணும் வாழ்க்கை உடையர். அவர்-கள் முல்லை நில ஒதுக்குகளிலும், குறிஞ்சி நில ஒதுக்கு களிலும் மனைவி மக்களோடு வாழ்வர்.

"எயினர்களது குடில்கள் அணிலும் எலியும் நுழை யாதபடி ஈந்தின் ஓலையால் வேயப்பெற்று, முட் பன்றியின் முதுகுபோலத் தோன்றும். பிள்ளையைப்பெற்ற எயிற்றி குடிலின் ஒரு புறத்தே பிள்ளையோடு மான் தோலாகிய படுக்கையில் முடங்கிக் கிடப்பாள். மற்றைய எயிற்றியர் [1]கரம்பை நிலத்தைப் பாரையாற் கிண்டி, எறும்பு சேர்த்து வைத்திருக்கும் புல்லரிசியை வாரி எடுப்பர். எடுத்துப் பார்வைமான் கட்டி நிற்கும் விளவின் நிழலுடைய முற்றத்தே தோண்டிய நிலவுரலில் சொரிந்து குறிய உலக்கையினுற் குற்றுவர்; ஆழ்ந்த கிணற்றில் மொண்ட உவர் நீரை ஒறுவாய் போன பானையில் உலையாக வார்த்து

[1] *பாழ்*

முறிந்த அடுப்பில் வைத்து ஆக்கிய சோற்றை இறைச்சி வற்றலோடு தேக்கிலையில் இட்டு உண்பர்.

"எயினரின் அரணிடத்தே உள்ள அகன்ற வீடுகளில் பகைவரைக் குத்திய கூரிய வேல்களும், பரிசைகளும், அம்புக்கட்டுகளும், விற்களும் நிரையாகச் சார்த்திக் கிடக்கும். உயர்ந்த மதில்கள் ஊகம்புல்லால் வேயப்பட்டிருக்கும். தலை வாயில்களில் தேன்கூட்டைப் போன்ற அம்புக் கட்டுகளுடன் துடியும் தூங்கும். வீட்டு வாயிலில் சங்கிலியால் கட்டப்பெற்ற நாய்கள் நிற்கும். இவ்வகைக் குடியிருப்பு முள் வேலியினையும் அதனைச் சூழ்ந்த காவற் காட்டையும் உடையதாக விருக்கும். வாயிலிடத்தே நீண்ட முனையுடைய கழு மரங்கள் நிரையாக நாட்டப் பெற்றிருக்கும். அங்குறைவோர் நெற் சோற்றையும், நாய் வேட்டையாடிக் கொணர்ந்த சங்குமணி போலும் முட்டையுடைய உடும்பின் பொரியலையும் உணவாகக் கொள்வர்.

"இம்மறக் குடியிலுள்ள சூற்கொண்ட மகளிர் யானை எதிர்ப்படினும் வலிய இடி இடிப்பினும் அஞ்சார். வலிமையால் கொள்ளை கொண்டுண்ணும் உணவினை யுடையவனும் வாட்போர் செய்யும் குடியிற் பிறந்தவனும், புலியின் மீசை போன்ற தாடி யுடையவனுமாகிய மறவன் அந் நிலத்துத் தான் குறிவைத்த விலங்கைத் தப்பாமல் பிடிக்கின்ற வேட்டை நாய் போலக் காவலுடைய முல்லை நிலத்தே போவான்; போய் அந்நிலத்தவரின் பசுக்களை அடித்துக் கொண்டு வந்து விடியற் காலையிற் கள்ளுக்கு விலையாகக் கொடுப்பான். பின், வீட்டிலே நெல்லாற் சமைத்த கள்ளையுண்டு மன்றிடத்தே வலிய கிடாயை அறுத்துத் தின்று, மத்தளம் முழங்க இடத்தோளை வலப் பக்கத்தே வளைத்து நின்றுடுவான்." (பெரும்பாண்)

"செம்மறிக் கிடாயின் கொம்புபோல் முறுகிப்பிடரியிடத்தே தொங்கும் மயிரும் சிவந்த கண்ணுமுடைய மறவர், இருமல் தீர்க்கும் மருந்தோடு நெருப்பிற் கருகிய வயிரிய கோலோடு வில்லைப் பிடித்து நுரை தெறித்த மத்துகள் செருகிக் கிடக்கும் இடத்தே நிற்கும் நிரைகளின் புறத்தே, காலில் கட்டிய செருப்பு ஒலிக்கும்படி சென்று காவலுடைய இடத்தே கன்றுகளோடு நிரையைக் கவர்ந்துகொண்டு செல்வர்." (அகம்)



"பாலைநிலத்தில் அரத்தின் வாய்போன்ற பரற்கற்கள் நிறைந்து கிடக்கும். அம் மேட்டு நிலத்தே வட்டமாகிய மதில் சூழ்ந்திருக்கும். அவ்விடத்துக் காளிக்குப் பலியாக அங்கு வாழ்வோர், கொடுத்த சிவந்த இறைச்சியினின்றும் ஒழுகுகின்ற இரத்தமும் பசிய நிணமும் கொழுவிய குடரும் எட்டுத் திசைகளிலும் சிந்திக்கிடக்கும். வேம்பின் கிளைகளில் வேர்களாற் கட்டிய ஊசல்கள் தொங்கும். வழிபடுவோர் பலியாகப் பறித்து வைத்த கண்களாகிய விளக்கு பிரகாசிக்கும். மான் கொம்பும் மயிலிறகும் தோரணங்களாகத் தொங்கும். திரண்ட மூங்கிலிற் கட்டிய கொடி அசையும். பச்சைக் கிளி போன்றவளாகிய காளி, கேடகமும், வாளும், அம்புக்கட்டும், எண்வகைப் படைகளும் ஆகிய இவற்றைத் தரித்திருப்பாள். முத்துப் போன்ற பல்லும் கயல் போன்ற மதர்த்த விசாலித்த கண்ணும், சிலையை ஒத்த புருவமுமுடைய காடுகெழுசெல்வி கலையை வாகனமாகக் கொண்டு கல்லால் எடுத்த மதில் சூழ்ந்த ஆலயத்தில் வீற்றிருப்பாள். வில்லையுடைய மறவர் அக் கோயிலின் ஒரு புறத்து ஒதுங்கியிருந்து அவ்வழியே செல்லும் வணிகர் கூட்டத்தை அடித்துப் பறிப்பர். நடுகற்களிற் றடியைக் கோத்துப் பசுக்களை அகப்படுத்தி வைக்கும் இடங்களும், ஆட்களைக் கொன்று பிணங்களை மூடிக் குவித்திருக்கும் கற்குவியல்களும், ஒன்றோடு ஒன்று பின்னிய பற்றைகளுடைய மலைகளும், வெட்டிய கால்களை இட்டு வைத்திருக்கும் குழிகளும், தலைகளை மறைத்து வைக்கும் புல்லும், பொந்துகளும், வெளியாகிய சவர் நிலங்களும், நீரில்லாத

ஆறும், முடிவடையாத வழியும், ஊரில்லாத காடும், வழியுடையனவாய்ப் பின் வழியின்றியிருக்கும் நிலங்களும், சுனைவற்றிய பரவை நிலமும், பரற்கற்களாலாகிய குன்றுகளும், இவ்வாறு இயற்கையாகவும், செயற்கையாகவுமமைந்து ஒன்று போல் அளவு காணற்கரியன பலவாய்க் குளிர்காலத்தும் வெப்பமுடையவாகிய இடங்களுண்டு.

"ஓமை, உழிஞ்சில், உலவை, உகாய், கடு, தான்றி, கொடிய முள்ளுடைய தொடரி, நாகம், அரசு, ஆர், ஆத்தி, இருள், இண்டம், குரவு, கோங்கு, கள்ளி, கடம்பு, முள்ளி, முருக்கு, பலாசு, திரண்ட காலுடைய எருமை, இலவு, இனிய காயுடைய நெல்லி, வாகை முதலியவும் பிறவுமாகிய வயிர மரங்கள் காய்ந்திருத்தலின் மயிலும், குயிலும் அவற்றினிடையே செல்லா. நுண்ணிய பொறியுடைய புறவின் சிவந்த காலுடைய சேவல் வெள்ளிய சிறகுடைய பேட்டோடு விளையாட்டு விரும்பி, வலிய கூழாங்கற்களை விழுங்கிப் பொரிகின்ற கள்ளியின் கவர்பட்ட கொப்பில் இருந்து, தொலைவில் ஓசை கேட்கும்படி கத்தும். தோலாகிய முலையுடைய காட்டுப் பன்றியின் பிணை மெலிந்த நடையுடைய யானையோடு உலர்ந்த மரலையுண்டு விடாயினால் கானல் நீரிடத்து ஓடும். நெருப்புப் போன்ற பசி நீங்காத செங்குரங்கு கையிடத்தே மகவைத் தழுவிக் காஞ்சிரையின் இலையிற் சிந்திக்கிடக்கும் தேனைக் கையினால் தொட்டு நக்கும். அயலே இருந்த கடுவன் அதைப் பார்த்துப் பொருது காஞ்சிரையின் கிளையிலிருந்த தேனை ஊட்டி, அதன் தாகத்தைத் தணிக்கும். வெப்பமுடைய மலைச் சாரலிலுள்ள மூங்கிலின் உதிர்ந்து விளங்குகின்ற முத்தை, மழைத் துளியெனக் காட்டுக் கோழியின் சூடுடைய சேவல் அலகாற்குத்தி எடுக்கமாட்டாது தத்தி நின்று தளரும். கன்றினைத் தழுவிய பெரிய அடியுடைய கரிய பிடி ஈரம் உலர்ந்த நாருடைய முருங்கையின் வெள்ளிய பூவாகிய உணவை வெறுத்து, நெல்லியின் பசுங்காயைப் பல்லுடைய கொடுப்பிடத்தே அடக்கிக்கொண்டு, வழிச் செல்லும் புதியோர் சேற்றைத் தோண்டித் தழையால் மூடிய பள்ளத்தில் உலாவும். சிவந்த தளிருடைய இருப்பையின் பசிய பூங்கொத்துக்களை விரும்பித் தொங்கும் வௌவால், பல பக்கங்களிலும் நெருங்கிப் பறக்கும்."



(உதயணன் கதை)

"அம்பை எய்யும் வில்லைக் கையிலேயுடைய மறவர் குடியிற் பிறந்த தெய்வமேறி ஆடுபவள், தனது ஊர் நடுவேயுள்ள மன்றிடத்துத் தெய்வத் தன்மையுற்று மெய்ம்மயிர் சிலிர்த்து, நிமிர்த்திய கைகளை ஒற்றையும் இரட்டையுமாக அவிநயத்தோடே கூட்டித் தாளத்துக்கு ஒப்ப அடி பெயர்த்துக் கானவர் வியப்ப ஆடினாள். ஆடிக் கூறுகின்றாள் :—

"முன்சொல்லிய நுங்கடன் கொடாமையின் வலிய வில்லையுடைய எயினர் மன்றுகள் இன்று பாழ்பட்டன;* ஊர்களிற் றிரண்ட நிரைகள் மிக்கன. கொற்றவைக்குப் பரவுக் கடன் கொடாமையின் இம் மறக்குடியில் தாயம் பற்றிவருகின்ற எயினர், தமக்கு முறைமையாகி வருகின்ற ஆறெறி சூறை, ஆகோள் முதலியவற்றால் விளையும் செல்வங்குன்றி, அறக்குடிகளைப் போலச் சினங்குறைந்து, செருக்கு அடங்கினர். கலையாகிய ஊர்தியையுடைய செல்வி தான் கொடுத்த வெற்றிக்கு விலையாகிய உயிர்ப்பலியை உண்ணக் கொடுப்பினன்றி நுஞ்சிலைக்குரிய வெற்றியைக் கொடுப்பாளல்லள். களவு கொண்டுண்ணும் ஊணையுடைய மக்காள்! நுஞ் சுற்றத்தார் மதுவுண்டு செருக்கும் இவ்வாழ்க்கையை விரும்புவீராயின் செல்விக்கு நேர்ந்த பரவுக் கடனைக் கடிதிற் கொடுமின்.

"அதனைக் கேட்ட, தந்தலையைத் தாமே பலியாக அரிந்து வைக்கும் எயினர், தொல் குடியிற் பிறந்த தேவ

* கொள்ளையிடாமையால் அயற் கிராமங்களில் நிரைகள் மிக்கனவாயின என்றவாறு.

ராட்டியின் நெளிந்த கூந்தலைச் சடையாகக் கட்டி, அம் முடியிலே சிறிய வெள்ளிய அரவின் குட்டியாகப் பொன் நாணினை வளையச் சுற்றிக் காவற் காடு சூழ்ந்த தோட்டப் பயிரை அழித்த பன்றியின் கோட்டைப் பறித்து, அதனை இளைய வெள்ளிய பிறையெனும்படி சாத்தினர்; தறுகண்மை யுடைய வலிய புலியின் வாயைப் பிளந்து உதிர்த்த பல்லை வெள்ளிய மாலையாகத் தரித்தனர். அதனது வரியும் புள்ளியு முடைய தோலை மேலே மேகலையாக உடுத்தனர். வில்லைக் கையிற் கொடுத்தனர். கொடுத்து அவளை முறுகிய கோடுடைய கலைமீதிருத்தினர். பின்பு பறையைக் கொட்டி அவளை வழிபட்டனர்.

"மாற்றாரின் சீறூரிடத்து நிரை கவர்தற்கு வீரர் வெட்சி மாலையைச் சூடினர்; கொற்றவையின் கொடியை முன்னே உயர்த்திச் சென்றனர். பகைவரின் காட்டிடத்தே அவர்க்கு நேரும் தீமைக்கு அறிகுறியாக கரிக்குருவி குரல் எழுப்பிற்று. இவ்வாறு சென்று கவர்ந்து கொணர்ந்தபசுக்களை வேல் வடிக்கும் கொல்லனும், துடிகொட்டும் புலையனும், பாணரும், புள்ளின் நிமித்தத்தை ஆராய்ந்து சொன்னோரும் ஆகிய இவர்களுக்குப் பகுந்தளித்தனர்; பழங் கடன் கொடாமை யின் கட் கொடாத கள் விற்கும் அவளுக்கும் கொடுத்தனர்."

(சிலப்பதிகாரம்)

"வரிந்து கட்டின வில்லும், கடைகுழன்றமயிரும் புலி போன்ற பார்வையும், தறுகண்மையுமுடைய மறவர் வழிச் செல்வோரிடத்திற் பெறும் பொருளில்லையாயினும், தங்கள் அம்பு பட்டு அவர் பதைப்பதைக் கண்டுமகிழ்வர். அவர் களின் தாடி, முறுகிய மான்கொம்பு போன்றது." (கலி)

## தொழில் பற்றிய சாதிகள்

மக்கள், தாம் வாழ்ந்த நிலம் பற்றி வேடர், இடையர், எயினர், குறவர், உழவர் முதலிய பெயர்களைப் பெற்றது



போலவே, தொழிலும் ஒழுக்கமும் பற்றி அந்தணர், அரசர், வணிகர் வேளாளர் முதலியவும் பிறவுமாகிய பெயர்களைப் பெற்றனர். நிகண்டு நூல்களிற் காணப்படும் ஒவ்வொரு குலத்தினருக்குரிய பெயர்களும் அவரவர் மேற்கொண்ட தொழில் பற்றி எழுந்தனவென்று இனிது விளங்கும். அந்த ணர், அரசர், வணிகர், வேளாளர் முதலியோர் பெரும்பாலும் நகர்களில் வாழ்ந்தவர்களாவர். அரசனது கருமத்தலைவர், ஆதியோர் இந்நாற்குடியில் அடங்குவர். ஆரியரது பிராமணர் சத்திரியர், வைசியர் சூத்திரர்,[1] என்னும் வகுப்புக்கும் தமிழர் களுடைய நாற்குலங்களுக்கும் தொடர்பின்று. ஆரியருடைய சாதிகள் செய்தொழிலானன்றிப் பிறப்பினுல் தோன்றின. ஆரியர் இந்திய நாட்டையடைந்தபோது அவர்களிடையே சாதிப்பிரிவு ஏற்படவில்லை. மக்களின் நிறத்தைக்கொண்டே அவர்கள் சாதிகளை ஏற்படுத்தினர். அவர்களின் சாதிக்குப் பிறப்பே காரணம். இதனை மனு மிருதி முதலிய நூல்களிற் பரக்கக் காணலாம். மிருதிகளிற் காணப்படும் அனுலோமர் பிரதிலோமர் போன்ற கலப்புச் சாதிகள் தென்னாட்டிற் கிடையா. மிருதிகளிற் காணப்படும் [2]சூத்திரருக்குரிய தருமங்களும், விவிலிய வேதத்தின் பழைய ஏற்பாட்டில் அடிமைகளுக்குரிய தருமங்களாகச் சொல்லப்படுவனவும் ஒரேவகையாகக் காணப்படுகின்றன.

அவ்வந் நிலங்களிலுள்ள மக்கட்குரிய திணைப் பெயர் கள் அவ்வந் நிலங்களிற் பிறத்தலினுலும், பிறர் அந்நிலங் களிற்றங்கி அந்நில மக்கட்குரிய தொழிலைப் புரிவதினுலும் ஏற்படுமென்பது, "பெயரும் வினையும் என்றாரிருவகைய திணைதோறு மருவிய திணை நிலைப் பெயரே" என்னும் தொல்காப்பியச் சூத்திரத்தால் விளங்கும்.

[1]The aboriginal races who had submitted to the Aryan conquerors formed the Sudra caste—*The Civilizatoin of India p 24—R. C. Dutt.*

[2] இந்த முக்குலத்தோர்க்கும் ஏவல் பூண்டொழுகும்
வெந்திற லாளரே வெய்ய சூத்திர ரென்ப (சூடா.)

## அந்தணர்

தமிழ் நாட்டுத் துறவோர் அந்தணரெனப்பட்டனர். அவர் காவி தோய்த்துடுத்த உடையினராய், முக்கோல், மணை, ககரம் ஆகியவற்றை உறியில் வைத்துத் தோளிடத்தே சுமந்து, குடை நிழலிற் செல்லும் செலவினர் எனப் பழந்தமிழ் இலக்கியங்களிற் காணப்படுகின்றது*

அந்தண ரென்போ ரறவோர் மற்றெவ்வுயிர்க்குஞ்
செந்தண்மை பூண்டொழுக லான் ''

எனத் திருவள்ளுவர் அந்தணரின் இயல்பை நீத்தார் பெருமை என்னும் அதிகாரத்திற் கூறுகின்றமையினுலும், அந்தணர் என்போர் தமிழ்நாட்டுத் துறவிகளே என இனிது விளங்கும். துறவிகளாக இருந்த இவ்வந்தணர் அரசருக்குத் தூது செல்லற்குரியர் என்று கூற இடமில்லை.

---

*" எறித்தரு கதிர் தாங்கி யேந்திய குடை நீழ
லுறித் தாழ்ந்த கரகமு முரை சான்ற முக்கோலு
நெறிப்படச் சுவலசைஇ வேருேரா நெஞ்சத்துக்
குறிப்பேவல் செயன் மாலைக் கொளை நடையந்தணீர் ''
(கலி 9)

(இதன் பொருள்) குடையினல் வெயிலைத் தாங்கி உறியிலே வைத்த தண்ணீர்க் கரகத்தையும், முக்கோலையும் தோளிடத்தே சுமந்து செல்லும் இயல்புடைய அந்தணீர்.

" சீர்மிகு சிறப்பினுன் மரமுதற் கைசேர்த்த
நீர்மலி கரகம் போற் பழந் தூங்கு தாழை "

(இ-ள்) தக்கணமூர்த்தி ஆலமரத்தே தாமிருப்பதற்கு முன்னே தூக்கி வைத்த நீர் நிறைந்த குண்டிகையைப் போலப் பழந்தூங்கும்.

"முக்கோலந்ண தர் முது மொழி நினைவார்போல" (கலி 126)

" அந்தணர்—காஷாயம் போர்த்த குழாங்கள் " (நச்-உரை)

கற்றேய்த் துடுத்த படிவப் பார்ப்பான் (குறுங்-156)



கல்வி, அறிவு ஒழுக்கங்களிற் சிறந்து கடவுட் பூசை முதலியன ஆற்றிப் புனித வாழ்க்கையுடையராய், இல்லறத்தின் நின்றோரும் அந்தணர் எனப்பட்டனர். இக்கூட்டத்தினர் பெருகி அந்தணர் என்னும் சாதி யாராயினர்.

" ஐயர் வேதியர் இரு பிறப்பாளர்
மெய்யர் மிக்கவர் மறையோர் பூசுரர்
அந்தணர் நூலோர் அறு தொழிலாளர்
செந்தீ வளர்ப்போர் உயர்ந்தோ ராய்ந்தோர்
ஆதி வருணர் வேத பாரகர்
விப்பிரர் தொழுகுலத்தோர் வேள்வியாளர்
முப்புரி நூலோர் முனிவரென்றிவை
தப்பில் பார்ப்பனர் தம்பெய ராகும்.

என்னும் திவாகரச் சூத்திரத்தால் அந்தணரது தொழில் ஒழுக்கம் ஆதியன இனிது விளங்கும். அந்தணர் தூய ஒழுக்கத்தினராவ ராகையினுலேயே,

" மறப்பினு மோத்துக் கொளலாகும் பார்ப்பான்
பிறப்பொழுக்கம் குன்றக் கெடும் "

என வள்ளுவனர் ஒழுக்கமுடைமை என்னும் அதிகாரத்திற் கூறினர்.

அந்தணர் அரசரிடமிருந்து தூது செல்லுதற் குரியர். இவர் அரசனது உறுதிச் சுற்றங்களில் ஒருவராகவு மிருந்தனர்.

" ஓதலுந் தூதும் உயர்ந்தோர்மேன " என்னும் தொல்காப்பியச் சூத்திரத்திற் சொல்லப்பட்ட உயர்ந்தோர் அந்தணரே. அந்தணருக்கு ஓதல் இன்றியமையாதது.

---

முக்கோலசை நிலை கடுப்ப (முல்லைப் பாட்டு)
" நூலே கரகம் முக்கோல் மணையே
ஆயுங் காலை அந்தணர்க் குரிய " (தொல்-மரபு)

"மறப்பினும் $ ஓத்துக்கொளலாகும்" என்பதில் மறப்பினும் என்ற உம்மையால் பார்ப்பார் ஓத்தை மறத்தல் கூடாதென்பது தேற்றமாகின்றது.

தூதொய் பார்ப்பான் படிவ வெள்ளோலை
... ... ... ... ...
உண்ணு மருங் கிலின்றேன் கையது
பொன்னு குதலு முண்டெனை..." (அகம் 337)

அந்தணரது இயல்பு திருமுருகாற்றுப் படையிற் கூறப் படுகின்றது. அது வருமாறு:—

அந்தணர், * ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல் என்னும் இயல்பிற் குன்ருத, பழைய உயர்ந்த நல்ல குலத் தாய் தந்தையரிடத்துப் பிறந்தோர்; நாற்பத்தெட்டு ஆண்டு பிரமசரியங்காக்கு மியல்பினர்.

பூணூலணிந்ததற்குப் பின் ஒரு பிறப்பும், முன் ஒரு பிறப்பு மாகிய இரு பிறப்புடையர்; தம் வழிபடு கடவுளை அறிந்து துதிபாடு மியல்பினர்; முந்நூல் கொண்டு முப்புரி யாக்கிய மூன்று நூலாகிய பூணூலை அணிவோர்; நீராடு மிடத்துத் தோய்த்துப் புலராத ஆடையை அரையிற் கிடந்து புலரும்படி உடுத்து உச்சியிற் கூப்பிய கையினராய், கடவுளது பெயரை நாப்புடை பெயர உச்சரித்துத் துதித்து, வாசமிக்க மலரைச் சாத்திக் கடவுளை வழிபடு மியல்பினர்.

$-ஓதப்படும் துதிப் பாடல்கள். இன்று ஆலயங்களில் தேவாரம் பாடுவோர் ஓதுவார் எனப்படுதல் அறிக.

* ஓதல் வேட்ட லவை பிறர்ச் செய்த
ஈத லேற்றலென் றாறு புரிந் தொழுகி
யறம் புரியந்தணர் வழி மொழிந் தொழுகி (பதிற்றுப்பத்து)

இவை அறு தொழில்கள்; அறுவகைப் பார்ப்பனப்பக்கமும் (தொல்) என்பதில் வரும் அறுவகை அறுவகைத் தொழிலைக் குறியாது படிப்படியே உயர்ந்த ஆறு வகை (தரம்) களைக் குறிக்கும்.



"......மந்திரத்து வரு
மத்துணை சான்ற வந்தணாளரும்"
"தண்புன லாட்டின் தக்கணை யேற்கு
மந்தணாள ரடைக விரைந்தென"
"செந்தீ யந்தழ லந்தணன் காட்டச்
சேதா நறு நெய் யாசின்று குத்தி"
"அந்த ணாளர் * ஆசிடை கூற
அந்த ணாளரின் வெந்திறல் வீரன்
சொற்றுணைத் தோழன்"

என வரும் உதயணன்கதை அடிகளால் அந்தணர் இயல்புகள் சில அறியக்கிடக்கின்றன. அந்தணர் திருமணச் சடங்கு புரிவோராதல் கலித்தொகையிலும் கூறப் படுகின்றது.

"காதல் கொள்வதுவை நாட் கலிங்கத்து ளொடுங்கிய
மாதர் கொண் மானோக்கின் மடந்தை தன்றுணையாக
வோத்துடையந்தண னெரிவலஞ் செய்வான் போல்
(கலி 69)

அகப்பொருட்டுறையில் வாயில்களில் ஒருவனுகவும் பார்ப்பான் அறியப்படுகின்ருன். பார்ப்பான் என்பதற்கு நன்றுந் தீதும் ஆராய்ந்துரைப்போன்' எனப் பேராசியர் உரை கூறுவர்.

பார்ப்பனர் முருக்கின் தண்டை ஊன்றிச் செல்வரெனக் குறுந் தொகையில் ஓரிடத்திற் சொல்லப்படுகின்றது.

"பார்ப்பன மகனே பார்ப்பன மகனே
செம்பூ முருக்கி னன்னார் களைந்து
தண்டொடு பிடித்த தாழ் கமண்டலத்துப்
படிவ வுண்டிப் பார்ப்பன மகனே (குறுந் 157)

* ஆசிடை = வாழ்த்து
* "பூதியு மண்ணும் பொத்தகக் கட்டும்
மானுரி மடியு மந்திரக் கலப்பையும்"

பெரும்பாணாற்றுப் படை பார்ப்பனர் இல்லங்களைப் பற்றிச் சொல்லுகின்றது. அது வருமாறு:

தலை வாயிலிடத்துள்ள கால்களிற் கன்றுகள் கட்டி நிற்கும். வீடு சாணகத்தால் மெழுகப் பெற்றது. அதன கத்தே வழிபடு கடவுளின் உருவம் காணப்படும். வீட்டி னுள் கோழியும் நாயும் புகா. வளைந்த வாயுடைய கிளி வேதத்தின் இசையைப் பயிலும். வேதத்தை ஓதுகின்ற அந்தணரின் வீட்டில் அருந்ததியை ஒத்த கற்பும், அழகிய நெற்றியும், வளை யணிந்த கையுமுடைய பார்ப்பனி உறை வள். அவள் இராசான்னம் என்னும் நெல்லைக் குற்றிய அரிசியினால் பாற்சோறு சமைப்பாள்; கொம்மட்டி, மாதுளை முதலிய காய்களை வெட்டி மிளகுப்பொடி தூவிக் கருவேம்பின் இலையை இட்டு நெய்யிலே பொரிப்பாள். இவ்வாறு சமைத்த பொரியலோடு மாவடுவின் ஊறுகாயையும் இட்டுப் பசித்து வந்தவர்களுக்குச் சோற்றை அளிப்பாள்.

கபிலர் பாடிய [1] புறநானூற்றுச் செய்யுட்களால் (புறம் 14; 113) அந்தணர் ஊன் புசிக்கும் இயல்பினர் எனச் சிலர் சாதிப்பர். கபிலர் தம்மைப் பாணர் வரிசையில் வைத்துப் பாடினமையில், அங்ஙனம் கூறினரன்றி, அவர் ஊன் புசிப்பவர் என்று கூற இடமில்லை. சங்க

காடுெடு மணையுங் கட்டுறுத் தியாத்த
கூறை வெள்ளுறிக் குண்டிகைக் காவினர்”
(உதயணன் கதை.)

கிழிந்த சிதாஅருடுத்து மிழந்தார்போல்
ஏற்றிரந் துண்டும் பெருக்கத்து நூற்றிகழ்த்
தாமரையன்ன சிறப்பினர் தாமுண்ணின்
தீயுட்டி யுண்ணும் படிவத்தர் தீயவை
ஆற்றுழி யாற்றிக் கழுவுபு தோற்றம்
அவிர்முருக்கந் தோலுரித்த கோலர் துவர்மன்னும்
ஆடையர் பாடி னருமறையர் நீடின்
உருவந் தமக்குத் தாமாய
இருபிறப்பாளர்க் கொரூஉ மாதீதே (தகடூர்-யாத்)



காலத்துச் செய்யுளாகிய பெரும்பாணாற்றுப்படை அந்தண ரின் சைவ உணவைப் பற்றிக் கூறுதலே அவர் ஊன் புசிப் பவரல்லர் என்பதை நன்கு விளக்கும்.

போதாயனர், அபஸ்தம்பர் முதலியோரின் தரும நூல் களில் புசிக்கத் தக்கவும், புசிக்கத் தகாதவுமாகிய பறவை, விலங்குகளைப்பற்றிக் கூறப்படுதலின், வடநாட்டுப் பிராமணர் மாமிச உணவருந்தினர் என்று தெளிவாயறியப் படுகின்றது.

## அரசர்

தமிழ் நாட்டை ஆண்டோர் பரம்பரை வழியில் வரு கின்ற அரசராவர். சேர சோழ பாண்டியர் என்னும் பெரு நிலமன்னரும், இவரது ஆணைக்குட்பட்டும், சில சமயங் களில் ஆணைக்கு உட்படாது மிருந்த சிற்றரசர் பலரும் தமிழ் நாட்டைப் புரந்தார்கள். தமிழ் நாட்டு மூவேந்தர் அடிக்கடி ஒருவரோடு ஒருவர் சண்டையிட்டனர். மக்கள் அப்போர் ஆரவாரங்களினிடையே வாழ்ந்தனர். இவ்வாறு போர் நிகழ்ந்தால் தமிழ் நாட்டில் பலவகைக் கலைகள் எப்படி வளர்ந்தன என்னும் கேள்வி எழலாம். இதற்கு விடை அளித்தல் இலகு. போருக்குப் பயிற்றப் பட்டவர்

[1] நின் முழந்தாளைப் பொருந்திய என் கைகள் புலால் நாற்ற முடைய செவ்விய பசிய ஊனையும் துவையலையும் கறியையும் சோற்றையும் உண்டு வருந்துஞ் செயலல்லது வேறு செயலின்மை யால் மெலிந்தன. (புறம் 14)

சாடியைத் திறந்து மதுவையும், ஆட்டுக் கடாவை வெட்டிச் சமைத்த துவையையும், ஊன் கலந்த சோற்றையும் விரும்பித் தருவை. (புறம் 113)

[1]There have been three classes among Brahmans namely. (1) The ascetic devote and teacher, the Rishi or Muni. (2) The priest and spiritual guide of kings, nobles and people. (3) The minister of state, royal officer and those who followed secular employments throughout Indian history—*Ancient Indian Historical traditions-F. E. Pargiter.*

களும் பரம்பரையாகப், போர்த்தொழிலுக்குரியோருமே போரிற் கலந்து கொண்டனர். ஏனையோர் மதிலாற் சூழப் பட்ட நகரங்களுள் வாழ்ந்தனர். நகருக்குத் தொலைவில் வாழ்ந்த கிராம மக்கள் அயலேயுள்ள குறுநில மன்னரால் அடிக்கடி தாக்கப்பட்டுத் துன்பத்துக்காளானார்கள். அவர் களது ஆடு மாடுகள் கொள்ளையடிக்கப் பட்டன. சிறிது எதிர்ப்புக் காண்பித்தாலும், அவர்கள் தயவின்றிக் கொல்லப் பட்டார்கள். மதுரை, கரூர், காவிரிப்பூம் பட்டினம் போன்ற நகர்களில் வாழ்ந்தோர் போரினால் நேரும் ஆபத்துகளுக்கு உள்ளாகாது வாழ்ந்தனர். மதிலால் அரண் செய்யப்பட்ட நகர்கள் பகையரசரால் எளிதில் தாக்க முடியாமலிருந் தன. அரண்படுத்தப்பட்ட நகரிலேயே கைத்தொழிலும், வாணிகமும் விருத்தியடைந்தன. போர் வீரரின் காவலைப் பெற்று, வணிகர் ஓரிடத்தினின்றும் இன்னோரிடத்திற்குக் கூட்டமாகச் சென்றனர். உள்நாட்டுப் பாதைகளை அரச னது போர்வீரர் காவல் புரிந்தனர். சிறிய பாதைகள் வந்து கூடும் பெரிய பாதைகளில் சுங்கம் அறவிடப்பட்டது. அரசாங்கம் மக்களின் நலத்துக்காக இருந்தது. நாட்டைக் காக்கும் பொருட்டு மக்கள் வீரம் காட்டினார்கள். [1] வீரப் பெண்கள் பலர் இருந்தனர்.

அரசனது அதிகாரம் ஐம்பெருஞ் சபைகளால் கட்டுப் படுத்தப் பட்டிருந்தது. மக்களின் சார்பாளராகிய நகரமாந் தர், புரோகிதர்*, மருத்துவர், நிமித்தர், அமைச்சர், என்னும்

[1] *வாதுவல் வயிறே வாதுவல் வயிறே*
*நோலா வதனகத் துன்னீன் றனனே*
*பொருந்தா மன்ன ரருஞ் சமமுருக்கி*
*அக்களத் தொழிதல் செல்லாய் மிக்க*
*புகர்முகக் குஞ்சர மெறிந்த வெஃகம்*
*அதன்முகத் தொழிய நீபோந் தனையே*
*எம்மில் செய்யா வரும்பழி செய்த*
*கல்லாக் காளைநின் னீன்ற வயிறே* (தகடூர் யா)

* *மாசனம் பார்ப்பார் மருத்துவர் நிமித்தரோ-டமைச்ச ராசிலா வவைக்களத் தாரைந்து* (சிலப். 5-157 அரு, உரை மேற்)



ஐந்து கூட்டத்தினரும் ஐப்பெருஞ்சபையில் அடங்குவர். மாசனம் சனங்களின் நன்மையின் பொருட்டு வாதாடினர். பார்ப்பார் சமயச் சடங்குகளை மேற்பார்த்தனர். மருத்துவர் அரசனதும், குடிகளதும் நோய் சம்பந்தமான கருமங்களைக் கவனித்தனர். நிமித்தர், பெருநாட்களுக்கு ஏற்ற முகூர்த் தத்தை விதித்ததோடு, முதன்மையான கருமங்களை ஆராய்ந்து முன்னதாக அறிவித்தனர். அமைச்சர் நாட் டின் வருவாய் செலவு முதலியவற்றைக் கவனித்தனர். இச்சபைகள் சந்தித்துத் தங்கடமைகளை ஆலோசிப்பதற்கு நகரங்களில் தனி மண்டபங்களிலிருந்தன [1]அரசன் கொலு விருக்கும் சிறப்புக் காலங்களில் இவர்கள் அரசன் பக்கலில் நின்றனர். அரசாங்கப் பொறுப்பு அரசனிடத்தும், ஐம் பெருங் குழு விடத்தும் மாத்திரம் தங்கியிருந்தது. சேரசோழ பாண்டியர்களது ஆட்சியில் இவ்வகை ஒழுங்கு இருந்தது. இது மூவேந்தரும் ஒரே உற்பத்திக் குரியவர்களென்று அறிந்து கொள்வதற்கு உதவி புரிகின்றது.

அரசன் பெரும் [2]ஆடம்பரத்தோடும், அதிகாரத்தோடும் கூடியிருந்தான். அவன், நவரத்தினம் பதித்துச் செய்யப் பட்டதும், கீழ் அகன்றதும், கூம்பு வடிவினதுமாகிய முடியை அணிந்திருந்தான். கையில் பொன்வளையும், வலக்காலிற் பொன் வீரக்கழலும் அணிந்திருந்தான். முத்துமாலைகள் அவன் மார்பில் விளங்கின. அவன் சிங்காசனத்தில் இருந்த போது, அல்லது வெளியே சென்றபோது ஓரங்களில் முத்துத் தூக்கிய குடை பிடிக்கப்பட்டது. அவன் யானை,

[1] *மதுரைக் காஞ்சி.*

[2] *அரையது துகிலே மார்பின தாரம்*
*முடியது முருகு நாறுந் தொடையல் புடையன*
*பால் வெண் கவரியின் கற்றை மேலது*
*மாலை தாழ்ந்த மணிக்காற் றனிக்குடை*
*முன்னது முரசு முழங்குதானை யிங்கிலை*
*இளைய செல்வத் தீங்கிவர் யாரே* (புறத்திரட்டு 375)

குதிரை அல்லது தேர் மீது சவாரி செய்தான். காலையிலும், மாலையிலும் அரண்மனை வாயிலில் மேளம்[1] ஒலித்தது. [2] நாழிகை வட்டிலில் நேரமறிந்து சொல்வோர் அரண்மனையிலிருந்தனர்.

அரண்மனையின் ஒரு பகுதி அரசிக்காகவும், அவளது பரிவாரங்களுக்காகவும் ஒதுக்கப்பட்டிருந்தது. தான் அரசுரிமை எய்திய காலத்தன்றி அவள் முடி தரிக்கவில்லை. பெருநாட்களில் அவள் அரசனோடு சிங்காசனத்தில் உடனிருந்தாள். ஆனால், அவள் முடி அணியவில்லை. அவளிருக்கும் அந்தப்புரத்தில் ஆடவர் அனுமதிக்கப்படவில்லை. கூனும், குறளும், உயர் குடும்பப் பெண்களும் அவளைச் சூழ்ந்திருந்தனர். வேண்மாள், நிலாமுற்றத்தில் செங்குட்டுவனைக் காணவந்த அழகிய நிகழ்ச்சி சிலப்பதிகாரத்தில் பின்வருமாறு கூறப்படுகின்றது.

சேடியர் சிலர் இனிய மேளத்தை ஒலித்துக் குழலூதிப் பாடினர். கூனும் குறளும், கத்தூரியும் சந்தனமும் ஏந்திச் சென்றனர். பேடிகள் கையிடத்தே வாசனைப் புகையும், பூமாலையும், பூவும் மிருதுவான அணையும் வைத்திருந்தனர். சிலர் கண்ணாடியும், உடையும், அணிகலன்களும் ஏந்தி நின்றனர். விளங்குகின்ற மாலையணிந்த சேடியர் 'அரசி வாழ்க' என்று வாழ்த்தினர்.

நீதி வழங்குவதற்கெனத் தனிக் கருமகாரர் இருந்தனர். அரசனுடைய தீர்ப்பே எல்லாத் தீர்ப்புகளுக்கும் முடிவாயிருந்தது. நீதி செலுத்தும் கருமகாரர் மற்றவர்களினின்றும் பிரித்தறியக் கூடியதாகச் சிறப்பான தலைப்பாகை அணிந்திருந்தனர். பொருளின்றி நியாயம் வழங்கப்பட்டது. தண்டனை கடுமையாக விருந்தமையால் குற்றங்கள் சிலவாக இருந்தன. திருடிய பொருளுடன் கண்டு பிடிக்கப்பட்டவனுக்குத் தண்டனை சிரச்சேதமாக விருந்தது. வியபிசாரம் செய்பவனுக்கும் கொலைத்தண்டம் விதிக்கப்பட்டது. வியபிசாரம் செய்யும் நோக்கத்தோடு அயலவன் வீட்டிற் பிரவேசித்தவனது கால் குறைக்கப்பட்டது. அரசனுடைய கட்டளைகள் உத்தியோகத்தரால் யானைமீதிருந்து மேள மடித்து விளம்பரஞ் செய்யப்பட்டன.

[1] காலை முரசம், மாலை முரசம்.

[2] வட்டிலில் நிரப்பிய நீர் ஒழுகுதலைக்கொண்டு நேரம் அளக்கும் கருவி.



சுங்கமும், நில வரியும் அரசனது வருவாயிற் பெரும் பகுதியாக இருந்தன. எல்லாத் துறைமுகங்களிலும் ஏற்றுமதியாகும் பண்டங்கள்மீதும், இறக்குமதியாகும் பண்டங்கள் மீதும் தீர்வை விதிக்கப்பட்டது. கடலிலிருந்து இறக்கிய பண்டங்களும், மரக்கலங்களில் ஏற்றுதற்குக் கொண்டு வரப்பட்ட பண்டங்களும் அரசனது முத்திரை பொறித்துச் சுங்கச் சாலைகளில் அடுக்கப்பெற்றிருந்தன. நில வரி பணமாக அல்லது தானியமாகக் கொடுக்கப்பட்டது. சிற்றரசரும், அதிகாரிகளும் திறை கொடுத்தனர். போரிற் கிடைத்த கொள்ளைப் பொருள், முத்துக்குளிப்பு, காடுபடுதிரவியம், காட்டிற் பிடிக்கும் யானை ஆகியவற்றால் அரசனுக்கு வருவாய் கிடைத்தது. விளைவில் ஆறிலொன்று அரசனுக்குரிய கடமையாக விருந்தது.

அரசன் மெய்காப்பாளராலும், பரிசனர்களாலும் சூழப்பட்டிருந்தான். இருந்தபோதும் அவன் குடிகளோடு தாராளமாக அளவளாவினான். நாட்டில் நடைபெறும் விழாக்களுக்கு அவன் தலைமை வகித்தான். பஞ்சம் அல்லது கொள்ளைநோய் ஏற்பட்ட காலத்து, அவன் ஆலயங்களில் சிறப்பு வழிபாடு செய்தான். குடிகளின் சுக துக்கங்களில் அவன் பங்கு கொண்டான். கிராமங்களைப் பகைவர் கைப்பற்றிய காலத்திற் குடிகள் அரசனிருக்கும் நகரில் தங்கினர்.

ஆலயங்களிலும், வீடுகளிலும் மக்கள் அரசனது நீண்ட ஆயுளை வேண்டிக் கடவுளைத் துதித்தனர். ஐங்குறு நூற்றின் ஓரிடத்தில் "எங்கள் ஆதன் நீடு வாழ்க! என்று என் அன்னை வணங்கினள். என் காதலன் விரைந்து வீடு வருக என்று யான் வணங்கினேன்." என ஒரு தலைவி கூறியதாகச் சொல்லப்படுகிறது.

"அரசன், தூங்குமாலைகளால் அலங்கரிக்கப்பட்ட படுக்கையிலே துயின்று வைகறையில் எழுவான். எழுந்து காலைக்கடன் கழித்துத் தெய்வத்தை வழிபடுவான். முத்து மாலை விளங்கும் மார்பிடத்தே சந்தனத்தைப் பூசுவான். வாசனை பொருந்திய பூமாலையை அணிவான். மணிக ளழுத்திச் செய்த மோதிரம் விரலிற் கிடந்து கையிடத் துள்ள வீரவளையோடு விளங்கும். கஞ்சி இட்ட துகிலை உடுத்து, அதற்குமேல் அணியும் அணிகலன்களை அணி வான். அணிந்து நாளவையிடத்திருந்து வீரருக்கும், பாணருக்கும், பட்டங்களும், பரிசிலும் வழங்குவான்[1]." (மதுரைக்காஞ்சி)

## அரசனது கோயில்

"சிற்ப நூலை அறிந்த தச்சர் நூலை நேராகப் பிடித்துத் திசைகளைக் குறித்துத் திசைகளி லுறையுந் தெய்வங்களைத் துதிப்பர். துதித்து, அரசர்க்குரிய மனைகளையும், மண்ட பங்களையும் கூறுபடுத்துவர். மனைகளும், மண்டபங்களும் மதிலினூற் சூழப்பட்டிருக்கும். மதிலின் வாயில் நிலைகள் ஆணிகளும் பட்டங்களுமாகிய பரிய இரும்புகள் சேர்த்து அமைக்கப்பட்டுச் சாதிலிங்கம் உருக்கி வழிக்கப் பெற் றிருக்கும். கதவுகள் ஒன்றோடு ஒன்று சேர்த்துத் தாளிடக்

[1]ஏற்ற பார்ப்பார்க் கீர்ங்கை நிறையப்
பூவும் பொன்னும் புனல்படச் சொரிந்து
பாசிழை மகளிர் பொன்கலத் தேந்திய
நாரரி தேறல் தவாது நன்மகிழ்ந்
திரவலர்க் கருங்கல மருகாது வீசி
வாழ்தல் வேண்டுமிவன் வரைந்த வைகல். (புறம். 367)



கூடியதாக இரண்டாகச் செய்யப்பட்டவை. நிலைக்கு மேலுள்ள சுவரிடத்து, நடுவே இலக்குமி இருக்க இரண்டு பக்கத்தும் இரண்டு பிடிகள் செங்கழுநீர் மலரைப் பிடித்த பாவனையாக நிற்கும் சிற்பவேலைப்பாடு செய்யப்பட்டிருக் கும். பல மரங்களைச் சேர்த்து இடைவெளியின்றிக் கடாவிச் செருகிய நிலை வெண் சிறு கடுகு அப்பப் பெற் றிருக்கும். கோபுரவாயில் யானைகள் வெற்றிக் கொடி களுடன் செல்லத் தக்கதாக மலையின் நடுவை வெளியாகத் திறந்தது போல் தோன்றும். மணல் பரப்பிய அரண்மனை முற்றத்தில் கவரிமானும் அன்னமும் உலாவி விளையாடும். யவனர் செய்த பாவைகளின் கையில் நெய்யூற்றிக் கொளுத்திய விளக்குகள் வீட்டின் அகத்தே எரியும். விளக்கில் நெய் வற்றி ஒளி மழுங்குந்தோறும் பெண்கள் நெய் வார்த்துத் திரியைத் தூண்டுவர். கோயிலிடத்து அர சன் தங்கும் உட்புறம், வேறு அரசன் அல்லது குற்றேவல் செய்யும் ஆண் மக்கள் அணுகாத அருங்காவலுடையது. கோயிலின் உச்சியில் இந்திரவில் போன்ற பல கொடிகள் அசையும். வெண் சாந்தினூற் கட்டிய திரண்ட தூண்கள் நீலமணி போல் கருமையுடையனவா யிருக்கும். செம்பினூற் செய்தது போன்ற நெடிய சுவரிற் பல அழகிய பூக்களை யுடைய கொடிகள் சித்திரிக்கப் பட்டிருக்கும்.

"அரசன் துயிலும் கட்டில் வட்டவடிவினதாகப் போர் யானையின் தந்தங்களாற் செய்யப்பட்டது. அது, இலைவடி வாகச்சீவிய யானைத்தந்தங்களையும், (புலி முதலியவற்றின் வரி தோன்றப்) பல நிறமுடைய மயிர்களையும் உள்ளே வைத்துச் சிங்கம் முதலிய விலங்குகளை வேட்டையாடு கின்ற தொழில்களைப் பொறித்த தகடுகள் வைத்து ஆணி களால் தைத்து மூட்டுவாய் தெரியாமல் செய்யப்பட்டிருக் கும். கட்டிலின் கீழ் நாற்புறத்தும் முத்து மாலைகள தூங்கும். நடுவெளி, புலியின் நிறமுடைய நாடாவினுல் வெளி மறையும்படி பின்னப்பட்டிருக்கும். கால்கள் திரண்

டனவாயிருக்கும். கட்டிலின் மேல் மிருதுவான மெத்தை விரிக்கப்பட்டிருக்கும். அதன்மேல் அன்னத் தூவி பரப்பி அணைகளிட்டுக் கஞ்சிதோய்த்த துகில் விரித்துச் செங் கழுநீர் மலர் பரப்பப் பெற்றிருக்கும். கட்டிலின் மேல் விதானத்தில் திங்களும் உரோகிணியுமாகியற்றின் வடிவங்கள் எழுதப்பட்டிருக்கும்.'' (நெடு நல் வாடை)

### பாசறை

"அரசன் படைகளுடன் சென்று, காட்டாறு சூழ்ந்த அகன்ற, நெடிய காட்டிடத்தே பிடவு முதலிய புதர் களை வெட்டுவான்; அவ்விடத்தே காவலாக இருக்கும் பகைவரின் அரண்களை அழிப்பான்; காட்டிலுள்ள முட்களை வெட்டி, வேலியாக இடுவான். இவ்வாறு இடப்பட்டதும், படைகள் கடல் போல ஆரவாரிக்கும் இடத்ததுமாகிய பாசறையிடத்தே தங்கிய அரசன் துயில் கொள்ளாதிருப் பான். வீதி, தழையால் வேய்ந்த கூரையையுடையது. நாற்சந்தியாக வமைந்த முற்றத்தில் மதம் பாயும் கதுப் பினையுடைய யானை காவலாக நிற்கும். நெற் கதிர்களினி டையே கரும்பையும், அதிமதுரத் தழையையும் வைத்துக் கட்டிய உணவைத் தின்னாத யானை, அவற்றைக் கொம்பின் மேற் போட்ட தும்பிக்கையிடத்தே கொண்டு நெற்றியைத் துடைக்கும்.

"யானைத் தொழிலையன்றிப் பிறதொழிலைக் கல்லாத யானைப்பாகர் யானைப் பேச்சாகிய வடமொழிச் சொற்களைப் பலகாற் கூறிக் கவருடைய குத்துக் கோலாற் குத்தி யானைக்குக் கவளத்தை ஊட்டுவர். பல மொழிகளைப் பேசுகின்ற பெரிய படைக்கு நடுவே ஓரிடத்தை எல்லோரும் ஆராய்ந்து அதனை அரசனுக்குக் கோயிலாகக் கொள்வர்; கொண்ட இடத்தே வட்டமாகக் குத்துக்கால்களை நடுவர். நட்டுக் கூடாரமாகக் கயிற்றை வலித்துக் கட்டுவர். முக் கோலுடைய அந்தணர் அக்கோலின் மீது காவிதோய்த்த



ஆடையை இட்டு வைத்தாற் போல, விற்களை ஒன்றின் பக்கத் தொன்றாக ஊன்றி, அவற்றின் மீது துணிகளைத் தூக்குவர். பின் விற்களின் பக்கத்தே எறிகோல்களையும் ஊன்றிப், பரிசைகளையும் அடுக்காகக் குத்திவைப்பர். இவ்வாறு செய்யப்பட்ட அரசனது கோயிலிடத்து, வளையணிந்த முன்கையும், கூந்தல் அசைகின்ற அழகிய முதுகும், ஒள்ளியவாளை வரியுடைய கச்சிலிட்டு வைத்திருப் போருமாகிய மகளிர், ஏவலாளர் கொளுத்தி ஒழுங்குபட வைத்த விளக்குகள் அணையுந்தோறும் கையிடத்துள்ள பந்தங்களைக் கொளுத்திப் பிடிப்பர்.

"யானைகளதும், குதிரைகளதும் மணியோசை அடங்கிய நடுயாமத்துச், சிறுதூறுகள் மெல்லிய காற் றுக்கு அசைந்தாற் போன்ற தலைப்பாகை தரித்துச், சட்டையிட்ட மெய்காப்பாளர் சூழ்ந்து திரியப், பொழுதை நாழிகை வட்டத்தில் அறிந்து தப்பாமற் கூறுவோர், அரசே! நாழிகை வட்டிலிற் காண்கிற நாழிகை இத்துணை என்று சொல்லுவர். அவன், அரையில் குதிரைச் சவுக்கைச் செருகி யிருப்போரும், சட்டையிட்டோரும், அச்சந்தரும் தோற்றமும் தறு கண்மையும் உடையோருமாகிய யவனர் புலியைச் சங்கியிற் பிணித்தாற்போல எழுதி வாயிலின் முகப்பில் வைத்து அழகு செய்த நல்ல இல்லிலே, அழகிய விளக்கை எரிய வைத்துக் கயிற்றின் மீது திரையிட்டுப் பிரிக்கப்பட்ட அறைக்கு உள்ளே உள்ள படுக்கைக்குச் செல்வான். கையாலும், முகத்தாலும் வார்த்தை சொல் வோரும், சட்டை இட்டோருமாகிய ஊமைகள், பள்ளி கொள்ளுமிடத்தைச் சூழ்ந்து திரிவர். மிகுந்த போர் செய்ய வேண்டுமென்னும் விருப்பினால் நித்திரை பெறாது, வெட்டுண்டபுண்ணுடைய யானைகளை நினைந்தும், பகைவரது யானையின் துதிக்கை யறும்படி வெட்டி, மடிந்து, செஞ் சோற்றுக் கடன் கழித்த வீரரை நினைந்தும், கூரிய பகழிகள் அழுந்துகையால் தோல் கிழிந்து வருந்திப் புல்லுண்ணமல்

நிற்கும் குதிரைகளின் வருத்தத்தை நினைந்தும், ஒரு கையைப்படுக்கையின் மேல் வைத்து, ஒரு கையின் வீர வளையை முடியோடே சேரவைத்து, இப்படை நொந்த அளவுக்கு நாளை எவ்வாறு பொருதுமென நினைந்தும் கிடப்பான். அரசனது பாசறை இவ்வியல்பினது.'' (முல்லைப் பாட்டு)

"அரசன், யானையை எறிந்து கொன்ற பெரிய வீரரின் புண்ணைக் கண்டு பரிகரித்தற்கு, விளக்குகள் வாடைக் காற்றுக்குத் தெற்கே சாய்ந்து எரிய, வேப்பிலையைத் தலையிலே கட்டிய வேலைத் தாங்கிய படைத்தலைவன் புண்பட்ட வீரரை முறையே காட்ட, மணி கட்டின கடிவாளத் தோடும், தவிசோடும் பாய்ந்து செல்லும் இயல்புடைய குதிரைகள் கரிய சேற்றையுடைய தெருவிலே தம்மீது விழும் துளிகளை உதற, இடத்தோளினின்றும் நழுவிவீழ்ந்த அழகிய உத்தரியத்தை இடப் பக்கத்தே அணைத்துக்கொண்டு தோளிடத்தே தொங்கும் வாளை எடுத்தற்குத் தோளிலே வைத்த வலக்கையுடையவனாய்ப் [1] புண்பட்ட வீரருக்கு அகமலர்ச்சி தோன்ற நோக்கி, முத்துமாலை தூங்கும் வெண்கொற்றக் குடை மழைத் துளியைத் தடுப்ப, நள்ளென்னும் யாமத்தும் நித்திரை கொள்ளானாய், சில வீரரோடு சென்று புண்பட்ட வீரரைப்பரிகரித்துத் திரிவான்.'' (நெடுநல்வாடை)

"களவு செய்தோர் கையிற் பொருள் கோடலும், ஆறிலொன்று கோடலும், சுங்கங்கோடலும், அந்தணர்க்கு இறையிலி கொடுக்குங்கால் இத்துணைப் பொருள் நும்மிடத்து யான் கொள்வலெனக் கூறிக்கொண்டு அது கோடலும், மறப் பொருளாகப் பகைவர் நாடு கோடலும், தமரும், அந்தணரும் இல்வழிப் பிறன்றாயங் கோடலும், பொருளில் வழி வாணிகஞ் செய்து கோடலும், அறத் திற்றிரிந்தாரைத் தண்டத்திற்றகுமாறு பொருள் கோடலும் போல்வனவுங் கொள்க'' (நச்சினார்க்கினியர்) கணவரைப் போரில் பறிகொடுத்த பெண்கள் [1] எரிமூழ்கினர் சிலர் கைம்மை நோன்பு நோற்றனர்.

[1] *குழிபல வாயினுஞ் சால்பானாதே*
*முழைபடு முதுமரம் போலெவ் வாயு*
*மடைநுழைந் தறுத்த விடனுடை விழுப்புண்*
*நெய்யிடை நிற்ற லானாது பையென*
*மெழுகுசெய் பாவையிற் கிழிபல கொண்டும் பழிதீர்*
*கொண்டடக்கட னாற்றிய வேந்தர்க்குப்*
*படைக் கடனாற்றிய புகழோன் புண்ணே (தகடூர் யா)*



## வணிகர்

"வாணிக வாழ்க்கையை மேற்கொண்டோர் வணிகர் எனப் பட்டனர். இவர், நுகத்தில் பகலாணிபோல நடுநிலையுடைய நெஞ்சினர். தம்முடைய பலசரக்குகளையும், பிறர் சரக்குகளையும் நடுவு நிலைமையோடு விலை மதிப்பர்; கொள்ளும் சரக்கைத் தாம் கொடுக்கும் பொருளுக்கு மிகையாகக் கொள்ளார்; கொடுக்கும் பொருளையும் தாம் வாங்கும் பொருளுக்குக் குறையக் கொடார். இலாபத்தை வெளியாகச் சொல்லி விற்பர்.'' (பட்டினப்பாலை).

"வணிகர், மலையிடத்தவும் கடலிடத்தவுமாகிய பொருள்களை உலகத்தவர் நுகரும்படி கொடுக்குமியல் புடையோர். அவர் மாணிக்கம், முத்து, சந்தனம் ஆகியவற்றைப் பிறநாடுகளிற் கொண்டு சென்று விற்பர். *போர் செய்தலின் அம்புகள் தைத்த புண்கள் ஆறிய தழும்புகள் அவர்கள்

[1] *ஏனைய பெண்டி ரெரிமூழ்கக் கண்டுதன்*
*தானையாற் கண்புதைத் தான்ஓர் வழுதி (முத்தொள்)*
*தொல்லை ஞான்றைச் செருவி னிவன்கை*
*வேல்வாய் வீழ்ந்தோர் பெண்டிர் கைம்மையின்*
*அறுத்த கூந்தற் பிறக்கருஞ் சகடம்*
*பொறுத்தல் செல்லா பலமுரிந் தனவே (தகடூர்)*

*பொறைமலி கழுதை நெடு நிரை தழீஇய திருந்து வாள் வயவர். (அகம் 89)

மார்பிடத்தே காணப்படும். அவர் ஆடையை இறுக்கி யுடுத்து அரையிடத்து உடை வாளைச் செருகியிருப்பர். வில்லிடத்து அம்பைவைத்துக் குறிதப்பாமல் எய்யும் வலியுடையர்; முருகவேளைப் போலக் கையிடத்தே வேலைப் பிடித்திருப்பர்; யானைத் தந்தத்தாற் செய்த உறையுடைய வாளை வரியுடைய நாடாவினுற் கட்டித் தோளிற் தொங்க விட்டுச் செல்லுமியல்பினர்; செருப்புத் தொட்ட காலினர்; சட்டை யிட்ட மேனியர்; பலாப்பழங்கள் போல ஒத்த கனமாகச் சேர்த்த மிளகு மூடைகளைக் கழுதைகளிலேற்றி அவற்றின் பக்கத்தே காவலாகச் செல்லுஞ் செலவினர்.'' (பெரும்பாண்)

'வணிகர், சங்கநிதியைப் பெற்றவர் போன்ற செல்வர். குதிரை மருப்பும், பெறுதற்கரிய நெருப்புமிழும் நாகத்தின் மணியும், சிங்கத்தின்பாலும், தெள்ளிய திரையுடைய கடலிடத்து மூப்பில்லாத தேவுக்கள் கடைந் தெடுத்த அமுதமும் வேண்டுமாயினும் போய்ப் பெறும் அரிய பண்டங்களையுடைய வணிகர் வீதி.'' (உதயணன் கதை)

வணிகர், அணித்தணித்தாயுள்ள பல மலைகளைக் கண்டாற் போன்றனவும், பருந்து இளைப்பாறியிருந்துபின் உயரப் பறக்கும் தன்மையுடையனவும், பல தொழில் மாட்சிமைப்பட்டனவுமாகிய நல்ல இல்லங்களில், மலையிடத்தவும், நிலத்திடத்தவும், நீரிடத்தவுமாகிய பல பண்டங்களைக் குவித்து, அவற்றையும், பிற தேசத்தினின் றுங் கொணர்ந்த முத்து, பொன், மணி ஆகியவற்றையும் விற்பர்.'' (மதுரைக் காஞ்சி)

இவர்கள் திரைகடலோடியுந் திரவிய மீட்டுமியல்பினர். ''நாவாய் கவிழ்ந்த நாய்கன்போல்'' (உதயணன் கதை) ''முந்நீர் வழக்கம் மகடூஉ வோடில்லை'' என்னும் தொல்காப்பியச் சூத்திரத்தால் தமிழ்மக்கள் மரக்கல மேறிச் சென்றும் பொருளீட்டினுர்கள் என விளங்குகின்றது.



[1] வணிகரிற் சிறந்தோருக்கு அரசன் எட்டிப் பட்டங் கொடுப்பது வழக்கு.

## வேளாளர்

உழவுத் தொழிலைக் கைக்கொண்டோர் வேளாளர் எனப்பட்டனர். உழுதுண்போர், உழுவித்துண்போர் என இவருள் இரண்டு வகையினருளர். உழுதுண்போர் வீழ்ங்குடி உழவர் எனப்பட்டனர். வேளாண் மக்களின் உயர்வைத் திருவள்ளுவரும், கம்பரும் வேண்டிய அளவு எடுத்துக் கூறியிருக்கின்றனர்.

''சேர சோழ பாண்டியரும், சிற்றரசர்களும் வேளாண் வமிசத்தில் தோன்றியவர்கள். சிறிய நிலங்களையுடையராயினேர் வீழ்ங்குடி உழவரெனப் பட்டனர். இதனுல் மற்றைய வேளாண்மக்கள் செல்வர்களாயும், பெரிய நிலங் களுடையவர்களாயும், இருந்தார்களென்றும் விளங்குகின்றது. கரிகாலன் அருவாளரைவென்று, அவர் நாட்டைத் தனது தேசத்தோடு இணைந்தபோது, வெற்றிகொண்ட நிலத்தை வேளாண் பிரபுக்களுக்குப் பகுத்தளித்தான். அப்பிரபுக்கள் வழியில் வந்தோர் பெருநிலமுடையராய், ஆங்கில அரசரின் கீழ் சிறுசமீன்தார்களா யிருக்கின்றனர். அவர்கள் இப்பொழுது முதலிமார், என்றழைக்கப்படுவர், முதலிமார் என்பதற்கு முதற்சாதி என்பது பொருள். தெலுங்கு நாட்டை வென்ற வேளாண் குடும்பத்தினர் வேள்மா என்றழைக்கப் படுகின்றனர். அங்குள்ள பெரிய சமீன்தார்கள் இன்றும் வேள்மா மரபினரே. வேளாளர் கன்னட தேசத்தில் பெல்லால பரம்பரையைத் தாபித்துப் பல நூற்ருண்டுகளாக ஆட்சி புரிந்தனர். வேளாளர் கங்கை குலத்தவர், கங்கை வமிசத்தவர் என்றும் அழைக்கப் பட்டனர். வேளாளர் பெரிதும் வாழ்கின்ற மைசூரின் ஒரு பகுதி பத்தாவது, பதினேராவது நூற்ருண்டில் கங்காவதி

---

[1] எட்டிப் பூ—எட்டிப் பட்டம் பெற்றவர்க்கு அரசன் கொடுக்கும் பொற் பூ; எட்டிப் புரவு—வாணிகத்தாற் சிறந்தார்க்கு அரசன் கொடுக்கும் பூமி.

என்றழைக்கப்பட்டது. ஒரிசாவை ஆண்ட இன்னொரு பரம்பரை கங்கை வமிசம் எனப்பட்டது." (1800 வருடங்களுக்கு முந்திய தழிழர்.)

"மன்னர் பின்னோரென்றமையான் முடியுடையோரும் முடியில்லாதோரும், உழுவித்துண்போரும், உழுதுண்போருமென மன்னரும், வேளாளரும் பலரென்றார். 'வேளாண் மாந்தர்க்கு வேந்து விடு' என்னும் மரபியற் சூத்திரங்களான் வேளாளர் இருவகையென்ப. அரசரேவுந் திறமாவன பகைவர் மேலும், நாடுகாத்தன் மேலும், சந்து செய்வித்தன் மேலும், பொருள் வருவாய் மேலுமாம். அவருள் உழுவித்துண்போர் மண்டில மாக்களும், தண்டத் தலைவருமாய்ச் சோழநாட்டுப் பிடவூரும், அழுந்தூரும். நாங்கூரும், நாவூரும், ஆலஞ்சேரியும், பெருஞ்சிக்கலும், வல்லமுங் கிழாரும் முதலிய பதியிற்றோன்றி வேளெனவும், அரசெனவும் உரிமை யெய்தினோரும், பாண்டியநாட்டுக் *காவிதிப்பட்ட மெய்தினோருங் குறுங்குடிப் பிறந்தோர் முதலியோருமாய், முடியுடை வேந்தர்க்கு மகட் கொடைக்கு உரிய வேளாளராகும். இருங்கோவேண்மானருங் கடிப் பிடவூர் எனவும், 'ஆலஞ்சேரி மயிந்தனூருண்கேணி நீரோரொப்போன்' எனவுஞ் சான்றோர் செய்யுட் செய்தார். உருவப் பஃறேர் இளஞ் சேட்சென்னி அழுந்தூர் வேளிடை மகட் கோடலும் அவன் மகனாகிய கரிகாற் பெருவளத்தான் நாங்கூர் வேளிடை மகட் கோடலுங் கூறுவர்." (நச்சினார்க்கினியர்)

"வலைஞர் முற்றத்தில் மீன் பிறழும். இறைச்சி விற்பார் முற்றங்களில் விலங்குகள் திரியும். வேளாண் மக்கள் இவ்வாறு மீனும், விலங்கும் தம்மைக் கொல்வார் முற்றங்களில் அஞ்சாது செருக்கித் திரியும்படி அவர்களிடத்தினின்றும் கொலைத் தொழிலைப் போக்குவர்; தேவுக்களை வழிபடுவர்;

* வேளாளர்க்கு அரசர் வழங்கும் பட்டம்; காவிதிப் பூ—பட்டத்துடன் அளிக்கும் பூ; காவிதிப்புரவு—காவிதியர்க்கு அரசர் கொடுக்கும் ஊர்.



யாகங்களைப் பண்ணி அவற்றால் ஆவுதிகளை அவர் நுகரும்படி செய்வர்; நல்ல எருதுகளோடு பசுக்களை ஓம்புவர்; பெரிய புண்ணியங்களைச் செய்வர்; அவற்றைச் செய்ய மாட்டாதார்க்குத் தானஞ் செய்வர்; தாம் விளைவித்த நெல்லை உணவாகக் கொடுப்பர். வளைந்த மேழியுடைய வேளாண்மக்கள் இவ்வாறு தருமங்கள் புரியும் நன்னெஞ்சுடையோர்." (பட்டினப்பாலை) வேளாளர் என்பதற்கு உபகாரிகள் என்பது பொருள். "இருந்தோம்பி இல்வாழ்வதெல்லாம் விருந்தோம்பி-வேளாண்மை செய்தற் பொருட்டு" என்னும் குறளால் இதனை அறிக. இவர்கள் பெரும்பாலும் ஊன் புசியாதவர்கள் எனத் தெரிகின்றது.

## மேலோர்

அந்தணர், ஆசர், வணிகர், வேளாளர் என்னும் நால்வரும் மேலோர் என்றும், ஏனோர் கீழோர் என்றும் பழந்தமிழ் நூல்கள் கூறும். இது,

"மேலோர் முறைமை நால்வர்க்கு முரித்து" என்னுந் தொல் காப்பியச் சூத்திதிரத்தால் நனி விளங்கும். ஷெ சூத்திரத்துக்கு மேலோர் என்று அழைக்கப்படும் முறைமை நால்வர்க்கும் உரித்து என்பது பொருள். வேறு பொருள் கூறுதல் பொருத்தமாகத் தெரியவில்லை. "மேலோர் மூவர்க்குப் புணர்த்த கரணம்—கீழோர்க்காகிய காலமு முண்டே" என்னும் கற்பியற் சூத்திரத்தை எடுத்துக் கொண்டு, மேலோர் எனப்பட்டோர் அந்தணர் அரசர் வணிகர் என்னும் மூவரென்றும், கீழோர் எனப்பட்டோர் வேளாளரென்றும் கூறுவாருமுளர். இது மேற்படி சூத்திரத்துக்குப் பிழையாகப் பொருள் கொண்டமையால் நேர்ந்த இடர்ப்பாடேயாம். மேலோராகிய அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் என்னும் மூவர்க்கு வகுத்த கரணம் கீழோர்க்காகிய காலமுமுண்டு என்பதே அச்சூத்திரத்தின் செம்பொருளாகும். நால்வரும் மேலோரெனப்படினும் அந்தணரைச் சிறப்பாக உயர்ந்தோர் எனக்கூறுதல் மரபு.

"ஓதலுந் தூதும் உயர்ந்தோர்மேன" என்பதில் உயர்ந்தோர் என்பது சிறப்பாக அந்தணரையே குறிக்கின்றது.

## கீழோர்

குற்றேவல் புரிவோரும் பிறர் ஏவியதொழில் புரிவோரும், பரம்பரையாகத் தொண்டு புரிவோரும் கீழோர் என அக்காலத்து வழங்கப்பெற்றனர். "அடியோர் பாங்கினும் வினைவல பாங்கினும்" என்னும் தொல்காப்பியச் சூத்திரத்தால் இது விளங்கும். அடியோர் எனப்பட்டோர் பரம்பரையாகப் பிறரேவிய தொண்டு புரிவோரேயாம். இவர்கள் ஆரிய வகுப்பினரின் சூத்திர வகுப்பினரை ஒத்தவர்கள் ஆகலாமெனக் கருத இடமுண்டு. வினைவலர் பலவகைக் கைத்தொழில்கள் புரிவோராவர்.

## அந்தணர், பார்ப்பார் என்போர் தமிழ் மக்களே

அந்தணர், பார்ப்பார் என்போர் தமிழ் மக்களல்லர், ஆரியமக்களே என்னும் தப்பான கொள்கை தமிழ்நாட்டில் ஏற்பட்டதனால்[1] பல தலை தடுமாற்றங்கள் உண்டாயின. தென்னாட்டில் ஆரியக் கலப்பென்பது கொள்கை அளவில் ஏற்பட்டதே அன்றி இரத்தக் கலப்பினால் ஏற்படவில்லை.

ஒரு காலத்துச் சைன பௌத்த மதங்கள் தென்னாட்டகத்தே படையெடுத்து வந்தன. பௌத்த சைன நூல்கள் வட மொழியில் எழுதப்பட்டிருந்தமையால், அந்நூல்களைக் கற்றுப் பௌத்தர், சைனர்களோடு எதிர்த்து வாதப் போர் புரிதற்குத் தென்னாட்டினர் சமக்கிருதம் பயில்வாராயினர். சமக்கிருதக் கல்விக்கு ஒரு காலத்து மிக மதிப்பு ஏற்பட்டிருந்தது. ஆங்கிலங் கற்ற இக்காலத் தமிழர் பல நூல்களை ஆங்கில மொழியில் எழுதி வருதல் போலவே, அக்காலச் சமக்கிருத வித்துவான்கள் கோயிற் கிரியை, சமயச் சடங்கு

[1] *அந்தணர் என்னும் சொல்லை ஆங்கிலத்தில் மொழி பெயர்ப்போர் Brahman என்று மொழி பெயர்க்கின்றனர். இது தவறுடைத்து.*



முதலியன இயற்றுதற்குரியவும் பிறவுமாகிய நூல்களைச் சமக்கிருதத்தில் எழுதிவைக்கலாயினர். காலகதியில் சமக்கிருதம் கடவுள் மொழி என்னும் கொள்கையும் ஏற்படுவதாயிற்று. கோயிற் கிரியை, சமயச் சடங்கு ஆகியன சமக்கிருதமயமாயின. பார்ப்பனர் சமக்கிருதத்தைப் பயின்றதும், ஆரியர் கொள்கைகள் சிலவற்றைக் கைக்கொண்டதும் ஆகிய காரணங்கள் பற்றி அவர் தமிழரல்லர் என்று கருதப்படுகின்றனரேயன்றி உண்மையில் அவர்கள் தமிழர்களே. வடநாட்டுப் பிராமணருக்கும், தென்னாட்டுப் பார்ப்பனருக்கும் உரிய ஆசாரங்கள் வெவ்வேறு. பிராமணரென்பது பிராமணங்களைப் பயின்றதால் வந்த பெயர்.

பிராமணர், சத்திரியர், வைசியர், சூத்திரர் என்னும் நான்கு வருணங்களும் தமிழருக்கிடையில் இருக்கவில்லை. பூணூலணிந்த அரசர் வைசியரைப் பற்றியும் தமிழ் உலகம் அறியாது. (1800 வருடங்களுக்கு முந்திய தமிழர்) பார்ப்பார் என்பதற்கு, கோயிலை மேற் பார்ப்போர் என்பது பொருள்.[1] இவர்கள் பிற்காலத்தில் ஆதி சைவரென அறியப்படுவர். ஆதி சைவர் சிவ வழிபாட்டினர். "ஆரிய மதாசிவனென்பான் அனாதி சைவன்."

[1] *[illegible]புரியிலுள்ள கோயில்களுக்கு 11-ஆம் நூற்றாண்டில் வடமொழி யறிந்த பட்டர்கள் நியமிக்கப்பட்டனர் (S. Indian Inscriptions, Vol. VII, No. 533). அதற்குச் சிறிது முன்னும் பின்னும் நிலவிய காலத்தில் தமிழ் நாட்டுக் கோயில்களில் பிராமணப் பட்டர்கள் கோயில் வழிபாட்டுக்கெனப் புது வழக்காக நியமிக்கப் பெற்றனர். இதுவே பின் தமிழகம் முழுவதும் பரவிற்று. தமிழ் தெரியாதபடியால் அவர்கள் தங்கள் வடமொழியிலேயே அருச்சனையைச் செய்யலுற்றனர். கோயில்களில் வழங்குகின்ற தெய்வங்கள் ஒவ்வொன்றுக்கும் அவர்களே அருச்சனை ஆக்கிக் கொண்டு இன்றும் அவற்றைக் கையாண்டு வருகின்றார்கள்.*

**—அதியமான்கள்-ஔவை துரைச்சாமிப் பிள்ளை-கலைக்கதிர் 1962**

## மெகஸ்தீனும் இந்தியாவும்

கி. மு. 321 முதல் 297 வரையில் மௌரிய சந்திர குப்தன் வட இந்தியாவில் ஆட்சி புரிந்தான். இவன் * செலூகஸ் நிற்கேற்றர் என்னும் கிரேக்க அரசனின் புதல்வியை மணம் செய்திருந்தான். அவன் காலத்தில் † மெகஸ்தீன், செலூகசின் சார்பில் பாடலிபுத்திரத்தில் (பற்ன) தங்கியிருந்தான். இக் கிரேக்கர் இந்தியாவையும், இந்திய மக்களேயும் பற்றி எழுதியுள்ளார். அவர் எழுதிய நூல் மறைந்து விட்டதேனும், அவரது நூலிலிருந்து பழைய சரித்திராசிரியர்கள் எடுத்தாண்ட பகுதிகளில் இந்தியாவைப் பற்றிய சில வரலாறுகள் காணப்படுகின்றன. அவையிற்றிற் கூறப்படும் மக்கள் ஒழுக்கங்களிற் பெரும்பாலன இந்திய மக்கள் எல்லோருக்கும் பொதுவாயிருந்தன என்று சரித்திராசிரியர்கள் கூறியிருக்கின்றனர். மெகஸ்தீன் கூறியிருப்பது வருமாறு:

இந்தியர் ஏழு வகையாகப் பிரிக்கப்பட்டிருந்தனர். தத்துவஞானத்தில் தேர்ந்த ஒரு கூட்டத்தினர் முதற் சாதியாராகக் கொள்ளப்பட்டனர். மற்றைக் கூட்டத்தினரை விட இவர்களின் தொகை குறைவாயிருந்தது. இவர்கள் எசமானராகவோ வேலைக்காரராகவோ இருக்கவில்லை. மறு உலகத்துக்குரிய கருமங்களை எல்லாம் இவர்கள் நன்கு அறிந்திருந்தார்களென்று மக்கள் நம்பினார்கள். ஆகவே, மக்கள் இவர்களை மரணச் சடங்குகள் புரிவதற்கும், உரிய காலங்களிற் கடவுட் பலியைச் செலுத்துதற்கும் அழைத்தார்கள். இவ்வகைக் கிரியைகளைச் செய்வதற்குப் பதில் உபகாரமாக இவர்கள் மிகுந்த பொருளைப் பெற்றார்கள். பொது மக்கள் இவர்களால் பெரிய நன்மைகளை அடைந்தனர். ஆண்டின் ஆரம்ப காலத்தே மக்கள் கூடியிருப்பார்கள். அப்போது இவர்கள் அவ்வாண்டில் நிகழ இருக்கும் பிணி, பஞ்சம், காற்று, மழை ஆகியவற்றை

* Selecus Nikotor † Megasthenes



அறிவிப்பார்கள். இவற்றை அறிந்துகொண்ட மக்களும், அரசனும் நிகழவிருக்கும் துன்பங்களைத் தாங்க ஆயத்தமாக விருந்தார்கள். தாம் கூறிய வருங்காலப் பலன்களிற் பொய்த்த தத்துவஞானிகள் தமது ஆயுளின் மீதிக் காலத்தை நிகழ்காலப் பலன்களைக் கூருது மௌனமாகக் கழித்தனர்.

[தமிழ் நூல்களில் மூன்று காலமும் உணர்ந்தோர் எனக் கூறப்படும் அறிவர் என்னும் குழுவினரே இவராதல் கூடும்.]

இவர்களுக்கு அடுத்தபடியி லுள்ளளோர் ஏர்த் தொழிலுக்குரியோராவர். இவர்கள் மற்றவர்களிலும் கூடிய தொகையினரா கவிருக்கின்றனர். இவர் போர் முதலிய பொதுக் கருமங்களுக்குரிய காலத்தைத் தவிர மீதி நேரம் முழுவதையும் நிலத்தைப் பண்படுத்திப் பயிரிடுவதிற் செலவிடுகின்றனர். நாட்டின் மீது படையெடுத்து வருவோர் இவர்களைத் துன்புறுத்துவதில்லை. பொது நன்மைக்குரியவர்கள் என்னும் எண்ணத்தினல் இவர்கள் எல்லா அபாயங்களினின்றும் காப்பாற்றப்படுகின்றனர். பகைவரால் அழிக்கப்படாதனவும், மிக்க விளைவைக் கொடுப்பனவுமாகிய நிலங்களின் பயன் நாட்டுமக்களின் உணவுக்குப் போதுமானதாகவிருந்தது. இவர்கள் குடும்பங்களோடு நாட்டையே தமக்கு உறைவிடமாகக் கொள்வர். நகர வாழ்க்கையை இவர்கள் விரும்புவதில்லை. இந்திய நாடு முழுமையிலுமுள்ள நிலம் அரசனுக்குச் சொந்தமானது. மக்கள் எவரேனும் சொந்தமாக நிலம் வைத்திருக்க அனுமதிக்கப்படுவதில்லை. நில வரியைத் தவிர விளைவின் நாலிலொன்றும் அரசனுக் குரியதாயிருந்தது.

மூன்ருவது படியிலுள்ளோர் இடையர். இவர்கள் பெரும்பாலும் ஆடுமாடுகளை மேய்ப்பவர். இவர்கள் நாட்டிலாவது நகரங்களிலாவது நிலேயாக வாழாது, கூடாரங்

களின் கீழ்த்தங்கினர்; வேட்டையாடியும், பொறிவைத்தும் துட்ட விலங்குகளைப் பிடிக்கின்றனர்.

நாலாவது படியிலுள்ளோர் சிற்பிகள். இவர்களிற் சிலர் போர் ஆயுதங்களைச் செய்தனர். சிலர் பயிரிடுவோருக்கும் பிறருக்கும் வேண்டிய கருவிகளைச் செய்து கொடுத்து அவர்களுக்குத் துணையாக இருந்தனர்.

ஐந்தாவது படியிலுள்ளோர் படையாட்சிகள் இவர்கள் போர் செய்யும் முறைகளிற் பயின்றிருந்தனர். தொகையளவில் இவர்கள் இரண்டாவதாக இருந்தனர். போரில்லாத காலங்களில் இவர்கள் பொழுது போக்குகளிலும், சோம்பித்திரிதலிலும் காலத்தைப் போக்கினர்.

ஆருவது படியிலுள்ளோர் கண்காணிமார். நாட்டில் நடப்பவற்றை எல்லாம் அறிந்து, அரசனுக்குச் சொல்வது இவர்களுக்கு வேலையாகவிருந்தது. இவர்கள் அரசன் இல்லாத இடங்களில் நியாயம் வழங்கும் அதிகாரிகளிடத்து தாம் கண்டறிந்தவற்றை அறிவிப்பர்.

ஏழாவது படியிலுள்ளோர் பொதுக் கருமங்களில் ஆலோசனை கூறும் கூட்டத்தினராவர். மற்றவர்கள் எல்லோரையும்விட இவர்கள் சிறு கூட்டத்தினர். உயர்ந்த ஒழுக்கத்துக்கும், அறிவுக்குமாக இவர்கள் மதிக்கப்படுகிருர்கள். அரசனது பொருள் அறைகாப்பு வேலைக்கும், அரசனுக்கு ஆலோசனை கூறுவதற்கும் இக் கூட்டத்தினின்று தான் சிலர் தெரிந்தெடுக்கப் படுகின்றனர். படைத்தலைவனும், தலைமை நீதிபதியும் இவ்வகுப்பைச் சேர்ந்தவர்களே.

இந்திய அரசாங்கம் இவ்வாறு பிரிக்கப்பட்டிருக்கின்றது. தத்தம் கூட்டத்தைக் கடந்து, மணங்கள் செய்து கொள்ள எவரும் அனுமதிக்கப் படுவதில்லை. தமது வகுப்புக் குரியதல்லாத தொழில் புரிவதற்கும் ஒருவனும் அனுமதிக்கப் பட வில்லை. உதாரணமாகப் போர்வீரன் ஒரு



போதும் பயிரிடுவோனுய் வரமுடியாது; சிற்பன் அறிவனுய் (தத்துவஞானி) வரமுடியாது.

## இந்திய மக்களின் பழக்க வழக்கம்

[1]இந்திய மக்கள் எல்லோரும் செட்டான வாழ்க்கையுடையார். சிறப்பாகக், கூடாரங்களில் தங்கும்போது இவ்வாறிருந்தனர். ஒழுங்கற்ற கூட்டங்களை அவர்கள் வெறுத்தனர். ஆகவே, அவர்கள் ஒழுங்காக நடந்து கொள்வர். களவு சிறிதாக இருந்தது. சந்திரகுப்தனின் கூடாரத்தில் 400,000 மக்கள் தங்கினுர்கள். எப்போதாவது 200 [2]டிருமச்சுக்கு அதிகமாகக் களவு நடந்ததாகக் கூறப்படவில்லை. அவர்களுக்கு எழுத்துமூலம் சட்டங்கள் கிடையா.

அவர்கள் எழுத்தைப்பற்றி அறியார். கொடுக்கல் வாங்கல்கள் ஞாபகத்தைப் பொறுத்திருந்தன. ஆடம்பரமில்லாத வாழ்க்கை நடத்தியபோதும் அவர்கள் மகிழ்ச்சியுடன் இருந்தார்கள். யாகங்களிலன்றி அவர்கள் மது அருந்தவில்லை. மது நெல்லிலிருந்து வடிக்கப் பட்டது. அரிசியினுல் ஆக்கிய கஞ்சி அவர்களின் முக்கிய உணவாயிருந்தது. அவர்களது சட்டங்களைக் கவனிக்கும்போது அவர்கள் அரிதில் வழக்குக்குச் சென்ருர்களெனத் தெரிகிறது. கொடுக்கல் வாங்கல்கள் ஒருவர் ஒருவரிடத்திற்கொண்ட நம்பிக்கையைக் கொண்டு நடைபெற்றமையால் ஆவணங்கள் எழுதப்படவில்லை. அவர்கள் வெளியே சென்றபோது வீட்டையும் வீட்டிலுள்ள பொருள்களையும் காப்பதற்கு எவரையும் நிறுத்த வில்லை. அவர்கள் எப்பொழுதும் தனிமையாகவே உணவருந்துகிருர்கள். எல்லோரும் இன்ன நேரத்தில் உணவருந்த வேண்டும் என்னும் நியதி இருக்கவில்லை. பசிகொண்ட நேரங்களில் ஒவ்வொருவரும் உண்டனர்.

---

[1] *மகஸ்தனிஸ் கூறியபடி.*

[2] 66·5 *தானிய எடை.*

உடம்பை உரைஞ்சுவதையே அவர்கள் சிறந்த உடற் பயிற்சியாகக் கருதினர். அதற்காகப் பலமுறைகள் கையாளப் பட்டன. அழுத்தமான கருங்காலி உருளைகளை உடம்பில் அழுத்தி உருட்டுவதே அவற்றுள் சிறந்தது. அவர்களின் சமாதிக்குழிகள் ஆடம்பர மின்றிச் சாதாரண மாக விருந்தன. சமாதிக்குமேல் மண்ணைக் கொட்டி மேடு உண்டாக்கப்பட்டது. அவர்கள் அழகையும், ஆபரணங்களை யும் விரும்பினார்கள். உடைகள் பொன்னினால் அலங் கரிக்கப்பட்டிருந்தன. ஆபரணங்களில் வயிரங்களும், விலை யுயர்ந்த கற்களும் அழுத்தப்பட்டிருந்தன. பூவேலை செய்த சல்லாத் துணிகளை அவர்கள் உடுத்தார்கள். பரிவாரங்கள் அவர்களின் பின்னால் குடைபிடித்துச் சென்றனர். உண்மையும், புகழும் போற்றப்பட்டன. விவேகமில்லாத முதியவர்களுக்கு விசேட உரிமைகள் கொடுக்கப்படவில்லை.

அவர்கள் பல பெண்களை மணந்தனர். அவர்கள் ஒரு சோடி எருத்தைப் பெண்களுக்கு விலையாகக் கொடுத்துப் பெற்றோரிடமிருந்து அவர்களை வாங்குகின்றனர். சிலர் தமக்கு வாழ்க்கைத் துணை வேண்டுமென்று மணஞ் செய் கின்றனர். பலர் இன்பத்திற்காகவும், வீடுகளைப் பல குழந்தை களால் நிரப்புவதற்காகவும் மணஞ் செய்கின்றனர். யாக சாலைகளிலும், கடவுட் பூசைகளிலும் ஒருவரும் முடி அணிய வில்லை. பலியிடும் விலங்குகள் வெட்டிக் கொல்லப்பட வில்லை; மூச்சைப் பிடித்துத் திருகிக் கொல்லப்பட்டன.

பொய்ச் சாட்சி சொல்வோனுக்குக் கடுந்தண்டம் விதிக்கப்பட்டது. ஒருவனது உறுப்புக்குப் பங்கம் விளைத்த வனது அதே உறுப்பு வெட்டப்பட்டது; கையும் வெட்டப் பட்டது. சிற்பியின் கண்ணை அல்லது கையை இல்லாமற் செய்தவன் கொலை செய்யப்பட்டான்.

அரசனுடைய உயிர், பெண்களின் கையில் இருந்தது. அப்பெண்கள் தாய் தந்தையரிடமிருந்து விலைக்கு வாங்கப் பட்டவர்களாவர். வாயிலுக்கு வெளியே காவலாளரும்,



போர்வீரரும் காவல் புரிந்தனர். அரசன் மதுவுண்ட மயக் கத்தில் இருக்கும்போது அவனைக் கொல்லும் பெண், இனிவரும் அரசனுக்கு மனைவியாகிறாள். அரசன் பகற் காலத்துத் துயில் கொள்ளான். தனக்குமாறாக நடக்கக் கூடிய சதிகளுக்குப் பயந்து அவன் அடிக்கடி தனது படுக் கையை மாற்றுவதுண்டு. போர்க்காலங்களில் மாத்திரமல் லாது வழக்குகளுக்குத் தீர்ப்பளித்தற்கும் அவன் வெளியே செல்கின்றான். நீதி செலுத்தும் இடத்தில் அவன் முழு நேரத்தையும் செலவிடுகிறான். அந்நேரத்தில் நான்கு வேலையாட்கள் அவனது உடலை மர உருளைகளால் உரைஞ்சுகின்றனர். உருளைகளால் உரைஞ்சும் போதே அவன் வழக்குகளை விசாரணை செய்கிறான். வேட்டையாடு தற்கும், வேள்விச் சாலைகளிற் பலி செலுத்துதற்கும் அவன் வெளியே செல்கிறான். வேட்டைக்குச் செல்லும்போது பெண்கள் பலர் அவனைச் சூழ்ந்து நிற்கின்றனர். இவர் களுக்குப் புறத்தே ஈட்டி தரித்த வீரர் சூழ்ந்து நிற்கின்றனர். வீதிகளிற் கயிறுகள் கட்டப் படுகின்றன. கயிறு கட்டப் பட்ட இடத்தே செல்லும் ஆண் அல்லது பெண்ணுக்கு மரண தண்டனை விதிக்கப்படுகின்றது. மேளம், சல்லரி முதலிய வாத்தியங்களோடு பரிவாரங்கள் செல்கின்றன. அரசன், வளைத்து அடைக்கப்பட்ட இடத்தே உயரமான இடத்தில் நின்று அம்புகளை எய்கிறான். அவனுக்குப் பக்கத்தில் ஆயுதந் தரித்த இரண்டு அல்லது மூன்று பெண்கள் நிற்கின்றனர். வெளி இடங்களில் வேட்டை யாடும்போது அவன் யானையின் அம்பாரிமீதிருந்து அம்பு களை எய்கின்றான். பெண்கள் சிலர் தேர்மீதும், சிலர் குதிரை மீதும், சிலர் யானைமீதும் செல்கின்றனர். போருக்குச் செல்வதை ஒப்ப அவர்கள் பல ஆயுதங்களைத் தாங்கிச் செல்கின்றார்கள்.

## அரசாங்க அமைப்பு

அரசாங்க உத்தியோகத்தரிற் சிலர், சந்தைகளையும் சிலர் இராணுவத்தையும், சிலர் நகரத்தையும் மேற்பார்க்

கின்றனர். சிலர் ஆறு வழியாக நிலங்களுக்கு நீர்ப்பாய்ச்சு வதையும், சிலர் நில அளவைகளையும், சிலர் ஆற்றின் சிறிய கால்வாய்களால் நீர் செல்லும் மடைகளையும் கண் காணிக்கின்றனர். சிலர் விறகு வெட்டுவோரையும், தச்சு வேலை கொல் வேலை சுரங்க வேலை முதலியன புரிவோரையும் மேற்பார்த்து வரி தண்டுகின்றனர். இவர்கள் வீதிகளையும் அமைக்கின்றனர். தூரத்தையும், கிளைப்பாதைகளையும் அறிவிக்கும் தூண்கள் மைலுக்கொன்றாக நடப்படுகின்றன.

நகர ஆட்சி, ஆறு சபையினரால் நடத்தப்படுகின்றது. முதற் பிரிவினர் கைத்தொழில் சம்பந்தமான எல்லா வற்றையுங் கண்காணிப்பர். இரண்டாவது பிரிவினர் பிற நாடுகளினின்றும் வருவோரைக் கவனித்து, அவர்கள் தங்குதற்கேற்ற வசதிகளைப் புரிகின்றனர். அப்புதியவர் களுக்குத் துணையாக இருப்போர் அவர்களின் போக்கைக் கவனித்து அதிகாரிகளுக்கு அறிவிக்கின்றனர். பிற நாட்ட வர்கள் இறக்க நேர்ந்தால் அவர்களின் உடைமைகள் உறவினரிடம் சேர்ப்பிக்கப்படுகின்றன. இறந்தவர்களின் பிணங்கள் புதைப்பிக்கப்படுகின்றன. மூன்றாவது பிரிவினர், நாட்டில் ஏற்படும் இறப்புப் பிறப்புக்களைக் கவனிக்கின்றனர். உயர்ந்தவர் தாழ்ந்தவர் என்ற பேதமின்றி எல்லோருக் கிடையிலும் ஏற்படும் இறப்புப் பிறப்புக்கள் தவறாமல் பதியப் படுகின்றன. நாலாவது பிரிவினர் சந்தைகளைக் கவனிக் கின்றனர். இவர்களே நிறைகளுக்கும் அளவுகளுக்கும் பொறுப்பாயிருக்கின்றனர். பொது மக்களுக்கு அறிவித்த பின் அறுவடை காலத்திற் கிடைக்கும் விளைபொருள்கள் பகிரங்கத்தில் விற்கப்படுகின்றன. ஒன்றுக்கு அதிகமான பண்டங்களில் வாணிகஞ் செய்ய எவரும் அனுமதிக்கப்பட வில்லை. ஐந்தாவது பிரிவினர் கைத்தொழிற் பண்டங்களைக் கவனிக்கின்றனர். புதிய பண்டங்களும், பழைய பண்டங்-களும் வெவ்வேறாக வைத்து விற்கப்படுகின்றன. புதியவற்



றையும், பழையவற்றையும் கலந்து விற்போருக்குத் தண்டனை விதிக்கப்படுகின்றது. ஆறாவது பிரிவினர் வாணிகப் பொருள்களின் விலையில் பத்தில் ஒன்றை வரியாகத் தண்டுகின்றனர். இவ்வாறு ஆறு பிரிவினரும் கடமை ஆற்றுகின்றனர். இவர்கள் ஒன்று சேர்ந்து, பொதுக் கட்டிடங்களின் பாவிப்பு, அவற்றின் பழுதுபார்ப்பு, பண்டங்களின் விலை, சந்தை, துறைமுகம், ஆலயங்கள் ஆகியவற்றிற்குப் பொறுப்பாகவிருக்கின்றனர்.

நகரின் நீதி அதிகாரிகள் இராணுவத்தை நடத்து கின்றனர். இவர்கள் ஐந்து உறுப்பினர்கள் அடங்கிய ஆறு சபைகளாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றனர். ஒன்று கடற் படை அதிகாரிகளோடு ஒத்துழைக்கின்றது. இரண்டாவது போருக்குரிய இயந்திரங்களையும், போர் வீரரின் உணவை-யும் பிற பொருள்களையும் கொண்டு செல்லும் எருதுகளை யும், வண்டிகளையும் கவனிக்கின்றது. இது, வேலையாட் களையும், பறையடிப்போரையும், சல்லரிபோடுவோரையும், குதிரைப்பாகரையும், இயந்திரம் பழுது பார்ப்போரையும், அவர்களின் உதவியாளரையும் அளிக்கின்றது. சல்லரி களால் செய்யப்படும் ஓசைக் குறிப்பை அறிந்து வேலை யாட்கள் குதிரைகளுக்குப் புல் கொண்டு வருகின்றனர். மூன்றாவது பிரிவு காலாட்படைக்குப் பொறுப்பா யிருக் கின்றது. நாலாவது, குதிரைப் படைக்கும், ஐந்தாவது தேர்களுக்கும், ஆறாவது யானைப் படைக்கும் பொறுப்பா யிருக்கின்றன. அரசினரின் ஆயுதசாலை உண்டு. ஒவ் வொரு போர் வீரனும் ஆயுதங்களை ஆயுதசாலையிலும், குதிரை அல்லது யானையை இலாயத்திலும் விட்டுச் செல் கின்றான். அவர்கள் யானைக்குக் கடிவாளமிடுவதில்லை. தேர்களை எருதுகள் இழுத்துச் செல்கின்றன. அவை தேரை இழுத்துக் களைத்தால் பூட்டுதற்குக் குதிரைகள் பக்கத்தே நடத்திச் செல்லப்படுகின்றன. தேர்ப்பாகனின் இரண்டு பக்கங்களிலும் ஒவ்வொரு வீரன் இருக்கின்றான்.

போர் யானை நாலு வீரரைக் கொண்டு செல்கின்றது. ஒருவன் பாகனும் மூவர் போர் செய்வோருமாவர்.

## தத்துவ ஞானிகள்

மகஸ்தனிஸ் தத்துவ ஞானிகளை இருவகையாகப் பிரிக்கின்றார். ஒரு பிரிவினர் [1]பிராச்மேன் என்றும் மற்றப் பிரிவினர் *சார்மேன் என்றும் அழைக்கப்படுகின்றனர். பிராச்மேன்களின் கொள்கைகள் உண்மையாக இருக்கின்றமையின் அவர்கள் மிக மதிக்கப்படுகின்றனர். கருப்பத்திலிருந்தே அவர்கள் அறிவாளிகளின் பாதுகாப்பில் இருக்கின்றனர். தாயினதும் குழந்தையினதும் நலத்துக்காகச் சில கிரியைகளைச் செய்வதாக நடித்து அறிவாளிகள் அவளுக்கு வேண்டிய புத்திமதிகளைக் கூறுகின்றனர். அவர்களின் புத்திமதிகளை ஆவலோடு கேட்பவள் மிக அதிட்டசாலி என்று கருதப்படுகிறாள். பிறந்தபின் குழந்தை ஒருவர்பின் ஒருவராக அறிவில் உயர்ந்த பலரின் பாதுகாப்பில் இருந்து வருகின்றது.

தத்துவ ஞானிகள், வளைத்தடைத்த நடுத்தரமான சோலைகளின் மத்தியில் வசிக்கின்றனர். அவர்களின் வாழ்க்கை சாதாரணமானது; அவர்கள் புல், மான் தோல் முதலியவற்றின் மீது படுக்கின்றனர்; மாமிசம் புசிப்பதில்லை; பெண்போகத்தை வெறுக்கின்றனர். கேட்பதற்கு அறிவைக் கொடுக்கும் பலவற்றைப் பேசுவதில் அவர்கள் காலத்தைப் போக்குகின்றனர். அவர்கள் பேசுவதைக் கேட்போர் மௌனமாகவும், அமைதியாகவும் இருத்தல் வேண்டும். இவ் விதியைத் தாண்டுவோர் எவராயினும் இரக்கமின்றி அக் கூட்டத்தினின்றும் விலக்கப்படுகின்றனர். இவ்வாறு வாழும் ஒவ்வொருவரும் முப்பத்தேழு

[1]Brachmanes - *பிராமணர்.*
*Sarmanes - *புத்த குருமார்.*



ஆண்டுகளுக்குப்பின் தத்தம் இல்லங்களுக்குச் செல்கின்றனர். அப்பொழுது அவர்கள் அழகிய சல்லா (மசிலின்) ஆடைகளை உடுக்கின்றனர்; விரல்களில் மோதிரங்களும், காதிற் குண்டலமும் அணிகின்றனர்; தொழில் செய்கின்ற விலங்குகளல்லாத பிறவற்றின் ஊனைப் புசிக்கின்றனர். காரமானதும் அதிகம் தாளிதம் செய்யப் பெற்றதுமாகிய உணவை அவர்கள் விரும்புவதில்லை. எத்தனை மனைவியரையும் அவர்கள் மணந்து கொள்ளலாம். அடிமைகளில்லாமையால், கூடிய தொகை மனைவியர்களையும், பிள்ளைகளையும் உடையரா யிருத்தல் தமக்கு வாய்ப்பாகுமென்று அவர்கள் எண்ணுகின்றனர்.

பிராச்மேனியர் சாத்திர உண்மைகளைத் தம் மனைவியருக்குச் சொல்லிக் கொடுப்பதில்லை. பிறருக்கு மறைக்கப்பட்ட அவ்வுண்மைகளை வெளிப்படுத்தி அவற்றின் தூய்மையைக் கெடுத்து விடுவார்கள் அல்லது உண்மை அறிவு மிகுந்து தம்மைவிட்டுப் பிரிந்து விடுவார்கள் என்று அவர்கள் அஞ்சுகின்றனர். நல்ல மனைவியும், கணவனும் சுக துக்கங்களைச் சமமாகக் கருதி வாழ்க்கை நடத்துகின்றனர். அவர்கள் அடிக்கடி பேசும் கருமங்களில் மரணம் ஒன்றாகும். பிறப்பைப் போல இறப்பு வரும் என்றும் அவர்களின் சரித்திரம் கூறுகின்றது. மனிதனுக்கு நேரும் சுக துக்கங்களெல்லாம் கனவு போன்ற மாயை என்றும், இல்லாவிடின் ஒரு பொருள் சிலருக்குத் துன்பத்தையும், வேறு சிலருக்கு இன்பத்தையும் கொடுக்க முடியாதென்றும், ஒரே பொருள் வெவ்வேறு காலங்களில் நேர் விரோதமான அநுபவங்களைக் கொடுக்கக் காரணமென்ன என்றும் கூறுகின்றனர்.

இயற்கையின் நிகழ்ச்சிகளைக் குறித்த அளவில் அவர்கள் குறைவான விளக்க முடையவர்களாயிருக்கின்றனர். அவர்கள் கட்டுக்கதைகளை நம்புகின்றனர்; நியாய

ஆராய்ச்சியிலும் பார்க்கச் சாதனையில் திறமையுடையவர்களாகக்காணப்படுகின்றனர். அவர்களின் கொள்கைகள், பலவகையில் கிரேக்கரின் கொள்கைகளோடு ஒற்றுமையுடையனவாய்க் காணப்படுகின்றன. [1]கிரேக்கரைப் போலவே அவர்களும், உலகம் ஒரு காலத்தில் உற்பத்தியான தென்றும், அது உருண்டை வடிவினதென்றும், அதனை உண்டாக்கிய கடவுள் அதன் எல்லாப் பாகங்களிலும் செறிந்திருக்கின்ருரென்றும் கூறுகின்றனர். இவ்வுலகின் தொடக்கத்துக்கு முதற்காரண முண்டென்றும், அது நீரினின்று உண்டாயிற்றென்றும், நிலம், தீ, நீர், காற்று என்னும் நான்கு பூதங்களைவிட ஐந்தாவது பூதம் ஒன்று உண்டென்றும், அதினின்றும் வானமும், விண்மீன்களும் உண்டாயின என்றும் அவர்கள் நம்புகின்றனர். பூமி உலகங்களின் மத்தியில் இருப்பதாகக் கருதப்படுகின்றது. படைப்பு, உயிரின் இலக்கணம் இவை போன்ற பல கருத்துக்கள் கிரேக்கரின் கொள்கைகளோடு ஒத்திருக்கின்றன.

இனி சார்மேன்களில் ஹைலே பியோய் என்னும் பிரிவினர் மிக மரியாதை பெறுகின்றனர். அவர்கள் காட்டில் வாழ்ந்து அங்கு கிடைக்கும் இலைகளையும்,

[1] The parallels between Orphism and Buddhism are entirely very close. Both sectslived in monastic communities, abstained from taking life or eating meat and believed in the doctrine of metempsychosis. Pythogoras who was born about 582 B. C. is credited with having wandered as far as India in search of knowledge. "It is not too much" says Garb, "to assume that the curious Greek, who was a contemporary of Buddha, and it may be of Zoroaster too would have acquired more or less exact knowledge of the East, in the age of intellectual fermentation through the medium of Persia. —*India-A Short Culture History, p. 57.*

—*H. G. Rawlinson (London 1948)*



பழங்களையும் புசிக்கின்றனர்; மரப்பட்டைகளைத் தைத்து உடையாக உடுக்கின்றனர். பெண்போகமும், மதுமாமிசமும் அவர்களுக்கு விலக்கு. அரசன் இவர்களிடம் தனக்கு வேண்டிய தூதுவர் மூலம் ஆலோசனைகளைச் செய்கிருன்; இவர்கள் மூலம் கடவுளுக்கு வழிபாடும் செய்விக்கின்ருன்.

இவர்களுக்கு அடுத்தபடியில் உள்ளோர் மருத்துவர். அவர்கள் மனிதனின் இயற்கையைப்பற்றி ஆராய்ச்சி செய்கின்றனர். அவர்களின் பழக்க வழக்கங்கள் சாதாரணமானவை. அவர்கள் வயல்களில் வசிப்பதில்லை. அவர்களின் உணவு அரிசியும், வாளியும். இவற்றை அவர்கள் யாரிடமேனும் கேட்டுப் பெற்றுக்கொள்ளுகின்றனர் அல்லது, விருந்தாகத் தங்குமிடங்களிற் பெறுகின்றனர். இவர் தமது கலையின் சிறப்பால் மகிழ்ச்சிக்கேற்ற திருமணங்களை ஒழுங்குசெய்வர். பிறக்கும் குழந்தைகள் ஆண் அல்லது பெண் என்று முன் அறிந்து சொல்லுவர். அவர்கள் உணவு முறைகளால் நோயை மாற்றுகின்றனர். மருந்தை அருமையாகப் பயன்படுத்துகின்றனர். முக்கியமாகத் தைலங்களையும் பூச்சுகளையுமே அவர்கள் பயன் படுத்துகின்றனர்; மற்றைய முறைகள் இயற்கைக்கு மாறுபட்டவை என்று கூறுகின்றனர். இவர்களும் வேறு சில வகுப்பினரும் நாள் முற்றும் அசையாது ஓரிடத்தில் நிற்றல் போன்ற பயிற்சிகளைச் செய்கின்றனர்.

இவர்களை யன்றி மந்திரவித்தைக்காரரும், தவவேடம் பூண்டோருமிருக்கின்றனர். இவர்களும் உயர்ந்த திருத்த முடையவர்களாகக் காணப்படுகின்றனர். மறு உலகத்தைப் பற்றிய எண்ணம், பத்தியையும் புனிதத்தையும் உண்டாக்குமென்று அவர்கள் கூறுகின்றனர். இவருள் சிலரிருந்து பெண்கள் சமய சாத்திரத்தைக் கற்கின்றனர்.

### பாடலிபுத்திரா (பற்னு)

கங்கையாற்றின் அகலம் 100 [1] ஸ்ராடியா. அதன் குறைந்த ஆழம் 120 அடி. கங்காநதியும் இன்னொரு ஆறும் கூடுமிடத்தில் பலிபோத்திரா என்னும் ஒரு நகர் இருக்கிறது. இதன் நீளம் எண்பது ஸ்ராடியா, அகலம் பதினைந்து ஸ்ராடியா அது நீண்ட சதுரவடிவானது. அதைச்சுற்றி மரத்தினுல் இடப்பட்ட அரண் உண்டு. அம்புகளை வெளியே எய்யக்கூடியதாகச் சுவரின் இடையிடையே துவாரங்கள் செய்யப்பட்டிருக்கின்றன. சுவருக்கு முன்னுல் அகழி ஒன்று இருக்கிறது. நகரின் கழிவுநீர் இதனுள் விழுகின்றது. இவ்விடத்தி லுள்ளவர்கள் இந்தியா முழுமையிலும் வாழ்பவர்களிலும் சிறந்தவர்கள். அரசன் தனது குடும்பப் பெயரோடு பலிபோத்திரா அல்லது சந்திர-கோத்திரா என்னும் பெயரைச் சேர்த்துக்கொள்ள வேண்டும்.

அகழ்கள் 600 அடி அகலமும், 30 முழ ஆழமுமுடையன. மதில் 570 கோபுரங்களும், அறுபத்துநான்கு வாயில்களும் உடையதாயிருக்கிறது. இந்தியன் ஒவ்வொருவனும் சுதந்திர வாழ்க்கை யுடையவனுயிருக்கின்ருன். அடிமைகள் ஒருவரும் காணப்படவில்லை.*

[1] 606 அடி 9 அங்குலமுள்ள ஒரு கிரேக்க அளவை.

*Indian Antiquary Vol. 6. PP. 123—124; 131—133; 238—239; 239, 245.

# 3. கடவுட்கொள்கை

## திருமால்

முல்லை நில மக்கள் திருமாலைக் குல தெய்வமாகக் கொண்டு வழிபட்டனர். [1] திருமாலைப் பற்றிக் கூறப்படும் வரலாறுகளை நோக்குமிடத்து, அவை கண்ணன் வழிபாடே என்று நன்கு விளங்குகின்றது. இவ்வழிபாடு பாரதப் போருக்குப்பின் ஏற்பட்டதெனச் சரித்திர ஆசிரியர்கள் கூறுகின்றனர். முல்லை நில மக்கள் திருமாலுக்குப் பாற்சோறு பொங்கிப் படைப்பர்; ஆயர் வேய்ங்குழலூத ஆய்ச்சியர் மாயன் புகழ் பாடிக் குரவையாடுவர். குரவையென்பது காமமும், வென்றியும் பொருளாகக் குரவைச் செய்யுள் பாட்டாக எழுவரேனும் ஒன்பதின்மரேனும் கைபிணைத்தாடுவது.

பரிபாடலில் கண்ணனும், கண்ணனின் மூத்தோன் பலதேவனும் ஒருவராக வைத்து வழுத்தப்படுகின்றனர். பரிபாடலில் மாயோனைத் துதிக்கும் பாடலொன்றை உரை நடையில் தருகின்றேம்.

மாயோனே! மாயோனே! மறுபிறப்பறுக்கும் மாசில்லாத சிவந்த பாதங்களுடைய நீலமணி போன்று விளங்குந் தோற்றமுடைய மாயோனே! நிலம், நீர், தீ, காற்று, விசும்பு என்னும் ஐந்து பூதங்களும், இவற்ருேடு ஞாயிறு, திங்கள், வேள்விமுதல்வன் என்னும் மூவர் சேர்ந்த அட்ட மூர்த்தங்களும், திதியின் சிறுவராகிய அசுரரும், காசிபனின் மக்களாகிய ஆதித்தர் பன்னிருவரும், குற்றமற்ற எட்டு வசுக்களும், பதினெரு உருத்திரரும், தாவிச் செல்லும் குதிரை வயிற்றிற் பிறந்த அசுவினிதேவர் இருவரும்,

[1] வண்புனற் றொழுநை வார்மண லகன்றுறை
அண்டர் மகளிர் தண்டழை உடீஇயர்
மரஞ்செல மிதித்த மால் போல. (அகம் 59.)

இயமனும் அவன் ஏவல் கேட்கின்ற கூற்றுவரும், ஒவ்வொன்று ஏழுவகைப்பட்ட மூவகை உலகமும், உலகின் உயிர்களும் நின்கண் தோன்றிப் பரந்தனர் என்று அழியாத மெய்யுடைய வேதமுரைத்தது. யாம் அவற்றை எல்லாம் கூறுதற்கு உரியேமல்லேமாயினும் ஈண்டு சிலவற்றைப் பிறழ உரைக்கின்றேம். வேதமாகிய தடாகத்துள் மலர்ந்த பிரமனும், அவன் தாதையும் நீ யென்று நாவலந்தீயின் அந்-தணர் அருமறை புகலும். காவல் காத்து நின்ற, அழகிய ஆபரண மணிந்த அமரரை ஓட்டிக் கவர்ந்து வந்த அமிர்தத்-தால் ஈன்றுளது துன்பத்தைக் களைந்த புள்ளினை ஊர்தியாக உடையோய்! அன்னையின் துயர்களைந்த கருடனை எழுதப் பெற்ற கொடியோய்! உனது பாதங்களைத் தொழாதவர் களுமுளரோ? குறள் வடிவமாக உலகை அளக்கின்ற காலத்துக் கீழேழுலகையும் எஞ்சாமல் அளந்த அடியினை யுடையோய்! எல்லாவற்றையும் எரிக்கின்ற நெருப்பு, கூற்றுவர் எமன் குற்றமில்லாத ஆயிரங் கதிருடைய ஆதித்தர் பன்னிருவர் என இவரெல்லாம் ஒன்று கூடும் உக இறுதிக் கண் பூமி தீயிடை அமிழ்ந்தது. அக்காலத் துப் பன்றியாகி நீ அதனை மருப்பாற் பெயர்த்தெடுத்தா யென்றும், விசும்பினின்றும் ஒழுகும் புனலை வெள்ளை அன்னச் சேவலாய்ச் சிறகினுற் புலர்த்தினு யென்றும், பூமியிலுறையும் தேவராகிய முனிவரும் வானத்து உறை யும் முப்பத்து மூவரும் விசும்பினினின்று நின்னைத் துதித் துப் பாடுவர். அன்னோர் பாடுவது தமக்கு முன்னோராகிய பாடுவோரின் முறைமையே. எம் பாடல்கள் தாமும், எம் முன்னோர் பாடும் முறையினவே. நின் தொன்மை அறிய முடியாத தன்மையில் எமக்கும் அவர்க்கும் வேற்றுமை இன்று.

வாசுதேவனே! பல தேவனே! பொன்னிறமேனி யுடைய காமனே! பச்சுடம்புடைய மாலே! ஆய்ச்சியரோடு கைகோத்தாடுதலின் அவர் குலமும் இடமும் ஆயினோய்! அறியப்படாத மாயினோய்! அன்பரது விடாத நினைவின் கண்ணேயோய்! மாயாத நிலைபேற்றையுடையவனே! பழைய முறையில் வந்த புதல்வா! நல்ல யாழுடைய பாண! வன மாலையணிந்த செல்வ! வெற்றிச் சங்குடையவனே! பொன்னிறத்தால் மிக்க ஆடையை யுடையாய்! வலம்புரிச் சங்கைத் தாங்கிய அண்ணலே! மற்போரில் வல்லவ! இலக்குமியின் நாயக! பெருவலியுடைய மள்ள! பெரிய உலகந் தோன்றாத காலத்து, நிறைந்த வெள்ளத்தின் நடுவே பிரமனைக் கொண்ட உந்திக்கமலமாகிய பொகுட்டுத் தாமரையையுடையை! நின் சக்கரமே உலகுக்கு நிழலாவது. (பரிபாடல் 3.)



திருமாலுக்கு உயிர்ப்பலி கொடுத்து வணக்கஞ் செய்யப்பட்டதாக எவ்விடத்தும் கூறப்படவில்லை. திருமால் வணக்கமும் வேதங்களிற் சொல்லப்படும் விஷ்ணு வணக்க-மும் வேறானவை. வேதங்களிற் சொல்லப்படும் விஷ்ணு சூரியனைக் குறிக்கும். சூரியன் தோன்றி உச்சிக்குவந்து மறைதலாகிய மூன்றிடங்களும் விஷ்ணுவின் மூன்று அடிக ளொன்று சொல்லப்படும். சிவன், [2]முருகன், திருமால், உமை முதலிய வணக்கங்கள் தமிழ்நாட்டுக்குச் சொந்த மானவை. கி. மு. 3-ஆம் நூற்றாண்டில் கிருட்டிண பலதேவ வணக்கங்கள் ஆர்மேனியாவில் பரவியிருந்தன[3].

---

[1] Vishnu, the wide-stepper, explained by Yaska as the Sun who steps from the eastern horizon to the zenith and from the zenith to the western horizon and whose name was probably derived from Tamil Vin, the sky– *Stone age in India*, P. 52.

[2] சூர்மருங் கறுத்த சுடரிலை நெடுவேற்
சினைமிகு முருகன் (அகம் 59)

[3] We learn from the Syrian writer Zenob that the worship of the Hindu deity Krishna was prevalent in Armenia at least in the second and third centuries before the Christian era. Temples dedicated to Krsihna and

## முருகன்

குறிஞ்சி நிலமக்கட்குக் கடவுள் முருகன். முருகவழி பாட்டைப்பற்றித் திருமுருகாற்றுப்படை, பரிபாடல் முதலிய நூல்கள் விரித்துக் கூறுகின்றன. பாமரர் முதல் ஞானிகள் வரை ஒவ்வொருவரும் தத்தம் அறிவுக்கு எட்டிய வரை முருகக் கடவுளைப் பலவாறு வழிபட்டனர். திருமுருகாற்றுப்படையில் பழமுதிர் சோலையிற் (பழநி) குறத்தியர் செய்து போந்தவழிபாடே மிகப்பழமையுடையது. அதனை இவ்விடத்துத் தருகின்றேம்.

[1] "கோழிக்கொடியை நட்டுச் சிறிய தினையரிசியைப் பூக்களோடு கலந்து பலியாகத் தூவி மறியறுத்து ஊர்கள் தோறும் எடுக்கும் தலைமை பெற்ற விழா விடத்து முருகக் கடவுள் எழுந்தருள்வார்.

"அன்பர் ஏத்துமிடத்தும், படிமத்தான் இழைத்த வெறியாடுகளத்தும், காட்டிலும், பொழிலிலும், அழகிய ஆற்றிடைக்குறையிலும், ஆறுகளிலும், குளங்களிலும், நாற்சந்தியிலும், கடம்படியிலும், ஊருக்கு நடுவே எல்லோரும் இருக்கும் மரத்தடியிலும், அம்பலத்திலும், ஆதீண்டு குற்றியிலும் முருகக் கடவுள் எழுந்தருளுவார். குறமகள் ஊருக்கு நடுவே கோழிக் கொடியை நட்டு, அவ்விடத்தை முருகனுக்குக் கோயிலாக அலங்கரித்து நெய்யையும், வெண்சிறுகடுகையும் நெற்றியிடத்தே அப்பி, சிறு மந்திரங்களை ஓதி வணங்குவாள்; வணங்கி அழகிய மலர்களைச் சிந்தி இரண்டு வேறு நிறமுடைய ஆடைகளை ஒன்றன் மேல் ஒன்றாக உடுத்து, சிவந்த நூலைக் கையிற் காப்பாகக் கட்டி, வெண்பொரி தூவுவாள்; கொழுத்த கிடாயின்

---

containing big images were set up near the lake Van These were later destroyed by the early Christians. Zenob says in the fourth century A. D. there were in Armania 5000 followers of Krishna,—*The vision of India, p. 11—Sisir Kumar Mitra.*



பூக்களோடு கலந்த வெள்ளரிசியைப் பலியாக இட்டுத் தாளியங்களையும் பலியாகத் தூவிப் பசியமஞ்சளோடு சந்தனத்தைத் தெளித்துக் குளிர்ந்த செவ்வலரிமாலையையும், நந்தியாவர்த்தமாலைகளையும் அசையும்படி ஓரளவாய் தூக்குவாள்; மலைப்பக்கத்திலுள்ள ஊர்களைப் பசியும், பிணியும் வருந்தாமல் இருக்கும்படி வாழ்த்துவாள்; நறிய தூபங் கொடுத்து, அருவியின் ஓசையையுடைய பல வாத்தியங்கள் ஒலிக்க, சிவந்த பூக்களையும், சிவந்த தினையையும் பரப்பி, முருகன் வெளிப்பட்டு வரும்படி வழிபடுவாள்" (முருகாற்றுப் படை).

"பெரிய போரிடத்துச் சூரபன்மாவைக் கிளையோடு அழித்த சுடர் விடுகின்ற வேற்படையுடையோய்! கறையில்லாத கார்காலத்து வெண்மேகம் எழுந்தாலன்ன நறிய அகில் முதலியவற்றின் புகையை விரும்பினோய்! ஆறுமுகமும், பன்னிரண்டு தோளுமுடையாய்! அழகிற் பிறரை வென்ற வள்ளியின் நலத்தை நயந்தோய்! பிரிந்த கணவர் மீண்டு வந்து புணர்ந்து, பின் நீங்கா துறைதற் பொருட்டு மணம் வேண்டி மகளிர் யாழை மீட்டு நின்னைப் பாடுகின்ற பாட்டை விரும்பினோய்! பிறந்த ஞான்றே நின்னை எதிர்த்து இந்திரன் முதலாகிய தேவர் அஞ்சிய சிறப்புடையோய்! இருபிறப்பினையும் அப்பிறப்பான் வந்த இரண்டு பெயர்களையும், இளகிய நெஞ்சத்தினையும், ஒப்பில்லாத புகழினையுமுடைய அந்தணருடைய வைதிக ஒழுக்கத்தினைப் பொருந்தினோய்! நின்னையாங்கள் மேவி அடுத்தடுத்து வழிபடுவதன் பயன், அவ்வழிபாடுகள் மென்மேலும் நின் புகழினும் பலவாகுதலேயாகும். (பரிபாடல்)

களவுக் காலத்தே காதலனை நினைந்து மெலியுங் குறச் சிறுமியை முருகன் வருத்தியதாகக் கருதி வெறியாட்டெடுப்பதும் குன்றவாணர் வழக்கு.

வெறியாடும் முருகபூசை செய்வோன், சோற்றைப் படைத்துச் செம்மறிக்குட்டியையறுத்துச், செந்நெற் பொரியைச்சிதறி வணங்கிச் சிறுமியின் நெற்றியைத் தடவி விடுதலே வெறியாட்டெடுப்பதின் விபரமாகும்.[1]

## வருணன்

கடலோரங்களில் வாழ்ந்த பரதவர் வலை வளம்பட வேண்டிப் பூரணைக்காலங்களில் மணலிடத்தே சுருக்கோடு நட்டு, வெண்டாளி மலரைச் சூடி ஆடி வருணனை வழிபடுவர்.

ஆரியருடைய சமயக் கொள்கைகள் தொடக்கத்தில் நகர்களிலன்றிப் பிற விடங்களிற் பரவியிருக்குமென்று கொள்ள இடமில்லை. ஆரியருடைய வருண வழிபாடும், தமிழருடைய வருண வழிபாடும் தம்முள் வேறுபாடுடையன. பூர்வ குடிகளாகிய தமிழர்களுடைய வருணன் என்னும் கடவுட் பெயரை ஆரியர் தம் கடவுளுக்கு இட்டு வழங்கினர்களென்பது மிகவும் பொருத்தமாகின்றது. [2]இவ்வாறு பல அறிஞர் கருதினர்.

---

[1]*முருகு மெய்ப்பட்ட புலைத்தி போலத் தாவுபு தெறிக்கும்* (புறம் 259)

*களநன் கிழைத்துக் கண்ணி சூட்டி*
*வளநகர் சிலம்பப் பாடிப் பலிகொடுத்*
*துருவச் செந்தினை குருதியொடு தூஉய்*
*முருகாற்றுப் படுத்த வுருகெழு நடுநாள்* (அகம் 22)

[2]"The Aryan God, Varuna, was probably the God of the Dravidian tribes, being on the borders of the sea to whom the Aryan Rishis accorded a place in their pantheon—*Dravidian India P. 96.*

Probably Varuna who was the God of the tribes living on the borders of the sea to whom the Rishis accorded a place in their pantheon. The etymology of the name is obscure—*The age of the Mantras—p. 124—P. T. S. Iyengar.*



## வேந்தன்

மருத நிலமக்கள், பயிர் வளம்படவேண்டி வேந்தனை வழிபட்டனர். வேந்தனும் இந்திரனும் ஒருவராகப் பிற்காலத்திற் கொள்ளப்பட்டனர். இந்திரன், இரும்புத் தண்டைக் கையில் ஏந்திய கடவுள் என்று சொல்லப்படுவன்.

*வச்சிரத்தண்டக்கை நெடியோன் கோயிலுட்*
*போர்ப்புறு முரசங் கறங்க*" (புறம். 241).

[1]இந்திரனுக்கு, கொடியேற்றித் திருவிழாக்கள் நடைபெற்றன என்று சிலப்பதிகாரம், மணிமேகலை முதலிய நூல்களால் அறிகின்றோம். உழவர் வயல்களில் பருப்போடு அரிசி இட்டுப் பொங்கிய சோற்றைப் படைத்து, இந்திரனுக்கு வழிபாடு செய்தல் பெரும்பாலும் முற்கால மரபாயிருந்தது. இந்திரன் என்னும் சொல் இறைவன் என்பதன் உச்சரிப்பு வேறுபாடென்று பண்டிதர் சவுரிராய பிள்ளை அவர்கள் கூறுவர். தொல்காப்பியத்தில் வேந்தன் என்னும் பெயரே காணப்படுகின்றது. பண்டைநாள் மக்கள், நீதி அரசனின் ஆட்சியில் மழை பெய்கின்றதென நம்பினர்கள். அரசனையே, மக்கள் தெய்வமாகக் கொண்டு வழிபட்ட காலமுமுண்டு. இது பண்டை எகிப்தியர் வரலாற்றால் உணரலாம். ஆகவே, இறைவன் வழிபாடே இந்திரன் வழிபாடாக மாறிற்று என்று கருத இடமுண்டு.

## கொற்றவை

பாலை நிலமக்கள், கொற்றவைக்கு எருமை, ஆடு முதலிய விலங்குகளை வெட்டிப் பலியிட்டு வணங்கினர். தொல்காப்பியர், கொற்றவை, பாலை நிலத்துத் தெய்வமெனக் கூறவில்லை. புராணீகர் கொற்றவையை உமாதேவியாரோடு ஒன்று படுத்திக் கூறினர். சிவசத்தி வணக்

---

[1]*இந்திர வழிபாடு தென்னிந்தியாவுக்குப் பௌத்த சமயம் மூலம் வந்ததாகத் தெரிகிறது. பௌத்தர் இந்திரனைச் சக்கரன் என்னும் பெயரால் வழிபட்டனர்.*

கம் உயர்ந்த தத்துவக் கொள்கையுடைய மக்களுக்கிடையே காணப்பட்டது. அவர்களுக்கு இவ்வகைக் கோர வணக்க முரியதாக எவ்விடத்துஞ் சொல்லப்படவில்லை. போரில் வெற்றியைக் கொடுப்பதெனக் கருதப்பட்ட போர்த் தெய்வம் காலகதியில் சிவபெருமானின் சத்தியாகிய உமை எனக் கொள்ளப்பட்டது. திருமுருகாற்றுப் படையில் முருகக் கடவுள் கொற்றவை சிறுவன் எனக் கூறப்படுகின்றார். புராணமதம் சங்க காலத்துக்குச் சில நூற்றுண்டுகளின் முன்னரே பரவத்தொடங்கிவிட்டது.

## நாற்பெருங் கடவுளர்

நகர்களில் சிவன், திருமால், பலதேவன், முருகன் முதலிய தெய்வங்களுக்கு ஆலயங்களிருந்தன. பிறதெய்வங்களுக்கும் ஆலயங்கள் இருந்தபோதும், இந்நாற் கடவுளருமே பெருங்கடவுளராக வழிபடப்பட்டனர். * இதனை,

> "ஏற்றுவல னுயரிய வெரிமரு ளவிர்சடை
> மாற்றருங் கணிச்சி மணிமிடற் றோனுங்
> கடல்வளர் புரிவளை புரியு மேனி
> யடல்வெந் நாஞ்சிற் பனைக்கொடி யோனு
> மண்ணுறு திருமணி புரையு மேனி
> விண்ணுயர் புட்கொடி விறல் வெய்யோனும்
> மணிம யிலுயரிய மாறா வென்றிப்
> பிணிமுக வூர்தி யொண் செய்யோனுமென
> ஞாலங் காக்குங் கால முன்பிற்
> றோலா நல்லிசை நால்வர்" (புறம்-56)

என்னும் புறநானூற்றால் இனிது அறியலாகும்.

* பிறவா யாக்கைப் பெரியோன் கோயிலு
மறுமுகச் செவ்வே ளணி திகழ் கோயிலும்
வால்வளை மேனி வாலியோன் கோயிலு
நீல மேனி நெடியோன் கோயிலும் (சிலப்)



சிவ வழிபாடே தமிழர்களின் ஆதி வழிபாடாகவிருந்தது. ஆகவே, தமிழ் மக்கள் சிவபெருமானை முழுமுதற் கடவுளாகக் கொண்டு வழிபட்டனர். ஏனைய கடவுளரையும் சிவனோடு ஒன்று படுத்தியோ, அல்லது சம்பந்தப் படுத்தியோ புராணங்கள் கூறுகின்றன.

> " நுதல்விழி நாட்டத் திறையோன் முதலாப்
> பதிவாழ் சதுக்கத்துத் தெய்வ மீறாக,"

என, மணிமேகலை என்னும் பௌத்த நூலிற் கூறப்படுதலால், சிவனையே எல்லாத் தெய்வங்களுக்கும் மேலாக வைத்து தமிழ் மக்கள் வழிபட்டார்களென்பது நன்கு விளங்கும்.

மொகஞ்சதரோவில் சிவ வழிபாடு இருந்ததென்று முன்னோரிடத்தில் விளக்கப்பட்டது. சிவமதம் இந்திய நாட்டில் மாத்திரமன்றி அமெரிக்கா, கிரீஸ் முதலிய நாடுகளிலும் பரவியிருந்தது. மொசே, கடவுளருளிய பத்துக் கட்டளைகளை [1]சிவன் மாதத்தின் ஆரும் நாள் வெளியிட்டார்

[1] These events occurred on the 6th day of the third month Sivan—*Analysis of Scripture History, p. 77.* "Sivan" (May)—*Historian's History of the world, Volume I, p. 383.*

Hebrew Sivan; Assyro-Babylonian Simanu, the third ecclesiastical and ninth civil month of Jews' year corresponding to the later part of May and June celebrated to the Moon God, Sin of Assyria—*E. of Religion and Ethics.*

> நான் மறை முதுநூல் முக்கட் செல்வ
> னாலமுற்றங் கவின்பெறத் தைஇப்
> பொய்கை சூழ்ந்த பொழின் மணமகளிர்
> கைசெய் பாவை துறைக்க ணிறுக்கும் (அகம் 181)

> பால்புரை பிறை நுதல் பொலிந்த சென்னி
> நீலமணி மிடற்று ஒருவன்போல் மன்னுக (புறம் 112)
> ஆலமர் கடவுள் அன்னநின் செல்வம். (புறம் 198)

என்று சொல்லப்படுகின்றது. மொசேயின் காலம் கி. மு. 1500. எகிப்தை அடுத்த நாடுகளில் சைவசமயம் வழங்கிய தென்பதற்கு இது சிறந்த ஆதாரமாகும். மிகப் பழைய சிவாலயமொன்று அண்மையில் அமெரிக்காவில் கொலரடோ ஆற்றோரத்திலுள்ள பீடபூமியிற் கண்டு பிடிக்கப் பட்டது. அப்பீட பூமி மற்றத் தரைப்பாகத்திலிருந்து துண்டிக்கப்பட்டு இலட்சக் கணக்கான ஆண்டுகளா யிருக்கலாமென்று ஆராய்ச்சிக்காரர் கருதுகின்றனர். சம பூமி மட்டத்தில் ஓடிக் கொண்டிருந்த கொலரடோ ஆறு ஏழாயிரம் அடி ஆழத்துக்கு நிலத்தை அரித்துச் சென்றிருக் கிறது. இவ்வாறு நிகழ்வதற்கு 1,00,000 வருடங்கள் பிடித் திருக்க வேண்டுமென புவி யியலார் கூறுகின்றனர். சிவன் ஆலயத்துக்குப் பக்கத்திலுள்ள இடங்கள் கண்டுபிடிக்கப் பட்டிருக்கின்றன. சிவனுலயம் அரைச் சதுர மைலுள்ள சதுரமானதும், செங்குத்தானதுமான ஒரு மலையிலுள்ளது. இதனைக் கண்டு உலகம் பிரமித்தது. அங்குத் தீத்தட்டிக் கற்களாற் செய்த அம்புத் தலைகள் காணப்பட்டன.* சங்க[1]

* In September, the world was thrilled by the story of the American scientists who scaled the 'last word' of Shiva's temple in the Canyon of Arizona. Shiva's temple explorers found flint arrow head and white footed mice. —*Cavalcade Dec., 18, 1937—London.*

In the wild mountainous State of Colorado, seventh largest in America scientist of the W. S. Museum of Natural History three months ago announced discovery of a 'Lost world' The focal point was 'Shivas Grand Temple', a half square mile of solid rock plateau isolated from the mainland by 9,000 ft. Canyons was eroded by rivers some 200,000 years ago.—*News Review—London Sept., 23, 1937.*

"Shivas temple is one of the surface points which have been left high and dry by water on four sides. Conservative estimates put the date when animal life was cutoff



காலத்தில் சிவன் பெயர் குறிக்கப்படாமைக்குக் காரணம் அக்காலத்துக் கடவுளின் பெயர் வெளிப்படையாகக் கூறு தல் மரபாயிருக்கவில்லை யாதலால் எனத் தெரிகிறது.[1]

## உயிர்ப்பலி

பாலை நில மக்கள் காளிக்கு எருமை முதலிய விலங்கு களைப் பலி கொடுத்து வழிபட்டார்களென அறிகின்றோம். முருக வழிபாட்டில் வெறியாட்டாளன் ஓர் ஆட்டுக்குட்டியை அறுப்பது வழக்காகவிருந்தது. முருகன் உறைவதும், அரையிடத்தே மறி கட்டப்பட்டதுமாகிய கடம்பை அன்பர்கள் பலவகைப் பூசைப் பொருள்களுடன் சென்று வழிபட்டார்களெனப் பரிபாடலிற்[7] கூறப்படுகின்றது. மறி அறுக்கும் வழக்கம், திருப்பரங்குன்றம் போன்ற ஆலயங் களில் மறியை மரத்தின் அரையிற் கட்டும் வழக்கமாக மாறிற்று என்று கருத இடமுண்டு. மறி கட்டப்படும் கடம்பே தமிழர் வேள்விகளின் யூபமாக மாறி யிருத்தல்

from the rest of the world as at least 1,00,000 years ago. —"*Times of Ceylon*" *Sunday illustrated, June, 17, 1937.*

[1]சங்க நூல்களில் சிவனென்னும் பெயர் காணப்படாமை யால் சிவவழிபாடு பிற்பட்டதெனச் சிலர் கருதினர். பண்டை நாளில் கடவுளின் பெயரை வெளிப்படச் சொல்லுதல் வழக்கில்லை. இம்மரபு பற்றியே கடவுளின் பெயர்கள் மூல மந்திரமென இரகசியமாக வைத்துப் போற்றப்படுகின்றன. பலஸ்தீன் உரோம் முதலிய நாடுகளில் கடவுளின் பெயரை வெளிப்படச் சொல் பவருக்கு மரணதண்டனை போன்ற தண்டனைகள் இருந்து வந்தன. யேகோவா என்ற பெயருக்குப் பதில் வேறு பெயர் எழுதக் கையாளப்பட்டது. பெரியவர்களைப் பெயர் சொல்லி அழையாமையாகிய வழக்கு இன்றும் நமது நாட்டில் உண்டு.

[1]In Egypt the names of Gods were never uttered. It was a crime among the Jews to utter the name of Jawah—*The Mothers—Volume 3, p. 109.—Robert Briffault.*

கூடுமெனக் கருத இடமுண்டு. தென்னாட்டு அரசர் செய்து போந்த வேள்விகள் வட நாட்டாரின் யாகங்களோ எனச் சந்தேகிக்க இடமுண்டு. தமிழரது வேள்விச்சாலைகளில் மான்துஞ்சும் என்று சொல்லப்படுகின்றது[1]. தமிழர் செய்து போந்த வேள்வி என்பது ஓம குண்டத்தில் நெய் சொரிந்து பொரிதூவிச் செய்யப்படும் ஓமக்கிரியையாகும். ஓமகுண்டங்களில் வளர்க்கப்படும் மூவகை அங்கிகளும் சிவபெருமானது மூன்று கண்களாகிய சூரியன், சந்திரன், அக்கினி என்னும் ஒளியுடைப் பொருள்களைக் குறிப்பன வாகும். சிவபெருமானுடைய மூன்று கண்களும் தனித் தனி வழிபடப்பட்டன என்று சிந்து நதிப் பள்ளத்தாக்கிற் காணப்பட்ட முத்திரைகளிற் பொறிக்கப்பட்டிருக்கின்ற தென ஹெரஸ் பாதிரியார் கூறுகின்றார். பத்துப்பாட்டு முதலிய சங்க நூல்களில் சொல்லப்படும் வேள்விகள் என்பன இவ்வகையினவே. ஆரியர் வருகைக்கு முற்பட்ட தமிழரின் கொள்கைகளை அடிப்படையாகக் கொண்-டெழுந்த ஆகமங்களில் இவ்வகை வேள்விகளே சொல்லப்படுகின்றன. தமிழர் ஐம்பெரும் யாகங்களாகக் கொண்டவற்றுள், பிரமயாகம் வேத மோதுதலும், தேவ யாகம் ஓமம் வளர்த்தலும், மானுட யாகம் விருந்தோம்பலும், பிதிர்யாகம் நீர்க்கடனாற்றலும், பூதயாகம் பலியிதலும் ஆகும்.

[1]ஆகமங்களும், வேதங்களும் நேர் விரோதமான நூல்கள் என்பதைச் சரித்திராசிரியர்கள் எல்லோரும் ஒப்புக் கொள்கின்றனர். ஆகமங்களும், வேதங்களும் இணைக்கப் பட்ட புராணகாலத்துத் தமிழர், ஆரியர் தெய்வங்களாகிய இந்திரன், வருணன், அக்கினி முதலிய தெய்வங்களைத் [2]திக்குப் பாலகராகக் கொண்டமை கவனிக்கத்தக்கது. யூபம், யாகம் முதலிய சொல்லொற்றுமைகளைக்கொண்டு

[1] *சிறுதலை நவ்விப் பெருங்கண் மாப்பிணை*
*யந்தி யந்தண ரருங்கட னிறுக்கு*
*முத்தீ விளக்கிற் றுஞ்சும்* (புறம் 2)



தமிழர் செய்து போந்தன ஆரியரது யாகங்களையே யாகு மெனத் துணிதல் கூடாது. பசுவுக்கு வாயுறை கொடுத்தலைத் தமிழ் நாட்டவர் சிறந்த புண்ணியமாகக் கருதினர். இதனை,

*"யாவர்க்கு மாமிறை வற்கொரு பச்சிலை*
*யாவர்க்குமாம் பசுவிற்கொரு வாயுறை*
*யாவர்க்குமா முண்ணும்போதொரு கைப்பிடி*
*யாவர்க்குமாம் பிறர்க் கின்னுரைதானே"*

என ஆகமசாரமாகிய திருமந்திரத்துள் திருமூலர் கூறி யிருக்கின்றார். தமிழர் தமது வேள்விகளில் யூபமாகிய தறியில் பசுவைக் கட்டிப் புல்லுக் கொடுத்தார்கள் எனக் கூறுதல் ஏற்புடைத்து, "பறப்பைப் படுத்தெங்கும் பசு வேட்டு எரியோம்பும் சிறப்பர்" எனச் சம்பந்தமூர்த்தி சுவாமிகள் கூறிய தேவாரத்தில் 'பசுவேட்டு' என்பதற்கு

[1] But when the subject matter and the contents of the Agamas and the Vedas are closely examined and studied it will be found that the Agamas and the Vedas stand altogether apart as poles asunder—*The philosophy of the Lingayats, p. 269—Sarkare, M.A.*

[2] *இந்திரன், அக்கினி, யமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன், விட்டுணு, பிரமன்.*

[2]Varuna to whom so many prayers had been addressed disappears altogether with the pantheon and becomes a mere *Dikpalakar.* The only temple dedicated to him is in the island of Bali. Great god Indra, the Lord of thunder-bolt, the mighty destroyer of cities and the chief eater of sacrifices is merely a super - king of the lower heavens debonair debauchee. He is moreover made a constant petitioner for protection to the new gods Shiva and Vishnu. The vedic gods died soon after the Aryans conquered the the Dasus and were reborn as minor figures in wonder-fully elaborate mythology.

*A survey of Indian History, p. 8—K. M. Panikkar.*

ஓம்பல் என்பது பொருள். இன்றும் மணக்கிரியைகளின் முடிவில் மணப் பந்தருள் பசுவைக் கொணர்ந்து வாயுறை கொடுத்தலும், புதுமனை புகும் காலத்துப் பசுவை அதனுட் கட்டி வாயுறை கொடுத்தலும் வழக்காறுயிருக் கின்றன.

இக்காலம் மகேசுர பூசை என்னும் பெயருடன் நடை பெறுவதே அக்காலத் தமிழர் வேள்விகளாகவிருத்தல் கூடும். மகேசுர பூசையின் சிறப்பைத் திருமந்திரம் சிறப் பாகக் கூறுகின்றது. வள்ளுவனும் விருந்தோம்பலைப் பாராட்டிக் கூறுகின்றார். வேள்வி முடிவில் பலருக்குச் சோறளித்தல் வழக்காகவிருந்தது.* தமிழ் அரசர் புரிந்த யாகங்களில் விலங்குகளை வதைத்தார்கள் என்று எங்குஞ் சொல்லப்படவில்லை; இராவணன் முதலிய தமிழ் வேந்தர் ஆரியரால் இயற்றப்படும் கொலை சம்பந்தப்பட்ட யாகங்களை அழித்தார்கள் என்றே சொல்லப்படுகின்றது. இராவணன், தாரகன் ஆகியோர் ஆகமங்களிற் கூறப்படுவது போலவே தீ வளர்த்து அவ்வொளி வடிவைக் கடவுளாகக் கண்டு வழிப்பட்டார்கள். திருவண்ணாமலையில் கடவுள் சோதி வடிவாய் நின்றார் எனப்படுதல் அக்கால மக்கள் தீவாயிலாகக் கடவுளை வழிப்பட்டதை அறிவிக்கின்றது.

> *"என்பே விறகாக இறைச்சி யறுத்திட்டுப்*
> *பொன் போறக்கனலிற் பொரிய வறுப்பினும்"*

என்னும் திருமூலர் திருவாக்கும் ஈண்டு நினைவுகூரற்பாலது. தமிழரது வேள்வியும், ஆரியரது யாகமும் வேறுபட்டவை. தமிழரது வேள்வி என்பதற்கு விருந்தென்பது பொருள்.

> *"பரிந்தோம்பிப் பற்றற்றேமென்பர் விருந்தோம்பி*
> *வேள்வி தலைப்படாதார்"*

என்னும் குறளால் இது நன்கு அறியப்படும்.

---

* *"அருங்கடிப் பெருங்காலை*
*விருந்துற்ற நின்றிருந் தேந்துநிலை"* (புறம்—160).

## வேதம்

சிவன், முருகன், திருமால், பலதேவன் முதலிய தெய் வங்களுக்குத் துதி ஆரிய வேதங்களில் இல்லை. இருக்கு வேதத்திற் சொல்லப்படும் உருத்திரனும், சிவனும் ஒருவ ரல்லரென்றும், பிற்காலத்து இருவரும் ஒருவராகக் கொள்ளப் பட்டனரென்றும், உருத்திர வழிபாட்டைக் கூறும் இருக்கு வேதத்தின் பத்தாம் மண்டலம் பிற்காலத்திற் சேர்க்கப்பட்ட தென்றும் வேத ஆராய்ச்சிக்காரர் கூறியிருக்கின்றனர்.

முருகன், சிவன், திருமால், பலதேவன் முதலிய தெய் வங்களைத் தமிழ் நூல்கள் வழுத்துமிடத்து "மறைகள் நின்னைத் துதிக்கும்" என்று கூறுகின்றன. இவர்கள் பெயர்களே காணப்படாத ஆரிய மறைகளையே தமிழ்ச் சான்றோர் குறிப்பிட்டிருக்கின்றனர் எனக் கூறுதல் சிறிதும் பொருந்தாது.

தொல்காப்பியத்தில் எழுத்துக்களுக்கு மாத்திரை கூறு மிடத்து 'அந்தணர் மறைத்தே' என்றும் பிறிதோரிடத்து 'நரம்பின் மறைத்தே' என்றும் கூறப்படுதலின் பழைய அந்தணர் மறைகள் என்பன பண்ணோடு பல இயங்களை இயக்கிப் பாடும் இசைப்பாடல்களென நன்கு அறியலாம். பரிபாடலுக்குப் பண் கூறப்பட்டிருத்தலும், தொல்காப்பியச் செய்யுளியலுரையில் உதாரணமாகக் காட்டப்பட்ட தேவ-பாணிச் செய்யுட்கள் பண்ணோடு கடவுளை வழுத்தும் பாடல் களாகக் காணப்படுதலும், மறைகளெனக் கிளக்கப்பட்ட தமிழ்ப் பாடல்கள் தேவ பாணிச் செய்யுட்கள் போன்றன வாகலாம் என உய்த்தறிய வைக்கின்றன. சிவ பெருமான், முருகக் கடவுள், திருமால், பலதேவன் முதலிய நாற்பெருந் தெய்வங்கள் மேல் இப் பாடல்கள் பாடப்பட்டமையின் அவை நான்மறை எனப் பட்டிருத்தலுங் கூடும். ஆறங் கங்கள் எனப்படுவன அப் பாடல்களைத் தாளம் இராகங் களுக்கேற்பப் பாடும் முறைகளாகவிருக்கலாம்.

ஆகமங்களில் திராவிட வேதம் பாடும்படி சொல்லப்படு கின்றது. ஆகமங்களில் இராகங்களைக் குறிக்க வழங்கிய பெயர்கள் தமிழில்தான் இருக்கின்றன.[1] தேவார திரு வாசகங்களே திராவிட வேதங்களென வழங்கினும் அவற்றுக்கு முன்னும் திராவிட வேதங்களுண்டென்பதற்குப் பண்களே சான்று.[1] பல்லவர் காலந்தொட்டே தமிழர் சமயத்தில் வட நாட்டு ஆதிக்கம் ஏற்பட்டது.

## தமிழ் மதம்

ஆரியரது வருகைக்கு முன் தொடக்கம் தமிழர், சிவ மதமும், சைவசித்தாந்தக் கொள்கையு முடையவர்களா-யிருந்தனர். "இந்தியாவில் உள்ள மதங்கள் எல்லாவற்-றுள்ளும் சைவ சித்தாந்த ஞானமே மிக மேலானது. இது சிறப்பாகத் தென்னிந்தியாவுக்கு அல்லது தமிழருக்குச் சொந்தமானது. தென்னிந்திய மக்களின் பெருமையை அறிய விரும்பும் ஒவ்வொருவரும் அவர்களிள் ஞானத்தைப் பயில வேண்டும். சைவசமயம், ஆரியருக்கு முற்பட்ட தமிழர்களுடைய சமயம். இஃது ஒவ்வொரு தமிழனின் உள் திலும் பதிந்திருக்கிறது. கடவுள், உலகம், உயிர், வினை முதலியவற்றின் தத்துவத்தை விளக்கும் இந் நூல்கள் இது வரை ஆங்கில மொழியில் வெளிவரவில்லை. அந் நூல்கள் தமிழ் மொழியில் மாத்திரம் இருக்கின்றன" என்று டாக்டர் போப்பையர் கூறியிருக்கின்றார்.

[1]Several words of them employed in them in describing the Ragas used in singing of the Dravida Vedas belong to the Tamil language—*Elements of Hindu Icnography, p. 56 —T. A. Gopinatha Rao.*

*"அருமறையைச் சிச்சிலி பண்டருந்தத்தேடு*
*மதுபோ லன்றிது வென்றுமுளதா"*

(திரு. கண்டபு)



நடராச வடிவமாகக் கடவுளை வழிபடும் முறை தென் னிந்தியாவிற்கே உரியது[3]. ஐந்து தொழில்களையும் ஒரு கடவுளே செய்கிறார் என்னும் கொள்கையை இவ் வடிவம் உணர்த்துகின்றது.

[3] The Saiva Siddhanta system is the most elaborate, influential and most intrinsically valuable and undoubtedly valuable of all religions of India. It is peculiarly the South Indian and Tamil religion; and must be studied by every one who hopes to understand the influence of the great South Indian people...Saivaism is the old pre-historical religion of South India, essentially existing from pre-Aryan times, and holds sway over the hearts of Tamil people. But this great attempt to solve the problems of God, and soul, humanity nature, evil suffering, and the unseen world, has never been expounded in English. Its text-books exist in Tamil only.—*Thiruvasagam—Dr. Pope.*

There is no school of thought, and no system of faith or worship that comes to us with anything like the claims of Saiva Siddhanta. The system possesses the merits of great antiquity. In the religious world the Saiva system is the heir to all that is most ancient in South India. It is the religion of Tamil people by the side of which every other form is comparatively foreign and recent origin. As a system of religious thought as an expression of thought of faith and life the Saiva Siddhanta is the best South India possesses—*Christian college magazine, Volume XX, 9 Rev. Gowdie.*

The worship of Siva as Nataraja for example, is a special cult peculiar to South India. The innumerable shrines and images connected with its worship which as still existing there prove the pre-eminence and popularity of this form of Siva in the south."—*South Indian Bronzes, p. 47-6.—G. O. Gangoly.*

"தோற்றந் துடியதனிற் றேயுந்திதியமைப்பிற்
சாற்றிடு மங்கியிலே சங்காரம்—ஊற்றமாய்
ஊன்று மலர்ப்பதத்தே உற்ற துரோதமுத்தி
நான்ற மலர்ப்பதத்தே நாடு"[1]

---

[1]One of the statues of Siva found in the Mohenjodaro sites is described by Sir John Marshall as the proto type of a youthful dancing Siva. The twisted position of the torso and the lifted position of the left leg, and fact that arrangements were made to make the head and hands moveable, all these point to the above conclusion. This seems to have been the original representation of Natarajah.

—*The religions of India, p. 46—K. P. Karmarkar.*

[1]வடமொழியிலிப்போது காணப்படுகின்ற ஆகமங்கள் தமிழ் ஆகமங்களினின்றும் மொழிபெயர்க்கப்பட்டவை யென்றும் தமிழிலிருந்த பூர்வ ஆகமங்கள் மறைந்து விட்டனவென்றும் அறிஞர் கூறுவர். "வடமொழிக் காமிகாகமந் தந்திராவதாரப் படலத்தில் இருபத்தெட்டாக மங்களின் பாடல் தொகைகள் கூறப் பட்டுள்ளன. அத்தொகை ஒன்றும் வடமொழி ஆகமங்களின் பாக்கணக்கோடு பொருந்தாமையால் அத்தொகை தமிழ் ஆகமங் களின் பாத்தொகை யென்றும் அவற்றினின்று வடமொழியில் மொழிபெயர்க்கப்பட்ட இப்போதுள்ள வடமொழி ஆகமங்கள் சுருங்கியவையாதலால் முற்றும் எண் வேற்றுமை யுடைய தென்றும் கருதத்தக்க தாகின்றது. காமிகத்திலுள்ளதாகக் காமி காமத்திற் கூறப்பட்ட பாத்தொகை பரார்த்தம் (ஆயிரம் கோடி கோடா கோடி). இப்போது வடமொழி ஆக மத்துள்ளது: பூர்வ காமிகம் படலம் 75 க்கு பா—5166; உத்தரகாமிகம் படலம் 98 க்கு பா—6477; ஆக. 11643. சுப்பிரபேதாகமத் துக்கு கூறப்பட்ட பாத்தொகை மூன்று கோடி; இப்போதுள்ள ஆகமத்திலுள்ள படலம் 74 க்கு 4665½. இப்படியே எல்லா ஆக மங்களிலும் வேற்றுமை யுண்மையால் காமிகம் தந்திராவ தாரப் படலத்திற் கூறப்பட்டவை வடமொழியாக மங்களன் றென்பது தெளிவு—சிவஞானபோத வினு விடை - வி - சிவஞான யோகிகள்.

# 4. மொழி

மனிதன் ஆதியில் சைகைகளினால் தனது எண்ணங் களைப் பிறருக்கு உணர்த்தினன்; அடுத்த படியில் சைகை களோடு சில ஒலிக் குறிகளையுங் கலந்து பேசலானன். இது ஊமரும், செவிடரும் வழங்கும் மொழி போன்றது. ஒரு வன் வீரம், கோபம், சோகம், களிப்பு ஆதியவும் பிறவுமாகிய உணர்ச்சிகளை எய்தும்போது அவையிற்றுக்கேற்ற அவி நயங்களோடு ஒலிக்குறிகள் சிலவற்றை எழுப்புதலையும் காண்கின்றோம். ஆதியில் மனிதன் பேசிய அவிநய மொழியி லிருந்தே கூத்து அல்லது நாடகம் தோன்றிற்று. உணர்ச்சி களுக்கேற்பப் பிறக்கும் ஓசைகளை விருத்தி செய்தலினாலே பாட்டும், இசையும் தோன்றின. பின் ஒரு பாட்டைப் பாடி அதன் பொருளை உணர்ச்சி தோன்ற நடித்துக் காட்டுத லாகிய கூத்து தோன்றுவதாயிற்று. மனிதன் முற்பருவத்து வழங்கிய மொழியே ஆடலும் பாடலுமாகும். இவை முறையே நாடகத் தமிழ், இசைத்தமிழ் என்னும் பெயர் களைப் பெற்றன. இன்றும் ஆலயங்களில் நிகழும் கிரியை கள் பல நாடகத் தமிழைத் தழுவியவை.

மனிதன் பிறந்தது முதல் வளர வளர எவ்வாறு மொழியைப் பேசக் கற்றுக் கொள்ளுகிறானே அம்முறை யினையே மொழியின் வளர்ச்சிக்கும் ஒப்பிடலாம். முற்கால மனிதன் ஆதியில் வழங்கிய சொற்கள் ஓரசையின. பழந் தமிழ்ச் சொற்கள் பெரும்பாலும் இவ்வகையினவே. மனி தன் வழங்கிய ஆதிச் சொற்களைக் கொண்டு அக்கால நாகரிகத்தை அறிந்து கொள்ளலாம். மனிதன் பேசுவதில் முதிர்ச்சி அடைந்த பின்னரே எழுத்தெழுதப் பயின்றான்.

## எழுத்து

முற்கால மனிதன் தனது எண்ணங்களை ஓவிய வாயிலாக விளக்கினன். மனிதனைக் குறிக்க மனிதனையும்,

காலைக் குறிக்கக் காலையும், கையைக் குறிக்கக் கையையும், பிறபொருள்களைக் குறிக்க அவ்வப் பொருள்களையும் எழுதிக் காட்டுவதே ஓவிய எழுத்துக்களை வரையும் முறையாக விருந்தது. இவ்வெழுத்துக்கள் எண்ணங்களை உணர்த்தப் பயன்பட்டனவேயன்றி, ஒலி முறையாகப்பேசும் மொழிக்கு நேர் வரிவடிவான எழுத்துக்களாகப் பயன்படவில்லை. ஆகவே, அவன் பேச்சில் வழங்கும் சொற்களின் உச்சரிப்புத் தோன்றும் முறையில் எழுத்துக்களை ஆக்கலாயினன். ஓவியங்களை வரைந்து அவை உணர்த்தும் பொருட் பெயர்களின் முதல் ஒலிகளைச் சேர்த்து உச்சரிக்கப் பேச்சு வழக்கிலுள்ள சொற்கள் பிறப்பதே அம்முறையாகும். அடுத்த படியில் ஒவ்வொரு சொல்லைக் குறிக்கவும் ஒவ்வோர் குறியீடு அமைக்கப்பட்டது. இம்முறையைத் தழுவியது சீனர்களுடைய மொழி. ஹரப்பா, மொகஞ்சதரோ முதலிய விடங்களில் வழங்கிய எழுத்துக்களும் இவ்வகையினவே. இஃது எழுத்து மூன்றுவதாக அடைந்த நிலையாகும். மொழியிடத்து வழங்கும் எல்லாச் சொற்களையும் உச்சரித்துப் பார்த்து அவையிற்றில் காணப்படும் ஒலிகள் எல்லாவற்றையும் தொகுத்து இத்தனை என்று கணக்குச் செய்து, ஒவ்வொரு தனி ஒலிக்கும் ஒவ்வொரு எழுத்தாகிய குறியீடு அமைத்து, எழுத்துக்கூட்டிச் சொற்களை உச்சரிக்கும் முறையே நாலாவதாக எழுத்து அடைந்த திருத்தமாகும். அவ்வாறு அமைக்கப் பட்ட எழுத்துக்கள் இருபத்தொன்பது. அவற்றுள் உயிர் பத்து* மெய் பதினெட்டு ஆய்தம் ஒன்று. ஐயும் ஔவும் கூட்டெழுத்துக்கள்.

*"பெயரெழுத்து முடிவெழுத்துத் தன்மை*
*எழுத்தென வெழுத்தின் பெயரியம்பினரே"*

என்பது திவாகரச் சூத்திரம். திவாகரம் நால்வகை எழுத்துக்களைப் பற்றிக் கூறுகின்றதாயினும், அவற்றின்

* *"குன்றுக்குறிலைந்தும் தொடர் நெடிலைந்தும்"* (சிலப்பதிகார உரை மேற் கோள்).



தன்மைகளைப்பற்றி விளக்கவில்லை. அவ்வெழுத்துக்களைப் பற்றிய விளக்கம் அக்காலத்தில் மறக்கப்பட்டது போலும்.

*"வடிவு பெயர் தன்மையுண் முடிவு நான்கா*
*நடைபெறு நாவலர் நாடிய வெழுத்தே"*
*"உருவே யுணர்வே யொலியே தன்மை*
*என வீரெழுத்து மீரிரு பகுதிய"*

என யாப்பருங்கல விருத்தி யுடையார் இவ்விரண்டு சூத்திரங்களை உதாரணங்களாகக் காட்டியுள்ளார்.

இவ்வாறு ஒவ்வொரு ஒலிக்கும் ஒவ்வொரு குறியாக எழுதும் எழுத்து முறை தொடங்கிப் பல இலக்கியங்களும், இலக்கணங்களும் எழுதப்படலாயின. தமிழ் எழுத்துக்கள் வட்ட வடிவமாய் எழுதப்பட்டமையின் 'வட்டெழுத்து' என்னும் பெயரைப் பெற்றன. தொல்காப்பியம் வட்டெழுத்தில் எழுதப்பட்ட நூலே. மிக முற்காலத்தில் உயிர் மெய்யொலிகளை எழுதுவதற்கு ஒரு மெய்யும் ஒரு உயிருமாக இரண்டு எழுத்துக்கள் எழுதப்பட்டன. பழைய சமணக் குகைச் சாசனர்கள் இவ்வாறே எழுதப்பட்டிருக்கின்றன என நீ. க. சாத்திரியார் கூறுவர். இவ்விடர்ப்பாட்டைத் தவிர்ப்பதற்கே உயிர்மெய்க் குறியீடுகள் வந்தன.

ஆரியர், இந்தியாவை அடைந்தபோது எழுத்தெழுதும் முறையை அறியாதிருந்தார்கள்[1] என்பது வரலாற்றுசிரியர்கள் எல்லாராலும் ஒரு தலையாக ஒப்புக்கொள்ளப்

[1]It remained for Professor Langdon to prove that the Brahmi characters derive from Indus signs, the symbols used on their seals by the pre-Aryan of the Indus valley. This as he points out, the Aryans (Sanskritists) gave values derived from their own language to these characters. In other words they knew their ideographic meaning, translated them into Sanskrit and derived the syllabie values from the Sanskrit words.—*Hindu India—R. K. Mukerji.*

படுகின்றது. எழுத்தெழுதும் முறையை அறியாமையினுல் ஆரியர் தம் முன்னேர் செய்த பாடல்களாகிய வேதங்களை நெட்டுருச் செய்து பாதுகாத்து வந்தனர். தமிழருக்கும், ஆரியருக்கும் உறவு ஏற்பட்ட காலத்து, ஆரிய மக்கள் தமிழரின் உதவியைப் பெற்று வட மொழிக்குரிய ஒலிகளுக் குத் தமிழ் நெடுங் கணக்குப் போல வரிவடிவாகிய எழுத் துக்களை ஆக்கிக்கொண்டார்கள். இதில் சிறிதேனும் சந் தேகமும் ஏற்பட இடமில்லை. இதற்கு மாருக, ஆரியரைப் பின் பற்றியே தமிழர் தமிழ் நெடுங் கணக்கை ஆக்கிக் கொண் டார்கள் என ஒரு சிலர் கூறுவது முற்றும் வரலாற்றுக்கு முரணுனது.

தமிழ் மக்கள் ஆரிய மொழியின் பொருட்டுப் பெரிதும் உழைத்திருக்கின்ருர்களென்பதற்கு, [1]சாணக்கியர், சாய ணர், காத்தியாயனர், வற்சாயயனர் சங்கரர், மத்வர், ராமா னுசர் முதலிய தென்னுட்டாரே திருட்டாந்தம். ஆரியர் நூல் கள் எதுவும் தென்னுட்டாரின் உதவியின்றி முற்றுப்பெற வில்லைஎன்றே கூறலாம். சமக்கிருதம் என்பதற்கு நன்ருகச் செய்யப்பட்டது என்பது பொருள். அதற்கு ஆசிரியர் சிவனுகிய தமிழர் கடவுள் என்பது புராணீகர் மதம்.

பல கூட்டங்களாகப் பிரிந்து வெவ்வேறு நாடுகளில் தங்கிய ஆரிய சாதியாரிடையே காணப்படாது இந்திய ஆரியரிடையே மட்டும் காணப்படும் புதிய முறைகள், அவர்கள் பழக நேர்ந்த பூர்வ குடிகளால் ஏற்பட்டன என்று கூறுவதில் யாதும் புதுமை இல்லை. இதனைக் கொண்டு தமிழர் ஆரியருக்கு மொழி சம்பந்தமாகக் கடமைப் பட வில்லை எனத் துணியலாம்.

[1]Chanakya the Damila, who is described in the Mahavamso as a Malabari. His name appears in the two inscriptions of the 4th century B.C., in the Kancheri caves to which he retired in old age—*Short Studies in the science of comparative religions—Forlong (1897).*

## தமிழ் நூல்கள்

இற்றைக்கு ஐயாயிரம் அல்லது ஆருயிரம் ஆண்டு களுக்கு முன் தமிழர் எழுத்தெழுதும் முறையை அறிந் திருந்தமையின், தமிழில் நூல்கள் பல இருந்தன என்று உய்த்தறிய இடமுண்டு. மொகஞ்சதரோவிற் காணப் பட்ட முத்திரைகளிற் பொறிக்கப்பட்டுள்ள குறள் வெண் பாக்கள் அரசரிடையே நிகழ்ந்த போர்களையும், கடவுள் வழிபாட்டையும், பிறவற்றையும் கூறுகின்றன[1]. அம் முத்திரைகள் காணப்பட்ட இடம் அக்காலத்திய நூல் நிலை யங்களுள் ஒன்ருக விருத்தலும் கூடும்.

சில காலத்தில் ஒடிந்து போகக்கூடிய பனை ஓலையில் எழுதப்பட்டனவும், ஒன்ரே சிலவோ பிரதிகளை உடையனவு மாகிய பழைய தமிழ் நூல்கள் திரும்பப் படிசெய்து போற்று வார் இலராயின் மடிந்து போதல் இயல்பே.

சங்க நூல்களென இப்போது அச்சிடப்பெற்றவற்றுள் ஐந்நூற்றுக்கு மேற்பட்ட புலவர்களின் பெயர்கள் காணப் படுகின்றன. இறையனுர் களவியலுரையின்படி தமிழ்ச் சங்கம் நடைபெற்ற காலத்துப் பாடிய புலவர்கள் 8598 பேர். இப்போது நமக்குக் கிடைத்துள்ள நூல்களுள் தொல்காப்பியம் மிகப் பழமையுடையதெனக் கருதப் படுகின்றது. இது கி. மு. 350-க்குப் பிற்பட்டதன்று என்று சரித்திரக்காரர் கூறுகின்றனர். அதற்கு அவர்கள் கொள்ளும் நியாயம் வருமாறு:

தொல்காப்பியம் எழுத்து 24, 27, 28, ஆம் சூத்திரங் களால் நடுவே ல்ய, ள்ய, ஞ்ய, ங்ய, ம்ய, வ்ய, ம்வ, என வருஞ் சொற்கள் வழங்கினவென்று அறியலாம்.[2] திருக்

[1] *ஹெரஸ் பாதிரியார் இவ்வாறு கூறியுள்ளார்.*

[2] *இச்சூத்திரங்களுக்கு உரை எழுதிய நச்சினுர்க்கினியர் "இங்ஙனம் ஆசிரியர் சூத்திரஞ் செய்தலின் அக்காலத்து ஒரு மொழியாக வழங்கிய சொற்கள் உளவென்றும் அவை இக் காலத்து இறந்தன" எனக் கூறிப் போந்தனர்.*

குறள் கி. மு. முதல் நூற்ருண்டு வரையிற் செய்யப்பட்டது. திருக்குறளிலாவது சங்கச் செய்யுட்களிலாவது இவ்வகைச் சொல் ஒன்றேனும் காணப்படவில்லே. ஆகவே, தொல் காப்பியம் கி. மு. மூன்ரும் அல்லது நாலாம் நூற்ருண்டில் செய்யப்பட்டதென்பது பிழையாகாது.

பாணினிக்குப் பின் அவர் நூலே சிறந்த இலக்கண மாகக் கொள்ளப்பட்டது. பாணினி, தனக்குமுன் விளங்கிய ஆசிரியர்களாகக் கூறும் அறுபத்து நால்வருள் இந்திரன் ஒருவனுகக் காணப்படுகின்ருன். இவனுற் செய்யப்பட்ட நூல் ஐந்திரம். தொல்காப்பியச் சிறப்புப் பாயிரத்தில் 'ஐந்திரம் நிறைந்த தொல்காப்பியன்' எனச் சொல்லப்படு கின்றது. தொல்காப்பியர் பாணினிக்குப் பின்னிருந்தவரா யின் பாணினீயத்தையே பயின்றிருப்பார். அவ்வாறில்லாமை யின் தொல்காப்பியர் பாணினிக்கு முந்தியவராவர். பாணினி யின் காலம் கி. மு. நாலாம் நூற்ருண்டு.

> "சகரக் கிளவியும் அவற்ரோரற்றே
> அ ஐ ஔவெனு மூன்றலங் கடையே
> "ஆவோடல்லது யகர முதலாகாது"

என்னும் தொல்காப்பியச் சூத்திரங்களுக்கு மாருகச், சமம், சதுக்கம், சந்தி, சலம், சங்கு, சந்தம், சகடம், யூபம் என்னுஞ் சொற்கள் சங்க நூல்களில் அடிக்கடி காணப் படுகின்றன. ஆகவே தொல்காப்பியம் கடைச் சங்கம் ஒடுங்குவதற்குச் சில நூற்ருண்டுகளின் முன் செய்யப் பட்ட நூலெனக் கூறலாம்.

பண்டைக்காலப் புலவர்கள் நூல்களைச் செய்யுள் நடை யில் இயற்றினர். அவர்கள் வழங்கிய செய்யுள்கள் வெண்பா, அகவல், கலிப்பா, வஞ்சிப்பா என்னும் நால் வகையின. "பா என்பது சேட்புலத்திலிருந்த காலத்தும், ஒருவன் எழுத்துஞ் சொல்லுந் தெரியாமற் பாடமோதுங் கால், அவன் சொல்லுகின்ற செய்யுளை விகற்பித்து இன்ன செய்யுளென்று உணர்த்துதற் கேதுவாகிப் பரந்து பட்டுச் சொல்வதோர் ஓசை*"



ஒருவற்கொருவன் இயல்புவகையான் ஒரு பொருண் மையைக் கட்டுரைக்குங்கால் எழும் செப்பலோசையை யுடையது வெண்பா. ஒருவன் கேட்க அதற்குத் தாங் கருதியவாறெல்லாம் வரையா; சொல்வதாக அகவிக் கூறும் ஓசை ஆசிரியத் துக்குரியது. கலிப்பா துள்ள லோசை பெற்று வரும். துள்ளலாவது ஒரு நடையின்றி இடையிடையுயர்ந்து வருதல்; கன்று துள்ளிற்றென்ருற் போலக் கொள்க. கலிப்பா என்பதில் பரிபாடல் தேவபாணி முதலிய செய்யுட்கள் அடங்கும். இவை பண்ணுேடு பாடப் படும் இசைப் பாடல்கள். தேவபாணி கடவுளையே துதியாகக் கொண்டு பாடும் பாட்டு. மறைகள் என்பன தேவபாணிப் பாடல்களாலாக்கப்பட்டன வாகலாம். வஞ்சிப்பா தூங்கிய ஓசை யுடையது. ஓசை பற்றியே பாடல்கள் வெவ்வேறு வகை ஆயின என்பது இதனுல் விளங்குகின்றது. ஓசை சத்துவத்துக் கேற்பத்தோன்றும் என முன் ஓரிடத்தில் விளக்கப்பட்டது.

## பாடல்களின் தொடக்கம்

குறிஞ்சி நிலத்தே மகளிரும் மைந்தரும் தனியிடத்தில் எதிர்ப்பட்டு ஒருவரை ஒருவர் காதலித்து மறைவில் மணந்து கொண்டனர். பழந்தமிழ்ப் புலவோர் இக்களவொழுக்கத் திணைப் பொருளாகக் கொண்டு பாடினர். பாடுமிடத்து மலை நாட்டவர் நடை உடை பாவனைகளையும், பிறவற்றை யும் எடுத்துத் கூறினர். முல்லை நிலத்தலைவன் பிரிந்து

* பேராசியர் உரை

திரும்பி வருந்துணையும், தலைவி ஆற்றியிருப்பதைப் பொருளாகக்கொண்டு, முல்லை நிலமக்களின் பழக்க வழக்கங்களையும் கருப்பொருள்களையும், பிரிந்த தலைவன் திரும்பி வரும்போது வழியிடத்துக்காணும் காட்சிகளையும் அவர்கள் பாடினர். தலைவன் தலைவியை மணந்து, கிழத்தியோடு இல்லில் உறையுமிடத்து, அவன் பரத்தை வயிற் பிரிதலும், அது காரணமாகத் தலைவி பிணங்கியிருத்தலும், பின் அவ்வூடல் தணிந்து இருவரும் இன்புற்றிருத்தலுமாகிய ஊடலை உரிப் பொருளாகக் கொண்டு, மருத நிலத்தின் இயற்கை வளங்களையும், மக்கள் வாழ்க்கை முறையையும் புலவர்கள் பாடினர். தலைவியோடு இல்லறம் நடத்தும் தலைவன், தூது, பகை, பொருள் தொகுத்தல் என்னும் ஏதும் ஒரு காரணம் பற்றிப் பிரிந்து, பாலை நிலத்துக் கூடாகச் செல்வதாகிய பிரிவை உரிப்பொருளாகக் கொண்டு பாலை நிலத்தின் தன்மையையும், கடற்கரை நிலத்துக் களவொழுக்கத்தின் பாற் பட்ட தலைவி தலைவனை நினைத்து கடலையும் கடற்கரையையும் நோக்கி இரங்கிக் கூறுவதாகிய இரங்குதல் என்னும் உரிப்பொருளைப் பொருளாகக் கொண்டு நெய்தல் நிலத்து இயற்கையையும் அவர்கள் பாடலாயினர்.

குறிஞ்சி நில ஒதுக்குகளிலிருந்த எயினர் முல்லை நிலத்தே சென்று, ஆயருடைய மந்தைகளை அடித்துச் சென்றனர். நிரைகவரச் செல்வோர் கொண்டையில் வெட்சிப் பூச்சூடினர். ஆகவே நிரை கவர்தலாகிய போரை வெட்சி என்னும் திணையாகக் கொண்டு புலவர்கள் பாடல்கள் புனைந்தனர். காவற்காடு சூழ்ந்த பகை அரசனது கோட்டையைப் பிடிக்கப் படை எடுத்துச் செல்வது வஞ்சி எனப்பட்டது. வேந்தனது கோட்டையை முற்றுகை இடுதல் உழிஞை எனப்பட்டது. இரு படைகளும் வெளியிடத்திற் கைகலந்து போர்செய்வது தும்பை எனப்பட்டது. போர் வென்று பகைவனுடைய நாட்டைப் பாழாக்கி வாகைப்



பூச்சூடுதல் வாகை எனப்பட்டது. இவ்வாறு வீரர் அணிந்து கொள்ளும் பூச்சிறப்புக்களால் அவை அவ்வப் பெயர்களைப் பெற்றன.

இப் போரொழுக்கங்களைப் பொருளாகக் கொண்டு புலவர்கள், அரசர்களின் புகழை விரித்துப் பல பாடல்களைப் புனைந்தனர்.

இவ்வாறு தோன்றிய அகத்திணை புறத்திணைப் பாடல்களே ஆதியிற்றோன்றிய தமிழ்ப் பாடல்களாகும். தொல்காப்பியப் பொருள் அதிகாரம் அகத்திணை புறத்திணைப் பாடல்களைப் பாடுதற்கு இலக்கணமாக அமைந்துள்ளது. தொல்காப்பியத்தில் அகத்திணை புறத்திணைக்குரிய துறைகள் நூற்றுக் கணக்கிற் காணப்படுகின்றன. அவையிற்றை எல்லாம் தொகுத்து முறைப்படுத்தப்பட்டனவே அகப்பொருட் கோவையும், புறப்பொருள் வெண்பா மாலையுமாகும். வெண்பாமாலையில் தொல்காப்பியத்திற் சொல்லப்படாத சில வேறுபாடுகளுண்டு.

இவ் வகைப் பாடல்களை அன்றி, நூல், உரை, பாட்டு, பிசி, அங்கதம், முதுமொழி, மறை என்னும் ஏழு வகை நூல்களும் இருந்தனவென்று தொல்காப்பியத்தால் அறிகின்றோம். அகப்பொருள் புறப்பொருள்களையன்றிப் பல வேறு பொருள்களைப் பற்றிக் கூறும் நூல்களே அவை ஆகலாம்.

## தமிழ்ச் சங்கம்

தமிழ் நாட்டைச் சேர, சோழ, பாண்டியர் என்னும் மூவேந்தர் ஆட்சி புரிந்தனர். அவருட் பாண்டியர் தமது தலைநகராகிய மதுரையில் தமிழ்க்கழகமொன்று நிறுவினர்[1].

[1]One is reminded of the Babylonian academy of the third century—*the metibta* (meeting session) which convoked a general assembly twice a year, when a treatise previously

தமிழ் நாட்டின் பல பாகங்களில் வாழ்ந்த புலவர்கள் அதன் உறுப்பினர்களாக விளங்கினர். சங்கப் புலவர்களுக்கு அவையிலிருப்பதற்கு ஆசனங்கள் அரசனால் அளிக்கப் பட்டன. அவை கனமாப்பலகை எனப்பட்டன. இவ் வரலாறே பிற்காலத்தில் சங்கப் பலகைக் கதையாக மாறிற்று.

சங்கத்தை ஆரம்பித்த காலத்துப் பாண்டிய அரசன் புலவருடையவும், தனதும் வழிபடு கடவுளர்களாகிய முருகக் கடவுள், சிவபெருமான் ஆகியோரின் சிலைகளைச் சங்க மண்டபத்தில் நிறுவி, அக்கடவுளரே கழகத்துத் தலைவ ரெனக் கூறினான். இன்றும் பிள்ளையார் பிடித்து வைத்து ஒவ்வொரு நற்கருமத்தையும் தொடங்குவது தமிழர்களின் வழக்காறுகவிருக்கின்றது. இவ்வுபசார வழக்கே திரிபுர மெரித்த விரிசடைக் கடவுள், குன்றமெறிந்த குமரவேள் முதலிய தெய்வங்கள் தலைச்சங்க மிருந்து நூலாராய்ந்தன என்று பிற்காலத்தவரால் கூறப்படலாயிற்று.

*உலக மொருநிறையாத் தானோர் நிறையாப்*
*புலவர் புலக்கோலாற் றூக்க—வுலகனைத்தும்*
*தான்வாட வாடாத தன்மைத்தே தென்னவ*
*னன் மாடக் கூடன்" (பரி)*
*தொல்லாணை நல்லா சிரியர்*
*புணர் கூட்டுண்ட புகழ்சால் சிறப்பின்*
*நிலந்தரு திருவி னெடியோன் (மதுரைக்காஞ்சி)*
*புணர் கூட்டு—புலவர் கூட்டம்*

என்னும் எடுத்துக் காட்டுகள் மதுரையில் தமிழ்க் கழகம் இருந்ததென்பதை வலியுறுத்தும். "தமிழ் வையை," "தமிழ் மதுரை," "தமிழ்க் கூடல்" எனப் பண்டை நூல் களிற் கிளக்கப் படுதலே மதுரையிற்றமிழ் வளர்க்கப்பட்ட

announced was brought and discussed. The Tamil Sangam however met not regularly but only whenever summoned —*Indian Culture through ages, p. 255—S. V. Venkateswara.*



தென்பதற்குப் போதிய சான்றாகும். கி. பி. நாலாம் நூற்றாண்டு வரையில் விளங்கிய மாணிக்கவாசக சுவாமிகள்,

*"வானுயர் மதிற் கூடலினய்ந்த ஒண்டீந் தமிழின்*
*றுறைவாய்ப்புக் கனையோ."*

எனக் கூறியிருத்தல் கவனிக்கத்தக்கது.[1]

இச் சங்க வரலாற்றினை ஒருவாறு திரட்டி இறையனார் அகப்பொருள் உரைகாரர் கூறியிருக்கின்றார். இறையனா ரகப்பொருள் உரை கி. பி. ஆறு அல்லது ஏழாம் நூற் றாண்டில் எழுதப்பட்டது. இவ்வுரையிற் காணப்படும் சில விபரங்கள் ஐயத்துக்கிடமாயிருப்பினும் சங்க வரலாறு பொய்யாகாது. பழைய காலத்தவர் காலக்கணக்குகளைக் கவனியாது வரலாறுகளை எழுதியிருத்தல் உலக வரலாற் றைக் கற்போர்க்கு நன்கு விளங்கும். அக்காலத்து நூல் களையும், பிற ஆதாரங்களையும் ஆராய்ந்து விவிலிய வேதத் தின் பழைய ஏற்பாட்டை வரைந்த மொசே என்பார், சிலர், ஆயிரத்துக்கு மேற்பட்ட ஆண்டுகள் உயிர் வாழ்ந்

[1] *பாண்டியர்பாடு தமிழ் வளர்த்த கூடலின் வடாஅது* (ஆசியமாலை)

*பாண்டிய நின்னாட்டுடைத்து நல்ல தமிழ்* (முரு. நச். உரை)
*நிலநாவிற் றிரிதரூஉ நீண்மாடக் கூடலார்*
*புலநாவிற் பிறந்த சொற் புதிதுண்ணும் போதன்றே* (கலி 35)

*சந்தனப் பொதியச் செந்தமிழ் முனிவனும்*
*சௌந்தர பாண்டிய னெனுந் தமிழ் நாடனும்*
*சங்கப் புலவருந் தழைத்தினி திருக்கும்*
*மங்கலப் பாண்டிவள நாடென்ப* (நன்-வி)
*தமிழ்நிலை பெற்ற தாங்கரு மரபின்*
*மகிழ்நனை மறுகின் மதுரை* (சி. பாண்)
*வீயாத் தமிழுடையான் பல்*
*வேற்கடற்றானைப் பாண்டியன்* (யா. வி. மேற்)

தனர் என எழுதியிருத்தல் கவனிக்கத்தக்கது. எகிப்திய சரித்திரத்தில் ஓர் அரசன் 30,000 ஆண்டு உயிர் வாழ்ந்தான் என்று சொல்லப்படுகிறது. தசரதன், இராவணன், சூரன் ஆதியோர் வரலாறுகளாலும் பண்டை ஆசிரியர்களின் மனப்பான்மை விளங்கும். சங்கம் என்பது கற்பனைக் கதை எனக் கூறுவாரும் ஒரு சிலர் உளர். இங்ஙனம் கூறுவோர் வடமொழிப் பற்றுடைய ஒரு சிலராவர். அவர்கள் தமிழுக்குரிய சிறப்பெல்லாம் வடமொழியால் ஏற்பட்டதெனக் கருதுவோர். அவ்வகையினர் வடமொழிக்குரிய சிறப்பை வரலாற்றுக்கு மாறுபட எவ்வாறு கூறினும் ஆட்சேபமின்றி ஏற்றுக்கொள்வர்; தமிழுக்குரிய பழமையைத் தக்க நியாயங்களோடு காட்டினும் மறுப்பர். இவ்வகைப் பண்புகளைப் பி. தி. சீநிவாச ஐயங்கார் ஆங்கிலத்தில் எழுதிய தமிழர் வரலாறு என்னும் நூலில் நிரம்பக் காணலாம். பிழையான அக் கொள்கைகள் சிலவற்றைத் தழுவிச் சில நூலாசிரியர்கள் எழுதி வருகின்றனர். சின்னமண்ணூர்ச் சாசனத்தில் தமிழ்ச் சங்கம் இருந்ததற்குப் போதிய ஆதாரங் காணப்படுகின்றதெனத் தமிழ் ஆராய்ச்சி என்னும் நூலாசிரியர் கூறுவர்.[1]

## சங்க நூல்கள்

சங்க காலத்துத் தமிழ் நாட்டின் பல பாகங்களில் விளங்கிய புலவர்கள் புறப்பொருள் அகப்பொருட் பாடல்கள் பலவற்றை இயற்றினர். இப்பாடல்களெல்லாம் மதுரையில் பாதுகாத்து வைக்கப்பட்டன.[2] சங்கத்தின் இறுதிக்

[1] One of the most trustworthy reference of the founding of a Tamil academy prior to the eighth century will be found in the copper plates discoverd at Chinnamannur in the Madura District—*Tamil studies—P. 232.*

[2] *தொகை நூல்களிற் காணப்படும் பாடல்கள், தமிழ் நாட்டின் வெவ்வேறு பகுதிகளில் வெவ்வேறு காலங்களில் வாழ்ந்த புலவர்கள் பலரால் பாடப்பட்டவை. இவை மதுரைத் தமிழ்ச்*



காலத்தில் இவை, செய்யுள், பொருள், அளவு முதலிய தன்மைகளை நோக்கிப் பல திரட்டுகளாகத் திரட்டப்பட்டன. அங்ஙனம் திரட்டப்பட்ட நூல்கள் பத்துப்பாட்டு, எட்டுத்தொகை என்னும் பெயர்களால் வழங்கும்.

## பத்துப் பாட்டு

| | பாட்டு. | பாடினோர். | பாடப்பட்டோர். |
|---|---|---|---|
| 1. | திருமுருகாற்றுப்படை. | நக்கீரர். | முருகன். |
| 2. | பொருநராற்றுப்படை. | முடத்தாமக்கண்ணியார். | சோழன் கரிகாலன். |
| 3. | சிறு பாணாற்றுப் படை. | நத்தத்தனார். | ஏறுமாநாட்டு நல்லியக் கோடன். |
| 4. | பெரும் பாணாற்றுப் படை. | உருத்திரங் கண்ணனார். | தொண்டைமான் இளந்திரையன். |
| 5. | முல்லைப் பாட்டு. | நப்பூதனார். | நெடுஞ்செழியன். |
| 6. | மதுரைக் காஞ்சி. | மாங்குடி மருதன். | ,, |
| 7. | நெடுநல்வாடை. | நக்கீரர். | ,, |
| 8. | குறிஞ்சிப் பாட்டு. | கபிலர். | ஆரிய அரசன் பிரகத்தனுக்குத் தமிழ் அறிவிக்க. |
| 9. | பட்டினப் பாலை. | உருத்திரங் கண்ணனார். | சோழன் கரிகாலன். |
| 10. | மலைபடுகடாம். | பெருங்கௌசிகனார். | நன்னன் சேய் நன்னன். |

*தில் படி எடுத்து வைக்கப்பட்டிலவாயின் நூல்களாகத் தொகுப்பதற்கு இவை கிடைத்திருக்கமாட்டா. தொகை நூல்களே சங்க மிருந்தமைக்குப் போதிய சான்றுகளாகும்.*

## எட்டுத் தொகை

| | தொகை. | புலவர்கள். | தொகுத்தார். | தொகுப்பித்தார். |
|---|---|---|---|---|
| 1. | நற்றிணை. | 175 | தெரியாது. | பன்னாடு தந்த பாண்டியன் மாறன் வழுதி. |
| 2. | குறுந்தொகை. | 205 | ,, | பூரிக்கோ. |
| 3. | ஐங்குறு நூறு. | 5 | கூடலூர் கிழார். | யானைக்கட்சேய் மாந்தரஞ் சேர விரும்பொறை. |
| 4. | பதிற்றுப்பத்து. | 10 | தெரியாது. | தெரியாது. |
| 5. | பரிபாடல். | 13 | ,, | ,, |
| 6. | கலித்தொகை. | 5 | நல்லந்துவனார். | தெரியாது. |
| 7. | அகநானூறு. | 145 | உருத்திரசன்மனார். | உக்கிரப் பெரு வழுதி. |
| 8. | புறநானூறு. | 160 | தெரியாது. | தெரியாது. |

பதினெண் கீழ்க்கணக்கு என வழங்கும் நூல்களும் சங்க நூல்கள் எனப்படினும் அவற்றுட் பெரும்பாலன பிற் காலத்தில் எழுதப்பட்டவை. பதினெண் கீழ்க்கணக்கு நூல்களாவன:

1. நாலடியார்—சைன முனிவர். (நீதி)
2. நான்மணிக் கடிகை—விளம்பி நாகனார் (நீதி) (வைணவர்)
3. இனியவை நாற்பது—பூதஞ் சேந்தனார் (நீதி)
4. இன்னா நாற்பது—கபிலர் (சைவம்) (நீதி)
5. கார் நாற்பது—மதுரைக்கண்ணங்கூத்தனார். (அகம்)
6. களவழி நாற்பது—பொய்கையார் (வைணவம்) (புறம்)
7. ஐந்திணை ஐம்பது—மாறன் பொறையனார். (அகம்)
8. ஐந்திணை எழுபது—மூவாதியார் (அகம்)



9. திணைமொழி ஐம்பது—கண்ணஞ்சேந்தனார் (அகம்)
10. திணைமாலை நூற்றைம்பது—கணி மேதையார். (அகம்)
11. முப்பால் (திருக்குறள்)—திருவள்ளுவர். (நீதி)
12. திரிகடுகம்—நல்லாதனார். (வைணவம்) (நீதி)
13. ஆசாரக்கோவை—பெருவாயின் முள்ளியார். (வைணவம்) (நீதி)
14. பழமொழி—பாண்டிய நாட்டைச் சேர்ந்த முன்துறை என்னும் பதியின் அரசர் (சமணம்) நீதி
15. சிறு பஞ்ச மூலம்—காரியாசான். (சமணம்) (நீதி)
16. இன்னிலை—பொய்கையார். (நீதி)
17. முதுமொழிக்காஞ்சி—மதுரைக் கூடலூர் கிழார். (நீதி)
18. ஏலாதி—கணிமேதாவியார். (சமணம்) (நீதி)

## அகத்தியர்

அகத்தியர் தமிழ் மொழியோடு மிகச் தொடர்பு பெற்ற வராகச் சொல்லப்படுகின்றனர். இவரைப் பற்றிய வரலாறு கள் புராணங்களில் ஆங்காங்கு இயற்கைக்கு மாறுபடக் கூறப்படுகின்றன. ஆகவே அக்கதைகளைக் கொண்டு அகத்தியரின் வரலாற்றை வரையறுத்துக் கூறுதல் இயலாதாகின்றது. மனுவின் பேழை பொதியமலையில் ஓரிடத்திற் றங்கிற் றென்று கருதப் படுகின்றது. மனு கிருதமாலை என்னும் வையைக் கரையிற் றவஞ் செய்து கொண்டிருந்தார் எனச் சொல்லப்படுதலின், அது பொருத்த மாகத் தோன்றுகிறது. இவ்வரலாற்றினை வடமொழியிற் புராண மெழுதியவர்கள் வடநாட்டில் நிகழ்ந்ததாகக் கொண்டு மனுவின் பேழை[1] மேருவின் சிகரமொன்ருகிய இளாவிருதத்திற் றங்கிய தெனக் கூறினர். புராணங்களில்

[1] மேரு உலகுக்கு நடுவில் உள்ளதெனப் படுதலால் அது இமயமலை இருக்கும் இடத்தில் இருந்திருக்க முடியாது. சைன பௌத்த நூல்கள் மேருவை மந்தரம் எனக் கூறுகின்றன.

உண்மை வரலாறுகளோடு பொய்க் கந்தைகளும் கலந்துள்ளன. மேற்கூறியவாறு தென்னாட்டு வரலாறுகள் பல வடநாட்டில் நிகழ்ந்தனவாகப் புராணங்களில் எழுதப்பட்டுள்ளனவென்று ஆராய்ச்சி வல்லுநராகிய பண்டிதர் சவுரிராய பிள்ளை அவர்கள் குறிப்பிட்டிருக்கின்ருர். பொதியிலைத் தேவர்க்கிருப்பிடமெனத் தென்னாட்டார் நம்பினர். ஆகவே, அண்டரும், முனிவரும் ஈண்டிய மலை என்பது பொதியில் ஆதல் தேற்றம். வடக்கே இந்திரன், வருணன் முதலிய தெய்வங்களின் வழிபாடும், தெற்கே சிவ வழிபாடும் இருந்தன வென்பதைச் சரித்திரகாரர் ஏற்றுக் கொள்கின்றர். சிவமத மென்பது தமிழர்களுக்கே உரிய பழைய மதம். "தென்னுடுடைய சிவனே போற்றி". ஆகவே, சிவன் சம்பந்தமாகவுள்ள புராண வரலாறுகள் தென்னாட்டுக் கதைகளே என்பதில் சிறிதும் ஐயப்பாடு இல்லை.

அகத்தியர் வடக்கே இருந்து வந்தாரென்றும், அவர் ஆரிய வகுப்பைச் சேர்ந்தவரென்றும் கொள்ளும் கோட்பாடொன்றுளது. வேங்கடத்துக்கு வடக்கே வாழ்ந்தவர்கள் எல்லோரும் ஆரியர் என்பதற்கு ஆதாரம் இல்லை. அகத்தியர் வடக்கே சென்று காசியில் (வாரண வாசியில்) சிவமதத்தைப் பரப்பியபின் தெற்கே திரும்பினர். இவ்வுண்மையே புராணக் கதைகளுக் கூடாக மங்குளமாகத் தெரிகின்றனது. அகத்தியர் கார் நிறமுடையவராக விருந்தாரென்று வடமொழி நூல்களில் காணப்படுகின்றதென ஆராய்ச்சியாளர் குறிப்பிட்டிருக்கின்றனர்.

அகத்தியர் கி. மு. 750-க்கு முன் விளங்கிய வரெனப் 'பூர்வீக இந்தியா என்னும் நூலுடையார் கூறுவர்.[1] சங்க காலத்திலே அகத்தியருடைய கதை பழங் கதையாக நிலவியது. அவர் ஓர் விண்மீனுக மாறிவிட்டார் என்னும் பொருளில் அகத்தியர் என்னும் பெயர் ஒரு விண்மீனுக்கிடப் பட்டது.*

[1] Ancient India * *பரி பாடல்.*



உலோபா முத்திரையின் கணவனுகிய அகத்தியர் வேதபாடல்களிற் சிலவற்றைச் செய்தவராகக் காணப்படுகின்ருர். தமிழ் முனிவரும் வேதபாடல்களைச் செய்த அகத்தியரும் ஒருவரோ என்பது ஆராய்தற்குரியது. அகத்தியரே தமிழுக்கு ஆதி இலக்கணஞ் செய்தாரென்னும் பழங்கதை உள்ளது[1]. இவர் செய்ததெனப்படும் அகத்தியம் காணப்படவில்லை; ஆங்காங்கு அகத்தியச் சூத்திரங்களென உரையாசிரியர்களாற் சில காட்டப்படுகின்றன.

அகத்தியருக்கு மாணவர் பன்னிருவரென்றும், அவருள் தொல்காப்பியர் முதன்மை யுடையவரென்றும் முதன் முதலாகப் புறப் பொருள் வெண்பாமாலை கூறுகின்றது. தொல்காப்பியர் அதங் கோட்டாசான், பனம்பாரனுர் ஆதியோர் ஒருசாலை மாணவராயின், தொல்காப்பியரைப் போல் மற்றவர்களும் சங்கப் புலவர்களாக விளங்கினுர்களென இறையனுர் களவியலுரை கூருமைக்குக் காரணம் விளங்கவில்லை. அக்காலத்துத் தொல்காப்பியர் முதலாயினேர் அகத்தியரின் மாணவர் என்னும் வரலாறு அறியப்படவில்லைப் போலும். தொல்காப்பியச் சிறப்புப் பாயிரத்தால் அதங்கோட்டாசான், பனம்பாரனுர் ஆதியோர் சிறந்த புலவர் வரிசையில் உள்ளார்கள் எனத் தெரிகின்றது.

## தொல்காப்பியம்

தொல்காப்பியர் செய்ததாதலின் அவர் நூல் தொல்காப்பியமென வழங்குகின்றதெனப் பலர் கருதுகின்றனர். தொல்காப்பியர் நூல் செய்கின்ற காலத்துத் தமிழ் நாட்டெல்லை வடக்கே வேங்கடமலையாகவிருந்தது. இஃது அதன் பாயிரத்தானும், பிற அகச்சான்ருனும் அறியப்படும்.

[1] *அந்தணர்க் காகி அகத்தியன் ருனுரை செய்த மும்மைச்*
*செந்தமிழ்க் காவலன் றென்னம் பொருப்பின்* (களவியற் காரிகை)

*காஞர் மலயத் தருந்தவன் சொன்ன கன்னித்தமிழ்* (யா-காரிகை)

*தமிழெனு மளப்பருஞ் சலதி தந்தவன்* (கம்பன்)

"செந்தமிழ் சேர்ந்த பன்னிரு நிலத்தும்" (தொல்) எனப் பட்ட பன்னிரண்டு நிலங்களும் வேங்கடத்துக்குத் தெற்கேயே உள்ளன.[2]

[2] 'வடவேங்கடந் தென்குமரி-ஆயிடைத்தமிழ் கூறு நல்லுலகத்து, வழக்குஞ் செய்யுளுமாயிரு முதலின்-எழுத்துஞ் சொல்லும் பொருளும் நாடி', என்றமையானும் இதில் தமிழ் கூறு நல்லுலகமென விசேடித்தமையாலும் கிழக்கும் மேற்கும் எல்லை கூறாது தெற்கெல்லை கூறியதனாலும் வேங்கடத்தின் தெற்கும் குமரியின்வடக்கும் குடகடலின் கிழக்குமாகிய நிலம் செந்தமிழ் நிலமென்றுரைப்ப (தெய்வச்சிலையார்-தொல்-உரை)

இந்தியநாடு ஐம்பத்தாறு நாடுகளாகப் பிரிக்கப்பட்டிருந்த தெனவும் அந்நாடுகளுள் பதினெண்மொழிகள் வழங்கினவென்றும் அவற்றுள் தமிழ் ஒன்று எனவும் தமிழ் ஒழிந்த மற்றைய பதினேழு மொழிகளும் திசைச் சொற்களெனப் பிற்காலத்தவர்கள் கொண்டார்களென்பதும் "தேசமைம் பத்தாறிற்றிசைச் சொற் பதினேழும்" எனச்சொக்க நாதர் தமிழ் விடுதூதிற் கூறப்படுவதால் தெரிகிறது.

கொடுந்தமிழ் நிலம் பன்னிரண்டுள வெனவு மத்தமிழே திசைச் சொல்லாமெனவும் பெறப்படலானே, தமிழிருவகை எனவு, மவையிரண்டிற்கும் பொது வெல்லை வேங்கடங் குமரியென்னுஞ் செந்தமிழெல்லை வேறு கூறலு மமையுமெனி, லாசிரியர் பன்னிரு நிலமென்ற தன்றிப் பன்னிரு கொடுந்தமிழ் நிலமெனக் கூறாமையானும், 'செந்தமிழ்சேர்ந்த பன்னிரு நில' மென்றமையான் அது செந்தமிழ் வழங்கிய பன்னிரு தமிழ் நாடெனப் பொருள்படுமன்றிச் செந்தமிழ்நிலத்தைச் சூழ்ந்த பன்னிரண்டு கொடுந்தமிழ் நிலமெனப் பொருள் படாமையானும் செந்தமிழினின்றுஞ் சிதைந்து வழங்குமொழியே கொடுந்தமிழெனி, னஃதிழிந்தோர் வழக்காகலிற்கொள்ளப் படாமை யானும், அத்தமிழினின்றும் பிறந்தபிறிதொரு மொழியெனின், அது துளுக் கன்னடம் தெலுங்கு மலையாளம் என்றாற்போல வேறுபெயர் பெறலன்றிக் கொடுந்தமிழெனல்கூடாமை யானும், ஆண்டுச் செந்தமிழ்நில மென்றது செந்தமிழியற் கையுந் திரிபுஞ் சேர்ந்த பன்னிரு நாடாகலானும் அவ்வுரைபொருந்தாதென்ப. (தொல்காப்பியப் பாயிரவிருத்தி-அரசன்-சண்முகனார்.)



கடவுள் வணக்கமும், பாயிரமும் கூறுதல் தொல்காப்பியர் காலத்து வழக்கு இல்லை எனத் தெரிகின்றது. தொல்காப்பியத்தில், பாயிரங்கூற வேண்டியதன் அவசியத்தைப் பற்றி எங்காவது கூறப்படவில்லை. இறையனர் களவியலுரையில்.

"ஆயிர முகத்தா னகன்ற தாயினும்
பாயிர மில்லது பனுவ லன்றே"

"வணக்கம் அதிகாரம் என்றிரண்டும் சொல்லச்
சிறப் பென்னும் பாயிர மாம்."

"ஆக்கியோன் பெயரே வழியே யெல்லை
நூற்பெயர் யாப்பே நுதலிய பொருளே
கேட்போர் பயனோ டாயெண் பொருளும்
வாய்ப்பக் காட்டல் பாயிரத் தியல்பே."

என்னும் சூத்திரங்கள் மேற்கோளாகக் காட்டப்பட்டுள்ளன. பாயிரம் நூலுக்கு இன்றியமையாதது என்னும் கொள்கை தலைப்பட்ட காலத்தில் எவரோ ஒருவர் கேள்வி வழக்கிற் கிடைத்த வரலாறுகளைத் திரட்டிப் பாயிரஞ் செய்தார் ஆதல்

[2] வன்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பி
னாற்பெய ரெல்லை யகத்தவர் வழங்கும்
யாப்பின் வழியதென்மனர் புலவர் (தொல் செய் 79)
வேங்கடத்தும்பர் மொழி பெயர் தேயத்தர் (அகம் 211)

இலக்கணம் வகுத்துச் செந்தமிழ் தெளிக்கப்புக்க காலத்தில் தமிழரிற் பெரும் பாலரும் பாண்டிய நாடில்மிகக் குழுமி வசித்தனராதலின் அந்நாட்டையே தமிழ் மொழிக்குச் சிறந்துரிய தலை நாடாக அக்காலத்துக் கொண்டனர். அதனைச் சுற்றிக் கிடந்த மற்றெல்லா நாடுகளையும் கொடுந் தமிழ் நாடாகவும் கருதினர். கொடுந் தமிழென்பது இயற்கைத் தமிழ் 'பழந் தமிழ்' அல்லது மக்களிடைச் சாதாரணமாக வழங்கிவந்த தமிழ் எனக் கொள்ளின் மலைநாட்டின் பெரும் பகுதியையும் கொடுந்தமிழெனத் தமிழ் நூல்கள் கொண்டது நியாய நெறிக்கு உடன்பாடேயாம்.—புறநானூற்றின் பழமை.—K. N. சிவராச பிள்ளை.

வேண்டும். பாயிரஞ் செய்யும் வழக்குச் சங்ககாலத்தில் இருந்ததாயின், சங்கத்தொகை நூல்கள் ஒவ்வொன்றுக்கும் அவற்றைத் தொகுத்த ஆசிரியர்கள் கடவுள் வாழ்த்தும், பாயிரமுஞ் செய்திருப்பார்கள். பிற்காலத் தெழுந்த உரை களுக்குச் சிறப்புப் பாயிரங்கள் எழுதப்பட்டிருத்தல் கவனிக்கத் தக்கது. கடவுள் வாழ்த்தும், பாயிரமும் இல்லாதிருப்பதே பத்துப் பாட்டு, எட்டுத் தொகை முதலிய நூல்கள் சங்க காலத்திற் றொகுக்கப் பட்டன வாதலை விளக்கும். குறுந்தொகையின் 52-ஆம் பாடலைச் செய்த புலவர் பனம்பாரனாராகக் காணப்படுகின்றார். தொல்காப்பியச் சிறப்புப்பாயிரஞ் செய்தவர் பிறரொருவராகலாம். பாயிரத்தில் கூறப்படும் ஐந்திரம் என்பது ஐந்திர இலக்கணத்தைக் குறியாது இலக்கணத்தைக் குறிக்குமோ எனக் கருத இடமுண்டு. ஐந்திரமென்பது ஐந்திறமென இருக்க வேண்டுமெனச் சிலர் கருதுகின்றனர். இருக்கு, சாமம், யாகம் இவை போன்ற சொற்கள் பிற்காலத்தில் இருக்கு வேதத்தையும், சாம வேதத்தையும், உயிர்ப் பலி கொடுத்துச் செய்யப்படும் யாகத்தையும் குறியாது வேறு பிறபொருளில் வழங்கியிருத்தல் கவனிக்கத்தக்கது. வெவ்வேறு மொழிகளை வழங்கும் மக்கள் கலந்து வாழ நேரும் போதே இலக்கணம் எழுதப்படுகின்றதென அறிஞர் கூறுகின்றனர்.[1]

தொல்காப்பியம், பழைய தமிழ் மரபை நிலைநாட்டுவதற்கு எழுந்த நூலாதல் அதன் பெயரால் தெற்றென

[1]It was when people come in immediate contact with a language other than their own and compared the two and noticed the differences in the structure of words, or phrases and sentences between the two languages that they began to study their own language and science of grammar was born. After such contact with a language or languages they enter on a conscious stage of growth—*Pre-Aryan Tamil Culture—p. 14—P. T. S. Iyengar*



விளங்கும். தொல்காப்பியஞ் செய்தவரின் இயற்பெயர் மறைந்து விடப்பட்டது. ஆகவே, பிற்காலத்தவர் தொல்காப்பியர் என அவரை வழங்கினர். அவரது பெயர் திரண தூமாக்கினி என்பாரும் உளர். இதற்குப் பழைய சான்றுகள் யாதும் காணப்படவில்லை. அவர் பெயர் புலத்தியனென்றும், இதனை புல்+அக+தீயன்+ என்று பிரித்து எவரோ திரண தூமாக்கினி (திரணம்+தூமம்+அக்கினி) என வடமொழிப்படுத்தினர் என்றும் கூறுவாருமுளர். திருவிளையாடற் புராணத்தை நோக்குமிடத்து பல தமிழ்ப் பெயர்கள் வடமொழிப்படுத்தப்பட்டன என்று நம்ப இடமுண்டு. சங்ககாலப் புலவர்கள் பெயர்களை நோக்குமிடத்து அக்காலத்துத் திரணதூமாக்கினி என்பது போன்ற பெயர் ஒரு போதும் தோன்றியிருக்க முடியாது என நன்கு அறியலாம். தொல்காப்பியத்துக்கு முன்னும் தமிழில் பல இலக்கண நூல்களிருந்தன[1].

[1]*வடமொழியில் பாணினியின் சிறந்த இலக்கணம் தோன்று முன்னரே காக்கியர், சாகடாயனர் முதலிய இலக்கண ஆசிரியர்களது நூல்கள் எங்ஙனம் வழங்கிப் பின்னிறந்து பட்டனவோ அங்ஙனமே தொல்காப்பிய மென்னும் விரிவுடையதும் வடமொழிப் பயிற்சியைச் செவ்வனவே காட்டு கின்றதுமான நூலொன்றுதித்த அளவில் சங்க இலக்கியங்களைத் தரத்தக்கனவாய் நிலவியிருந்த தனித்தமிழ் இலக்கண நூல்கள் மாண்டு போயிருக்கலாம். கடல்கோள் ஒன்று வேண்டப்படாதே பண்டையிலக்கணங்களும் இலக்கியத்துட் சிலவும் மாண்டு போயிருக்கக் காலப் பழமை ஒன்றே போதும். ஏடுகளில் எழுதப் பட்டவை செப்பேடுகளிற் பொறிக்கப் பட்டவையாகா. நூதனமாகப் பிரதி செய்துகொள்ளப் படாவிடின் ஒரு சுவடி 500 வருடம் தான் நிலைத்திருக்குமோ வென்று ஐயுறலாம். தொல்காப்பிய மென்னும் பேரிலக்கண மொன்று தோன்றிய காலை அதன் முன்வழங்கிய சிற்றிலக்கணங்கள் பல போற்றுவாரின்றி மாண்டு போயினவென்று கொள்வதே தமிழ் மொழியின் சரித்திரத்திற்கும் தமிழ் இலக்கியச் சரித்திரத்துக்கும் பொருத்தமான*

தொல்காப்பியத்தில் பல சூத்திரங்களைப் பிற்காலத்தார் இடைச் செருகலாகச் சேர்த்திருக்கின்றனர் என்பதும் உண்மையே. மரபியல் செய்யுளியல்களில் பல சூத்திரங்கள் பிற்காலத்தில் ஏடெழுதுவோராலும், பிறராலும் எழுதிச் சேர்க்கப்பட்டிருக்கின்றன. வடமொழி நூல்கள் பலவற்றுக்கும் இக் கதியே நிகழ்ந்திருக்கின்றது என அறிஞர் கூறுவர்.

மரபியலில் விலங்கினங்களின் குட்டி, ஆண், பெண் இவை போன்றவற்றை வழங்கும் மரபுச் சொற்களைக் கூறிக் கொண்டு வந்த தொல்காப்பியர் சடுதியில் "நூலேகரகம்" எனத் தொடங்கி, அந்தணர், அரசர், வணிகரைப் பற்றிக் கூறினரெனல் சிறிதும் பொருந்தாது. இவர்களுக்குரிய தொழில்களைக் கூறியபின் உடனே, "புறக்காழனவே புல்லென மொழிப" என மரஞ் செடிகளைப் பற்றிக் கூறினர் எனலும் பொருத்தமாகக் காணவில்லை. மரபியல் 624-க்கும் 640-க்கும் இடையே உள்ள சூத்திரங்கள் பெரும் பாலும் இடைச்செருகல் என்று அனுமானிக்கத்தக்கன. "வேளாண் மாந்தர்க் குழுதூ ணல்லதில்லை" என அறுதியிடடுக் கூறியபின் அவருக்குரியனவாகச் சிலவற்றைப் பின்னும் கூறுதல், முறையாகாது. ஆகவே அச்சூத்திரங்கள் காலத்துக்குக் காலம் எழுதிச் சேர்க்கப்பட்டன வாதல்வேண்டும். வைசியன் என்னும் சொல் சங்க நூல்களிற் காணப்படவில்லை. அச் சொல்வழக்கு பிற்காலத்தது. "வைசியன் பெறுமே வாணிக வாழ்க்கை" என்னும் சூத்திரம் மிகப் பிற்காலத்தது என்று நன்றாகக் கூறலாம். செய்யுளியலில்

முடிவாம். தொல்காப்பியர் தமது நூலுள்ளே குறிக்கும் புலவரெல்லாம் அவரது காலத்திற்குமுன் தமிழகத்தில் நின்று விளங்கிய தமிழறிஞரேயாவர். அன்னோர்நூல்கள் யாவும் காலக்கணக்கன் வாய்ப்பட்டொழிந்தன வென்று கொள்வதே புத்திக்கும் உண்மைக்கும் பொருத்தமான முடிவு.

—புறநானூற்றின் பழமை—கே.என் சிவராசபிள்ளை.



167, 168, 169, 170, 171, 172 முதலிய சூத்திரங்கள் இடைச் செருகலோவென ஆராய்தற்குரியன. மரபியலில் சூ. 92-க்குப் பின்னுள்ள பகுதிகளும் அவ்வகையினவே.

## சிலப்பதிகார காலம்

இலங்கைக் கயவாகுவின் காலமே சிலப்பதிகார காலமாகும். கயவாகு கி. பி. 171 முதல் 193 வரை ஆட்சி புரிந்தான். சேரன் செங்குட்டுவன் ஆலயம் வகுத்துக் கண்ணகியைப் பிரதிட்டை செய்த காலத்தில், இலங்கை வேந்தனுகிய கயவாகு அங்குச் சென்றிருந்தானென்று சிலப்பதிகாரங் கூறுகின்றது. கயவாகுவின் பெயர் சிலப்பதிகாரத்தில் ஈரிடங்களில் வந்துள்ளது. சிலப்பதிகார காலம் நிர்ணயிக்கப்படவே அக்காலத்திருந்த சோழ சேர பாண்டியருடையவும் அவர்களைப் பாடிய புலவர்களுடையவும் காலங்கள் அறியப்படுகின்றன. தென்னிந்திய பழைய அரசர்களது காலங்களை நிர்ணயிப்பதற்கு வரலாற்றுசிரியர்கள் இம் முறையையே கையாண்டிருக்கின்றனர்.

தமிழர் சரித்திரம் என்னும் நூலை ஆங்கிலத்தில் எழுதிய * பி. தி. சீநிவாச ஐயங்காரவர்கள் கயவாகுவின் கதை நம்பத்தக்கதன்றெனக் கூறிப் பழந்தமிழ் நூல்களின் காலத்தை கி. பி. ஆறும் நூற்றுண்டுக்கு இறக்கிக் கூறியிருக்கின்றார். அவர் கூற்றுக்கு அவர் மனோபாவத்தையன்றி வேறு உறுதியான ஆதாரம் எதுவும் காணப்படவில்லை. தமிழ் நூல்கள் அவ்வளவு பழமை யுடையனவாய் இருக்கமாட்டா என அவ்வாசிரியர் உள்ளத்தில் முதற்கண் தோன்றிய பிழையான எண்ணமே இவ்விடர்ப்பாட்டுக்கு ஏதுவாயிருந்தது. கயவாகு, சேரன் செங்குட்டுவன் காலத்தவன் என்பதைத் துலக்கிக் காட்டவே ஐயங்காரவர்களின் கொள்கைகள் உண்மையல்ல என்று உறுதிப்படும்

* கயவாகுவின் கதை நம்பத்தக்கதன்றாயின் எழுத்திலன்றி வாய் மொழியில் வந்த வடமொழி நூல்களைத்தான் நம்பலாமோ என்னும் கேள்வி எழுமன்றோ?

மகாவமிசம் கி. பி. ஐந்தாம் நூற்றுண்டில் எழுதப் பட்ட நூல். இந்தியப் புலவர்கள் ஐந்தாம் நூற்றுண்டுக்கு முன் நூல் வாயிலாகக் கயவாகுவைப் பற்றி அறிந்திருக்க வகை இல்லை. இரண்டாம் நூற்றுண்டில் கயவாகுவைப் பற்றி நேரில் அறிந்த இளங்கோவடிகள் அவனைப் பற்றிச் சிலப்பதி காரத்திற் குறிப்பிட்டார்கள் என்பது நம்பத்தக்கது.

கயவாகு, தனது தந்தை காலத்திற் சிறைபிடித்துச் செல்லப்பட்ட 12,000 சிங்களவரை மீட்டுக் கொண்டு வந்தான் என்று சிங்கள நூல்கள் கூறுகின்றன. மகா வமிசம் பௌத்த நூலாதலின் பௌத்த சமயத்துக்கு மாறுனவும், சிங்களவர் தோல்வியைக் குறிப்பனவுமாகிய பலவற்றைக் கூறவில்லை. அவ்வாறு மகா வமிசம் கூருது விடுத்த பலவற்றைப் பிற சிங்கள நூல்கள் கூறுகின்றன. [1]அவையிற்றுள் கயவாகு 12,000 சிங்களவரை இந்தியாவினின்றும் கொண்டு வந்தது ஒன்ருகும். சிங்கள நூலார் இதனைச் சொப்பனக் கதை போல எழுதவில்லை என்பது நினைவு கூரற் பாலது. கரிகாலன் காவிரிக் கரையை அணை கட்டுவித்தான் என்று கலிங்கத்துப் பரணி கூறுகின்றது.

டாக்டர் ஆனந்தக்குமாரசாமி அவர்கள் இலங்கைச் சிற்பிகள் கண்ணகியின் உருவச் சிலைகள் பலவற்றைப் பழைய நாளிற் செய்திருக்கிருர்கள் எனக் காட்டிருக்கின்ருர்.

[1] Gaja Bahu is said to have rescued and brought home 12,000 Singhalese who were prisoners in South India. Some accounts say that they have gone there to work. This story of course, cannot be taken as true, but it seems certain that Gaja Bahu did go over to South India, as Tamil literature mentions that he was present at the consecration of a temple and it is very probable that he brought home with him some Singhalese people who had been taken prisoners by Tamils.—*Ceylon and World history by David Hussey M. A.—Lecturer in the University College of Ceylon.*



[1]இலங்கையினின்றும் எடுத்துப் போகப்பட்ட கண்ணகியின் சிலை ஒன்று இன்றும் இலண்டன் நூதன பொருட் காட்சிச் சாலையிற் காணப்படுகின்றது. கண்ணகி வழிபாட்டை இலங்கைக்குக் கொண்டு வந்தவன் கயவாகு வேந்தனே. [2]கயவாகுவே கண்ணகி வழிபாட்டை இலங்கைக்குக் கொண்டு வந்தான் என அருணுசலந்துரை அவர்கள் ஆராய்ந்து கூறியிருக்கின்றுர்கள்.

கயவாகு, இந்தியாவினின்றும் மீட்டுக் கொண்டுவந்த சிங்களவரை இலங்கையின் பல பாகங்களிற் குடியேற்றினுனென்றும், சிங்களவர் மீட்கப்பட்ட நாள் பெருநாளாகக் கொண்டாடப்பட்டதென்றும், கண்ணகி வழிபாடு முதன் முதல் கயவாகுவால் இலங்கைக்குக் கொண்டுவரப் பட்டதென்றும், பத்தினி தேவியின் [4]காற்சிலம்பைத் தொட்டுச்

[1] "According to Dr. A. K. Kumarasamy some of the images depicted in illustration of ancient art of Ceylon are of this deified woman-*Ancient India P. 71.*

[2] *சிங்கள மக்கள் வைத்து வழி பட்டவும் விழாக்களில் எடுத்துச் செல்லப்பட்டனவுமாகிய பத்தினிச் சிலம்புகள் (பாதசரம்) கொழும்பு நூதன பொருட் காட்சிச் சாலையில் வைக்கப்பட்டுள்ளன.*

[3] Sometimes the tide of invasions was rolled back to South India as by king Gaja Bahu, who brought back a multitude of captives, whom he settled in Alutkura Korale of the Colombo District, Harispattu and Tampane of the Kandy District and its parts of Kurunegala District.

Gaja Bahu's triumph is commemorated by a yearly Perahera festival which is now continued by the Dalada Malingawa at Kandy. But the tooth relic of Buddha which now heads the procession formed no part of it till 150 years ago. At this festival a high place had always been held by

சத்தியம் செய்தல் சிங்களவராற் பெரிதும் அஞ்சப்பட்ட தென்றும் இலங்கைச் சரித்திரக் குறிப்புகள் என்னும் நூல் கூறும். இவை எல்லாம் கட்டுக் கதையாக எழுந்தன என்று கூறுவது அமையாது. கரிகாலன் காவிரிக் கரையைக் கட்டுவித்தான் என்று கலிங்கத்துப் பரணி கூறுவது, கயவாகு கண்ணகியின் பிரதிட்டையிற் பிரசன்னமாயிருந்தான் என்று சிலப்பதிகாரம் கூறுவது, சிங்கள நூல்கள் வங்கநாசிக திசன் காலத்திற் சிறையாகப் பிடித்து இந்தியாவுக்குக் கொண்டுபோகப்பட்ட சிங்களவரைக் கயவாகு மீட்டான் எனக் கூறுவது, சிங்கள நாட்டில் பழமை தொட்டுக் கண்ணகி வழிபாடு இருந்து வருவது ஆகிய இவற்றை எல்லாம் ஒருங்கு வைத்து ஆராயுமிடத்துச் சிலப்பதிகாரத்திற் கூறப்பட்ட வரலாறு பொய்யன்று என்பது நன்கு விளங்கும். ஆகவே, பி. தி. சீனிவாச ஐயங்காரவர்கள் தமிழ் நூல்கள், அரசர், புலவர்களின் காலங்களைப்பற்றிக் குறிப்பிட்டுள்ள பகுதிகள் முற்றும் தவருடையனவாதல் தெளியப்படும்.

---

the goddess Pattini whose worship was introduced by Gaja Bahu. He brought from India her golden Halaimba or Anklet, copies of which are the symbols of her worship, and oaths are infrequently taken on them in courts of justice. No oath is more dreaded than this by the Singhalese peasant.

Gaja Bahu who established in honour of the Goddess the great national game Ankeliya or horn pulling held specially on the occasion of epidemic and conducted on a magnificent scale in the presence of thousands of spectators.

—*Sketches of Ceylon History—Sir P. Arunachalam.*



## 5. தமிழர் நாகரிகச் சிறப்பு

### வாணிகம்

பண்டைத் தமிழர் வாணிகத் துறையில் மிக முன்னேற்ற மடைந்திருந்தனர். அசீரியர், பாபிலோனியர், எகிப்தியர், கிரேக்கர், உரோமர், சீனர், அராபியர், பினீசியர், முதலிய பழைய நாகரிக சாதியார் தமிழ் நாட்டோடு வாணிகத் தொடர்புடையவர்களா யிருந்தனர். பிற நாடுகளுக்குப் பண்டங்களை ஏற்றிச் செல்லும் மரக்கலங்களும் பிற நாட்டுச் சரக்குகளுடன் வந்த நாவாய்களும் தென்னிந்திய துறைமுகங்களிற் முழுமி நின்றன. தமிழர் கடற் பயணத்தில் நன்கு பழகி இருந்தனர். இந்து மாக் கடலில் தென்னிந்திய மரக்கலங்களே பெரும்பாலும் ஓடிக் கொண்டிருந்தன. மரக்கலங்களின் முன்புறம், [1]யானை, சிங்கம், குதிரை முதலியவற்றின் முகம்போல் செய்யப்பட்டிருந்தது. கி. மு. எட்டாம் நூற்றுண்டின் முன், தென்னிந்தியாவுக்கும் மேற்கு ஆசியாவுக்குமிடையில் கப்பல் வழியாக வாணிபம் நடைபெற்ற தென்பதற்குப் பல ஆதாரங்களுண்டு. இந்தியாவில் வேதங்கள் தோன்றுவதன் முன் தமிழர் சாலதியரோடு வாணிகம் நடத்தினர். சாலாதியரது தலைநகராகிய ஊர் (Ur) நகரத்தின் அழிபாடுகளில், மலையாளக் கரைகளில் மாத்திரம் காணப்படும் தேக்கமர உத்திரம் கண்டெடுக்கப் பட்டது. ஊர் நகரம் கி. மு. 5000 வரையில் அமைக்கப்பட்டது.[2]

தமிழர் ஆறுயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே வாணிகத் துறையில் நன்கு பயின்றிருந்தார் களென்பதை இது அறிவிக்கின்றது. கி. மு. 1700-ல் எகிப்துக்குச் சென்ற யோசேப்பின் வரலாறு, அக்காலத்தில் இந்திய வாணிகப்

---

[1] பரிமுக வம்பியும், கரிமுக வம்பியு
மரிமுக வம்பியும் (சிலப். 13, 176-177).

[2] Regozin's Vedic India—P. 305.

பண்டங்கள் வணிகர் கூட்டத்தாரால் தரை மார்க்கமாக (அரேபியாவுக்கு ஊடாக) எகிப்து, சீரியா, பாபிலோன் முதலிய நாடுகளுக்குக் கொண்டு போகப்பட்டன என்பதை அறிவிக்கும். கி. மு. பதினேழாம் நூற்றுண்டில் இந்தியாவுக்கும் மேற்கு நாடுகளுக்கும் வாணிகத் தொடர்பு இருந்ததென்பதற்கு எகிப்திய ஓவிய எழுத்து நூலில் ஆதாரம் காணப்படுகின்றது.[1] குரங்கை உணர்த்தும் கவி என்னும் சொல்லின் திரிபாகிய கொவ் (எகிப்திய) ஓவிய எழுத்தில் 'கவு' என்று காணப்படுகின்றது. கி. மு. 1462-ல் முடிவெய்திய எகிப்திய பதினெட்டாவது பரம்பரையிலுள்ள அரசரின் பிரேதங்கள் இந்திய மசிலின் துணிகளால் சுற்றப்பட்டிருந்தன. எகிப்தியர் கப்பற் பயணத்துக்குப் பினீசியரைச் சம்பளத்துக்கு அமர்த்தினர். தையர் நாட்டு ஹிரம் என்னும் அரசனும் சாலமனின் பிதாவாகிய தாவீது (David) என்னும் எபிரேய அரசனும் சேர்ந்து 'ஒபிர்' நாட்டுக்கு வாணிகக் கப்பல்களைப் போக்கினர். ஒபிர் பயணம் மூன்று ஆண்டுகளுக்கு ஒரு முறை நடைபெற்றது. கப்பல் சரக்குகளை ஏற்றுமதி இறக்குமதி செய்

*பொன் மலிந்த விழுப் பண்ட
நாடார நன்கிழிதரு(ம்)
ஆடியர் பெரு நாவாய் (மதுரைக்காஞ்சி. 81-)
வேறுபன்னாட்டிற் காறர வந்த
பலவினை நாவாய் தோன்றும் பெருந்துறை (நற்-295)
நெடுங்கொடி நுடங்கு நாவாய்
(இழிதரும்-இறக்கும்; ஆடு இயல்-கொடி அசைகின்ற; கால்—காற்று.)

[1]"Direct evidence of ancient commercial relation between India and the West has recently been found in heiroglyphic texts of seventeenth century......For the word kapi-ape-which occurs in kings X.22 in the form of qof(Greek) is found in these Egyptian texts in the form of kafu......*History of Indian Literature— P. 3. F. notes.—Weber.*



வதிலும் இடையே உள்ள வாணிகத் துறைகளில் தங்குவதிலும் மூன்று ஆண்டுகள் சென்றன எனச் சரித்திர ஆசிரியர் சிலர் கூறுகின்றனர். 'ஒபிர்' என்பது தென்னிந்தியாவில் உள்ள உவரி என்னும் பழைய துறைமுகம் எனக் கருதப்படுகின்றது. மேல்நாட்டுச் சரித்திர ஆசிரியர்கள் ஒபிர் என்பது எந்த இடமென முடிவாகக் கூறவில்லை. உலக சரித்திர ஆசிரியர்கள், ஒபிர் என்பது ஆப்பிரிக்க அரேபிய இந்தியக் கரைகளிலுள்ள செழிப்பான நகரங்கள் எனக் கூறுகின்றனர். [1]மூன்று ஆண்டுகளுக்கொரு முறை பிரயாணம் செய்யப்பட்டதாலும் கப்பல்கள் கொண்டு சென்ற பொருள்களிற் பெரும்பாலன இந்தியாவிற் காணப்படுவனவாதலினாலும் ஒபிர் என்பது இந்தியத் துறைமுகமே எனல் பொருத்தமாகக் காணப்படுகின்றது.[2] சாலமன் (கி.மு. 1000)

[1]Ophir was the general name for the rich countries as the south, lying on the African, Arabian and Indian coasts as far as that time known. The name of Ophir was common even in the time of Moses.

At the time of the Ophir voyage, when Solomon sent ships to India for ivory, apes and peacocks, there were as yet no Aryans in southern India, for the name for apes, in Hebrew 'qof'and in Sanskrit, kapi connot be an Aryan word. It first comes to hand in the latest book of the Rig Veda but also appears in the form of 'qof' as early as the IV Dynasty in Egypt and the name for peacocks 'tuki' has been borrowed from the Malabar togai.

—Historians' History of the world Vol. 2. P. 233 & 489.

*கவி என்பது தமிழ்ச்சொல்; கவிந்து நடத்தல் பற்றி கவி [illegible]ப்பட்டது.

[2]Science of language என்னும் நூலில் ஒபிர் என்பது இந்தியத் துறைமுகமே யென்றும் அதற்குக் காரணம் ஒபிரிலிருந்து மேற்குத் தேசங்களுக்குச் சென்ற பொருள்கள் இந்தியப் பெயர்களால் அறியப்பட்டமையே யாகும் என்றும் மாக்ஸ்மூலர் கூறியுள்ளார்.

சந்தனக்கட்டை, குரங்கு, மயில் முதலியவற்றை ஓபிரி னின்றும் பெற்றான். மயில் இந்தியாவினின்றும் கொண்டு போகப்பட்டது. [1]துகிம் என்னும் பெயர் எபிரேய பைபி ளில் காணப்படுகின்றது. இது தோகை என்னும் தமிழ்ச் சொல்லின் திரிபு. மேல் நாடுகளுக்குக் கொண்டு போகப் பட்ட பொருள்கள் தங்களுடன் தமக்குரிய தமிழ்ப் பெயர்களையும் கொண்டு சென்றன. கிரேக்க மொழியில் அரிசி 'ஒரிசா' இஞ்சி 'இஞ்சிவேர்' என்றும் கறுவா 'கர்பியன்' திப்பிலி 'பிப்லி' என்றும் வழங்கும். இவை முறையே அரிசி இஞ்சிவேர், திப்பிலி என்பவற்றின் திரி பாகும். தந்தத்துக்கு ஹிபம் என்னும் பெயர் எபிரேயத்தில் காணப்படுகின்றது. இது இபம் என்னும் தமிழ்ச் சொல் லின் திரிபு.

இந்தியாவினின்றும் பொன், பட்டு, முத்து வாசனைத் திரவியங்கள் முதலிய பண்டங்கள் கிரேக்க நாட்டுக்குக் கொண்டு போகப்பட்டன. ஹோமர் என்னும் பழைய கிரேக்க புலவர் இந்தியாவினின்றும் கிடைக்கும் பொருள் களைப் பற்றிக் கூறியிருக்கின்றார். முற்காலத்தில் இந்தி யாவினின்றும் தங்கம் பிறநாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப் பட்டது என்பதற்குப் பல ஆதாரங்கள் காணப்படுகின்றன. இந்தியாவோடு வாணிபஞ் செய்ததால் அசீரியா ஏராளமான தங்கத்தை ஈட்டிற்று. பாபிலோனிய பழைய சாசனங்களில் ஆடைக்குச் சிந்து என்னும் பெயர் காணப்படுகின்றது.

[1]The names of the last two subjects Kapim and Tukim as found in Hebrew Bible are the same as those still used in Tamil, i. e. Kavi and Tokai. Subsequently the Arabs and Greeks appear to have kept up the trade with Tamilakam. The Greek names for rice (Oryza) Ginger (zingiber) and Chinnamon (Karpion) are almost identical with their Tamil names *arrisi*, *inchiver* and *karuva* and clearly indicate that Greek merchants conveyed these articles and other names to Europe from Tamil land.—*Tamils 1800 years ago.*



இது இந்திய ஆடை என்பதைத் சரித்திர ஆசிரியர்கள் எல் லோரும் ஒத்துக்கொள்கின்றனர். இந்த ஆடை பாரசீகத் துக் கூடாகப் பாபிலோனுக்குச் செல்லவில்லை. அப்படிச் சென்றிருந்தால் 'சி' என்பது 'ஹி, என்று மாறியிருக்கும். வேத மந்திரங்களுக்குரிய சாதியார் கடலையும் கடற் பயணத்தையும் பற்றிக் கேள்விப்பட்டார்களே அன்றி அதனை அறிந்திருக்கவில்லை. ஆகவே திராவிட மொழி யைப் பேசிய சாதியாரே ஆடையைப் பாபிலோனுக்குக் கொண்டு சென்றனர். * ஆகவே தென்னிந்தியாவுக்கும் மேற்கு ஆசியாவுக்குமிடையில் கடல் மார்க்கமாக வாணிகம் நடைபெற்றது என்பதை மறுக்க முடியாது.

கி. மு. எட்டாம் நூற்றாண்டுக்குப் பின் நடந்த வாணி கத்தைப் பற்றி மிகத் தெளிவான ஆதாரங்கள் கிடைக்கின் றன. சாலமன்சர் IV என்னும் அசீரிய அரசன் (கி. மு. 727-722) இந்திய யானைகளை உபகாரமாகப் பெற்றதும், இந்திய தேக்கு மர உத்திரம் ஒன்று பீர்ஸ் நிம்ரட் (Birs Nimrud) என்னும் நகரத்திலுள்ள நிபுச்சட் நெசர் III (கி. மு. 604-562) அரசனின் அரண்மனையிற் காணப்பட்ட தும், [1]பவேரு சாதகம் (கி. மு. 500) இந்திய வணிகர் முதன் முதல் மயில்களைக் கடல் மார்க்கமாகப் பாபிலோனுக் குக் கொண்டு போனதைக் கூறுதலும், பாபிலோன் இந்திய அரிசி சந்தனக்கட்டை முதலியவற்றை இறக்குமதி செய்த

The word for ivory shen hibbin—the tooth of the hubb is the Sanskrit ibham and Tamil ibam—Sketches of Ceylon History—(Sir P. Arunachalam.)*Regozin's Vedic India P.307

The Baveru Jataka which relates the adventures of Indian merchants taking to Babylon by sea the first peacock for sale indicate according to Prof. Buhler that "the Banis of western India undertook trading voyages to the shores of Persian gulf or of its rivers in the 5th or perhaps in the 6th century B.C.—*Studies in Indian History and Culture p. 14—Dr. Narendranath Law.*

தும், பழைய எபுரு பைபிளில் அரசர் I அரசர் II முதலிய வர்களின் வரலாறுகளைத் தொகுத்தவர்கள், தமிழ் நாட்டி னின்றும் கிடைத்த பொருள்களுக்குத் தமிழ்ப் பெயர் களையே குறிப்பிட்டிருத்தலும் ஆகிய இவை மேற்கு ஆசியா வுக்கும் இந்தியாவுக்குமிடையில் கி.மு. 8-ஆம்-7ஆம், 6-ஆம் நூற்றுண்டுகளில் ஒழுங்கான கடல் வழி வாணிகப் போக்குவரவு இருந்தது என்பதை உணர்த்தும். பாபிலோ னில் தைகிரஸ் யூபிராத்தஸ் என்னும் ஆறுகள் சந்திக்கும் இடத்துக்கு அண்மையில் தமிழர் குடியேறி இருந்தார்கள். அங்கு கிரிட்டிண, பலதேவ வழிபாடுகள் இருந்தன என்று அறியப்படுகின்றது. போதாயனர், மேற்கு ஆசியாவோடு வாணிகஞ் செய்தவர்களைக் கண்டித்திருக்கின்றுர். இதனுல் வட இந்தியர் அவ்வாணிபத்தில் முக்கியமற்றவர்களெனத் தெரிகின்றது. அர்த்த சாத்திரஞ் செய்த கௌடலியர் வட இந்தியாவைவிடத் தென்னிந்தியாவே வாணிகத்திற் சிறந்து விளங்கிற்றென்றும், தென்னிந்தியாவில் பொன், வயிரம், முத்து, சங்கு முதலிய பொருள்கள் கிடைத்தன என்றும், வட இந்தியா கம்பளம், தோல் முதலியவற்றையே அளித்தது என்றும் கூறியுள்ளார்.[1]

மதுரை அழகிய ஆடைகளுக்குப் பேர் போனது. தமிழர் கடல் கடந்து திரவியந் தேடினுர்கள் என்று தொல் காப்பியம் கூறுகின்றது. மேற்கு ஆசிய நாடுகளோடு தென்னிந்தியா வாணிகம் நடத்தியதாதலின் கி.மு. 20-ல் பாண்டிய அரசன், ஆகஸ்தஸ் என்னும் உரோமைச் சக்கர வர்த்திக்குத் தூதனுப்பினுன். இன்னொரு அரசன் கிரேக்க போர்வீரரைத் தனக்கு மெய்க்காப்பாளராக அமர்த்தினுன். யவனப் [2]போர்வீரர் பாண்டியரின் கோட்டை வாயில்களைக் காவல் புரிந்தனர்.*

---

* *கடிமதில் வாயில் காவலிற் சிறந்த*
*வடல்வாள் யவனர்* (சிலப்)

[1] Kennedy's article on the early commerce of Bobylon with India—J. R. A. S.

[2] *அயோனியர் என்பதன் திரிபு.*



கிறித்துவுக்குப் பல நூற்றுண்டுகளின் முன் இந்திய வணிகர் பர்மா வழியாகவும் அதன் தென்கரை வழியாகவும் சென்று, கம்போதியாவில் (இந்துச்சீனம்) வாணிகத் தொடர்பை ஏற்படுத்தினர். கம்போதியாவில் குடியேறிய தமிழர், அங்கு ஓர் இராச்சியத்தைக் கோலினர். அங்கு கிலமாகக் காணப்படும் கட்டிடங்களில் கடற்போர், கடற் பயணம் ஆகியவற்றை விளக்கும் ஓவியங்கள் காணப்படு கின்றன. தமிழர் சீனுவோடு வாணிகத் தொடர்புடையவர் களாயிருந்தார்கள் என்பதில் சந்தேகம் இல்லை. 'கியாசோக் குடாவை அடுத்து கி. மு. 7-ஆம் நூற்றுண்டில் இந்தியர் குடியேறி யிருந்தார்கள்' என்று ரெறியன் டிலாகோபிறிக் என்னும் ஆசிரியர் கூறுகின்றுர்[1]. கடல் தரை என்னும் இரு வழிகளாலும் இந்தியாவுக்கும் சீனுவுக்கும் போக்கு வரவு இருந்தது. கிறித்துவ ஆண்டுக்கு முன்னும், தமிழர் சுமத் திரா, ஜாவா முதலிய நாடுகளோடு வாணிகம் நடத்தினுர் கள். இதனை மணிமேகலை என்னும் நூல் தெளிவாகக் கூறு கின்றது. சுமத்திராவை அடுத்த பாலி என்னும் தீவில், இன்றும் தமிழருடைய பழக்க வழக்கங்களும், நாகரிகச் சின்னங்களும் வழிபாட்டு முறைகளும் காணப்படுகின்றன.

கடல், பரவை, ஆழி, புணரி, ஆர்கலி, முந்நீர் என்பன கடலையும், ஓடம், கலம், மரக்கலம், தோணி, மிதவை, கப்பல், நாவாய், மரம், திமில், அம்பி முதலியன மரக் கலத் தையும் உணர்த்தும் தூய தனித்தமிழ்ச் சொற்களாம். இவை தமிழர் கடலையும், கடற் பயணத்தையும் நன்கு அறிந்திருந்தார்கள் என்பதற்குச் சான்றுகளாகும்.

---

[1] Prof. Jerrian De la Couperic proves in his western Origin of the early Chinese civilization that about the year 680 B. C. the sea traders of the Indian Ocean founded around the present Gulf of Karo-tohu a colony which they called Langa-ga or Langa-ya,"—*Tholkappiam and Tamil script—S.R. Muttukumaru.*

கிறித்துவ ஆண்டின் முற்பகுதியில் தென்னிந்தியாவுக்கும் உரோமுக்கும் இடையில் நெருங்கிய வாணிகத் தொடர்பிருந்தது. உரோமர் முசிறியிலும் பிற இடங்களிலும் குடியேறி இருந்தனர். யவன வணிகர் அடிக்கடி போக்குவரவு செய்யும் துறைமுகங்களுள் முசிறி முக்கிய இடமாக விருந்தது. பெதுருங்கேரியரின் பயணக்குறிப்புகளில்[1] (கி.பி. 225) கிரேக்கர் தமது வாணிகப் பாதுகாப்பின் பொருட்டு முசிறியில் 2000 போர் வீரரை வைத்திருந்தார்கள்; ஆகஸ்தஸ் அரசனைக் கனம் பண்ணும் பொருட்டு அவனுக்கு ஓர் கோயில் அமைத்திருந்தார்கள் என்றும் சொல்லப்படுகின்றன. மலையாளக் கரையிலுள்ள பைசாந்தியம் (Byzantium) என்னும் இடத்தில் உரோமர் குடியேறி இருந்தனர். உரோம் நாட்டினின்றும் அழகிய பேழைகள், (யவனச் செப்பு) பாவை விளக்கு, மதுவகை முதலிய பொருள்கள் தமிழ் நாட்டுக்குக் கொண்டுவரப்பட்டன. மிளகு, தந்தம், நவரத்தினம், பட்டாடை, கறுவா, சந்தனக் கட்டை முதலியவை தமிழ் நாட்டினின்றும் யவன தேசத்துக்குக் கொண்டு போகப்பட்டன.

உரோம வாணிகப் பெருக்கம் அதிகம் இருந்தமையால் உரோமர் தமது நாணயங்களைத் தென்னிந்தியாவில் வழங்கினர். உரோமரின் நாணய உற்பத்திச்சாலை ஒன்று தென்னிந்தியாவில் இருந்ததாக நம்பப்படுகின்றது. தென்னிந்தியாவில் தெல்லிச்சேரிக்குச் சமீபத்திலுள்ள கோட்டயத்திலும், மதுரை மாவட்டத்திலுள்ள கலியன்புத்தூரிலும், கோயம்புத்தூர் மாவட்டத்திலுள்ள பொள்ளாச்சி, கருவூர் வெள்ளலூரியிலும் புதுக்கோட்டை முதலிய இடங்களிலும் மிகப்பல உரோம நாணயங்கள் கண்டெடுக்கப்பட்டன.

* "பேரியாற்று வெண்ணுரை கலங்க யவனர் தந்தவினை
மாணன் கலம் பொன்னொடு வந்து கறியொடு பெயரும்
வளங்கெழு முசிறி" (அகம் 149).

[1] Peutingerian Tables.



இவை உரோம தென்னிந்திய வாணிகப் பெருக்கத்தைக் காட்டுகின்றன. இந்திய சரக்குகள் அலக்சாந்திரியா வழியாக உரோம நாட்டை அடைந்தன.

தென்னிந்தியாவில் முத்துக் குளிப்பு முக்கிய தொழிலாயிருந்தது. வடமொழியில் முத்தைக் குறிக்கும் முத்த என்னும் சொல் முத்து என்பதன் திரிபே. தென்னிந்தியாவில் முத்துக் கிடைப்பதாக உரோமர் அறிந்திருந்தனர். அவர்கள் தமிழ் நாட்டினின்றும் ஏராளமான முத்தை வாங்கிச் சென்றனர். உரோமை நாட்டுப் பெண்கள், முத்தில் அதிக மோகம் உடையவர்களா யிருந்தார்கள். அவர்கள் தமது மேனியை முத்துக்களால் அலங்கரித்தார்கள்; முத்துக் கோவைகள் ஒன்றோடு ஒன்று முட்டி ஒலி செய்வதைக் கேட்டு மனம் பூரித்தார்கள். காலில் தரிக்கும் செருப்புகளின் வார்களும் முத்துக்களால் அலங்கரிக்கப்பட்டன. கயஸ் குளோடியர் என்னும் உரோமை அரசனின் இராணி உலோலா, 300,000 தங்க நாணயம் விலை மதிப்புள்ள முத்துக்களால் தன்னை அலங்கரித்திருந்தாள். கிளியோபத்திரா என்னும் எகிப்திய இராணி, முன் கீழ்நாட்டு அரசருக்குச் சொந்தமாயிருந்ததுவும், காதில் அணியப்படுவனவுமாகிய இரண்டு பெரிய முத்துக்களை வைத்திருந்தாள். 80,000 தங்க நாணயம் விலையுள்ள ஒரு முத்தை அவள் காடியில் (வின்ஞரியில்) கரைத்துக் குடித்தாள். மற்ற முத்தைக் கரைக்குஞ் சமயத்தில் பாங்கியால் தடுக்கப்பட்டாள். தென்னிந்தியாவினின்றும் உரோமை இராச்சியத்துக்கு அனுப்பப்பட்டவற்றுள், முத்து, வைடூரியம், கோமேதகம், நீலம் முதலிய இரத்தின வகைகளே முக்கியமுடையவை. அந்தோனியஸ் என்னும் அரசனின் மந்திரியாகிய நோநியஸ் என்பவன் அவனிடத்திருந்த ஒரு நீலக்கல்லின் பொருட்டு வேலையினின்றும் நீக்கப்பட்டான். அவன் தனது செல்வம்

* "யவனர் நன்கலந்தந்த தண்கமழ் தேறல்" (புறம் 56)
"கொற்கை முன்றுறை யவிர்கதிர் முத்தமொடு" (அகம் 21)

எல்லாவற்றையும் விட்டு 8000 தங்க நாணயம் விலை மதிப்புள்ள நீலக்கல்லுடன் தப்பி ஓடினான். ஆண்டில் இரண்டு இலட்சம் தங்க நாணயம் வரை மதிப்புள்ள உரோம் நாட்டின் செல்வத்தை இந்தியா விழுங்கி விடுகின்றது எனப் பிளினி (கி. பி. 62—113) வெறுப்பாகக் கூறியிருக்கின்றார்.

பிற நாட்டு வணிகர் மிளகு, கசகசா, சந்தனம் ஆகியவற்றை மலையாளக் கரையினின்றும் வாங்கினர். நெல்லூரிலிருந்து தெற்கே கூடலூர், புதுச்சேரி வரையிலும் ஒரு வகைத் தகட்டுச் செம்பு நாணயங்கள் நிலத்திற் கண்டெடுக்கப்படுகின்றன. இவற்றோடு உரோம நாணயங்களும், துளையிட்ட சீன நாணயங்களும் கண்டெடுக்கப்பட்டன. பெரிய மழைக்கும் புயலுக்கும் பின் மீன் பிடிப்போரின் பெண்டு பிள்ளைகள் இவ்வகை நாணயங்களைப் கடற்கரை ஓரங்களில் பொறுக்கி எடுக்கிறார்கள். கிறித்தாப்தத்தில் நாலைந்து நூற்றாண்டுகளாகப் பிற நாட்டு வாணிகம் தமிழ் நாட்டில் பெரிதும் நடைபெற்றது என்பதற்கு இது போதிய சான்றாகின்றது. செப்புத் தகட்டுக் காசுகளின் ஒருபுறத்தில் இரண்டு பாய்மரமுள்ளதும் துடுப்புகளாற் செலுத்தப்படுவதுமாகிய தோணியின் வடிவம் பொறிக்கப்பட்டிருக்கிறது.

வணிகர் கடல் கடந்து மரக்கலங்களில் நெடுந்தூரம் செல்வதைப் பற்றி மணிமேகலை என்னும் நூல் அழகாகக் கூறுகின்றது. "திரைகடலோடியுந் திரவியந் தேடு" என்னும் பழமொழி இன்றும் தமிழ் நாட்டில் வழங்குகின்றது.

முசிறி, கொற்கை, தொண்டி, மாந்தை, புகார் முதலியன தமிழ் நாட்டின் முக்கிய துறைமுகங்களாகும். புகார் நகரின் சிறப்பைக் கடியலூர் உருத்திரங் கண்ணனார் பட்டினப் பாலையில் விரித்துக் கூறினர். பண்டகசாலை முற்றங்களில் குவிந்து கிடக்கும் பண்டங்களைப் பற்றியும் சுங்கங் கொள்வோரைப் பற்றியும் முன் ஓரிடத்திற் கூறியுள்ளோம். கடை வீதிகளில் கங்கை, காவேரி நாடுகளின் விளைபொருள்களும் ஈழம், கடாரம் (கெடா)[1] முதலிய தேசங்

[1] மலேயாவிலுள்ள நாடு.



களின் உணவுப் பொருள்களும், கீழ் கடலிற் பிறந்த பவழமும் தென் கடலிற் குளித்த முத்தும், மேற்குத் தொடர் மலையிற் பிறந்த சந்தனக் கட்டையும், இமய மலையிற் பிறந்த பொன்னும், மணியும், அரேபியாவினின்று கடல் மார்க்கமாக வந்த குதிரைகளும், வண்டிகளிலும் கழுதைகளிலும் கொணர்ந்த மிளகு மூடைகளும் தேக்கிக் கிடந்தன.

மரக்கலங்கள் திசை அறிந்து செல்லும் கலங்கரை விளக்கங்கள் கடற்கரைப் பட்டினங்களில் அமைக்கப்பட்டிருந்தன. இக்கட்டிடங்கள் ஓலை கீற்று முதலியவற்றால் வேயப்படாது மூடுசாந்திடப் பெற்றிருந்தன.

மரக்கலங்களின் உறுப்புகளைக் குறிக்க வழங்கும் சொற்கள் தமிழ்ச் சொற்களாகவே காணப்படுகின்றன.[1] கப்பற் பாட்டு எனத் தற்காலம் வழங்கும் பாடல்களிலும் இச்சொற்களைக் காணலாம்.

## உழவு

"சுழன்றுமேர்ப் பின்ன துலக மதனா
லுழந்து முழவே தலை"

தமிழர் உழவுத் தொழிலை மற்றெல்லாத் தொழில்களிலும் உயர்ந்ததும் சிறந்ததுமென்று கருதினர். "உழுதுண்டு வாழ்வதற்கொப்பில்லை." எனத் தமிழ் மூதாட்டியும், "உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார் மற்றெல்லாம்—தொழுதுண்டு பின் செல்பவர்" என்று வள்ளுவனாரும் உழவுத் தொழிலின் சிறப்பைக் கூறுதல் காண்க. உழுது, எருவிட்டுக் களை கட்டிப் பயிர் செய்யவேண்டிய நுட்பங்களைத் திருக்குறள்

[1] அணியம் - கப்பலின் முன்பக்கம்; ஆஞ்சான் - மரக்கலப் பாயை இழுக்கும் கயிறு; ஆலாத்து - கப்பலின் பெருங்கயிறு; ஏரா - கப்பலின் அடிப்பொருத்து; கடிசை - பாய்மரந்தாங்கி; குந்தா - கப்பலின் பின்புறம்; காவிப்படுவான் - கப்பலின் தலைமைப் பாய்மரம்; நீ கான் - மாலுமி; கானு - சுக்கான் கைப்பிடி; கிழலை - மரக்கலத்தின் சாய்வுப் பக்கம்.

கூறுகின்றது. அக்காலத்தில் எருவே உரமாகப் பயன் படுத்தப்பட்டது. வயல்களுக்கு நீர் பாய்ச்சும் வாய்ப்புக்கள் அரசினரால் ஏற்படுத்தப்பட்டிருந்தன. நெல் விளையும் வயல்களையுடைய மருத நிலங்களில் ஏரிகளும் வாவிகளும் காணப்பட்டன. ஆற்றிலிருந்து செல்லும் கால் வாய்கள் வழியாக வயல்களுக்கு நீர் பாய்ச்சப்பட்டது. ஆறில்லாத இடங்களில் ஏரிகளிலிருந்து நீர் பாய்ச்சப் பட்டது. கரிகாற் சோழன் விளை நிலங்களுக்கு நீர் பாய்ச்சும் வாய்ப்புக்களைச் செய்வதற்காகக் காவிரிக்கரையில் பெரிய அணை கட்டுவித்தான். இதற்கு இலங்கையிலிருந்து 12,000 சிங்களவர் சென்றிருந்தார்கள் என இலங்கை வரலாறு கூறுகின்றது.

தமிழில் நூல் செய்வோர் நாட்டுவளத்தைக் கூறுமிடத்து, உழவர் நாற்றங்கால்களில் நாற்றுப் பறித்தல், நாற்று முடிவளைச் சமந்து சென்று வயல்களிற் போடுதல், ஆம்பலிலையிற் கள்ளை வார்த்து உண்ட கடைசியர் பாடல் களைப் பாடிக்கொண்டு நாற்று நடுதல், களைகட்டல், நெல் லரிதல், சூடடுக்குதல், கடாவிடுதல், பொலிதூற்றல், கிணைப் பொருநர் களம் பாடுதல், தானியங்களைக் கூடுகளின் வாய் களைத் திறந்து உள்ளே கொட்டுதல் முதலிய சிறப்புகளை வருணித்துக் கூறுதல் மரபு. கம்பர் வேளாண் மரபுகளை விளக்கி ஏரெழுபது என்னும் அரிய நூலொன்றைச் செய்திருக் கின்றார்.

மருதநிலங்களில் நெல்லே யன்றிக் கரும்பும் விளைந்தது. வயல்களின் இடையே இருக்கும் கொட்டில்களிலுள்ள ஆலை களில் கருப்பந்தடிகளைப் பிழிந்து எடுக்கப்பட்ட சாறு, கட்டி யாகக் காய்ச்சப்பட்டது. குறிஞ்சி நிலத்தில் வரகு, தினை, கொள்ளு, அவரை முதலிய கூலங்கள் விளைந்தன. * வயல்

* *கருங்கால் வரகே யிருங்கதிர்த் தினையே*
*சிறுகொடிக் கொள்ளே பொறி கிளவரையொடு*
*இந்நான்கு—புறம் 335*



நிலங்கள் மிகச் செழிப்புற்றிருந்தன. யானை நின்றால் மறைக் கக் கூடிய நெற் கதிரையுடைய கழனி என்றும், மூங்கிலைப் போன்றும், கரும்பைப் போன்றும் வளரும் நெல் என்றும் இலக்கியங்களில் நெற்பயிரின் செழுமை விதந்து கூறப்படு கின்றது. உழுதொழிலாற் சிறந்து செல்வ வாழ்க்கை யுடையரா யிருந்தோர் அரசனாற் கௌரவிக்கப் பட்டு, காவிதிப்பட்டம் வழங்கப் பெற்றனர். தமிழ் நாட்டின் உயிர் நாடி உழுதொழிலாகவே இருந்தது; இன்றும் இருக்கிறது.

*இலமென் றசைஇ இருப்பாரைக் காணின்*
*நிலமென்னு நல்லா ணகும்.* (குறள்)

(இதன் பொருள்) யாம் வறியேம் என்று ஏங்கி இருப்பாரைக் கண்டால் பூமாதேவி தனக்குள் சிரிப்பாள்.

## கைத்தொழில்

தமிழ் நாட்டிற் பெரும்பாலும் எல்லாவகைக் கைத் தொழில்களும் வளர்ச்சி அடைந்தன. உரோமை நாட்டுச் சீமாட்டிகள் அணிந்த பாலாவி போன்ற பட்டாடைகள் தமிழ் நாட்டு நெசவாளரால் நெய்யப்பட்டனவே. கண்ணைக் கவரும் பலநிறம் ஊட்டப்பட்ட அழகிய பட்டாடைகளை உரோமை வணிகர் உரோமில் நிறைக்கு நிறை தங்கத்துக்கு விற்றனர். ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே தமிழ் மக்கள் ஆடை நெய்யும் தொழிலில் தேர்ச்சி பெற்றிருந் தார்களென்பது, மொகஞ்சதரோவில் கிடைத்த தொல் பொருள்களால் அறியப்படுகின்றது. பழந்தமிழ் இலக்கியங் கள், பூத்தொழிலுடையனவும், இழைபோன விடந் தெரி யாது நுண்ணிய நூல்களால் நெய்யப்பட்டனவுமாகிய பல வகைப் பட்டாடைகளைப் பற்றிக் கூறுகின்றன. *அக்

* *ஆவியன்ன அவிர் நூற்கலிங்கம் (பெரும்பாண்)*
*புகை விரித்தன்ன பொங்கு துகிலுடீஇ (புறம் 398)*
*நோக்கு நுழைகல்லா நுண்மைய*
*பூக்கனிந் தரவுரியன்ன வறுவை (பொருநர்)*

காலத்து வழங்கிய பலவிதமான ஆடைகளின் பெயர்கள் சிலப்பதிகார உரையிற் காணப்படுகின்றன. அவை :

கோசிகம், பீதகம், பச்சிலே, அரத்தம், நுண்டுகில், சுண்ணம், வடகம், பஞ்சு, இரட்டு, பாடகம், கோங்கலர், கோபம், சித்திரக்கம்மி, குருதி, கரியல், பேடகம், பரியட்டக்காசு, வேதங்கம், புங்கர்க்கழகம், சில்லிகை, தூரியம், பங்கம், தத்தியம், வண்ணடை, கவற்றுமடி, நூல்யாப்பு, திருக்கு, தேவாங்கு, பொன்னெழுத்து, குச்சரி, தேவகிரி, காத்தூலம், இறஞ்சி, வெண்பொத்தி, செம்பொத்தி, பணிப்பொத்தி என்பன.

அக்காலத்தில் பெண்களே வீட்டிலிருந்து ஆடை நெய்தற்கு வேண்டிய நூலே நூற்ருர்கள். அசந்தாக் குகை, இலகங்கையிலுள்ள சிகிரியா முதலிய இடங்களிற் காணப்படும் பழைய ஓவியங்களால் அக்கால மாதர் நிற மூட்டப்பெற்ற அழகிய பட்டாடைகளே உடுத்தார்களென அறிகின்ருேம்.

பொற்கொல்லர் ஆபரணங்கள் செய்வதில் மிகத் திறமை யெய்தியிருந்தனர். அக்காலப் பெண்களும் ஆண்களும் பலவகை ஆபரணங்களே அணிந்திருந்தனர். இரண்டு பக்கமும் யானைகள் தாமரை மலரை நீட்டி நிற்க நடுவே இலக்குமி வீற்றிருப்பதாகச் செய்யப்பட்ட தெய்வவுத்தி, வலம்புரிச் சங்கு வடிவாகச் செய்யப்பட்ட வலம்புரி, அங்காந்தவாளே மீனின் வடிவாகச் செய்யப்பட்ட வாளேப் பகுவாய், பொன்னரி மாலே, பாதசரம், மகரக்குழை, சிறுவரணியும் ஐம்படைத்தாலி, அரசரணியும் வீரதண்டை, முடி, பதக்கம் முதலியவும் இவை போன்றவுமாகிய பலவகை ஆபரணங்களேத் தமிழ்நாட்டுப் பொற்கொல்லரே செய்தனர்.

---

நீலக்கச்சைப் பூவார் ஆடை (புறம்)
கொட்டைக் கரையப் பட்டுடை (பொ-ஆ)
நூலினும் மயிரினும் நுழைநூல் பட்டினும்
பால்வகை தெரியாப் பன்னூறடுக்கத்து
நறுமடி செறிந்த அறுவை (சிலப்)



அக்காலம் போரிற் பயன்படுத்தப்பட்ட வேல், வாள், உடைவாள், சூலம், மழு, சக்கரம், அம்புத்தலே இவை போன்றவற்றையும், நாய் கட்டுஞ் சங்கிலி, யானை கட்டுஞ் சங்கிலி, கொழு, பாரை, கூனிரும்பு, யானைகளின் கொம்பிலிறுக்கும் கிம்புரி, மதிலின் மேல் வைக்கப்படும் பல வகை எந்திரப்பொறிகள் ஆகியவற்றையும் பிறவற்றையும் தமிழ் நாட்டுக் கொல்லரே செய்தனர்.

அரசர் அரண்கனைகளேயும், வீடுகளேயும், புலி சிங்கம் முதலிய வற்றின் கால் போல் திரண்ட கால்களேயுடைய வட்ட வடிவினவாகிய அழகிய அரசர் பள்ளியறைக் கட்டில் களேயும், தேர், சிவிகை, ஓடம், அரசர் வீற்றிருக்கும் சிங்காசனம், உரல், உலக்கை, புலியின் தலே சிங்கத்தின் தலே போன்ற வாள்களின் பிடிகள், கலப்பை ஆகிய வற்றையும் அக்கால மக்களுக்கு வேண்டிய மரத்தாற் செய்யும் பொருள்களேயும் தமிழ் நாட்டுத் தச்சரே செய்தனர்.

வெண்கலம், செம்பு முதலிய உலோகங்களால் பல வகை ஏனங்கள் செய்யப்பட்டன. வெண்கலத்திஞற் செய்யப்பட்ட எருமை, பசு முதலியன சரித்திர காலத்துக்கு முந்திய ஈமத்தாழிகளுட் காணப்பட்டன. அவை சிறந்த வேலேப்பாடுகளோடு கூடியனவாய்க் காணப்படுகின்றன. சங்குகள் அறுத்து அழகிய வளேயல்களாகச் செய்யப்பட்டன. மட்பாண்டம் செய்வதில் இப்போது உள்ளவரினும் முன்னுள்ளவர் மிகத் திறமையுடையர். பளபளப்பான பானே சட்டிகளும், பிணங்களே இட்டுப் புதைக்கும் தாழிகளும் பல வடிவிற் செய்யப்பட்டன. தையற்காரரும், செருப்பு பரிசை முதலியவற்றைச் செய்யும் தோல் வேலே செய்வோரும் இருந்தனர். [1]மாலே கட்டும் கலேயில் தமிழர் சிறப்பாகத் திறமை அடைந்திருந்தனர்.

---

[1] அணியல், அலங்கல், ஒலியல், கண்ணி, கோதை, சரம், நாமம், தார், தெரியல், தொங்கல், படலே, மாலிகை, வாசிகை, இலம்பகம், சூட்டு, கரோடிகை, தொடையல், பிணேயல், கோவை முதலியன மாலேயின் பெயர்கள்.

## சிற்பம்

அரசருடைய கோயில்களையும், மானின் கண் போன்ற சாளரங்களையும் நிலா முற்றங்களையுமுடைய அடுக்கு மாளிகைகளையும், மிகப் பெரிய கோயில்களையும் நிருமித்தவர்கள் தமிழ் நாட்டுச் சிற்பிகளே. மதுரைக் கோயில் மேல்நாட்டவருக்கும் திகைப்பை விளைவிக்கின்றது. தமிழ் நாட்டுச் சிற்பிகள் கோயிற் கட்டிட அமைப்பிலேயே தமது முழுத் திறமையையுங் காட்டியிருக்கின்றனர். அமராவதிச் சிற்பங்களும், மகாபலிபுர மலைக் கோயிலும் தமிழ் நாட்டுச் சிற்பிகளின் திறமைக்கு எடுத்துக்காட்டுகளாகும். தமிழருடைய சிற்பக்கலை தமிழ் நாட்டிலேயே தோன்றி வளர்ச்சி அடைந்தது.[1] தமிழர் தமது சிற்பக் கலைக்கு ஆரியருக்காவது வேறு எவருக்காவது கடமைப்பட்டவர்களல்லர். தமிழர் மதில்களாற் சூழப்பட்ட அழகிய நகரங்களில் வாழ்ந்தார்களென்று இருக்கு வேதம் கூறுகின்றது. பாண்டவருக்கு இந்திரப் பிரத்தத்தில் பளிங்குமா மண்டபத்தைக் கட்டி முடித்தவன் மயன் என்னும் திராவிட சிற்பியே என்று வியாசர் கூறுகின்றார். ஆலயங்களில் வைக்கப்பட்டிருக்கும் பலவகைக் கடவுட் சிலைகள் எல்லாம் தமிழ்ச் சிற்பிகளின் கைவேலைகளே.

[1] From prehistoric times these Dravidians have been the most intellectual civilized and cultured people of India; famed for arts and architecture piety and religions with elaborate rites and symbolism. This they have left for us in monolithic cave temples, carved out of rocky mountains and in the most intractable stone beautiful in design, elaborate and rich decoration with grandeur and yet delicacy. The artists are quite unsurpassed by any race in the world. The people are deep thinkers, powerful rulers and administrators who never permitted any Aryan interference in central or southern India, in its government, religions or occupations, though their upper classes have for some centuries affected a good deal of Sanskrit—*S. S. in the science of Comparative religions—Forlong.*



## ஓவியம்

ஓவியமும் சிற்பமும் ஒன்றோடு ஒன்று நெருங்கிய தொடர்புடையன. நாடக அரங்கில் பயன்படுத்தும் திரைகளும், விதானச் சீலைகளும் பலவகை ஓவியங்களோடு கூடியனவாய் இருந்தன. அரசரின் அரண்மனைச் சுவர்களில் பல நிறங்களோடுகூடிய ஓவியங்கள் எழுதப்பட்டிருந்தன என்று சங்க நூல்கள் கூறுகின்றன.[2] அரண்மனையில் சித்திர மண்டபம் என ஓர் மண்டபம் உண்டு. ஆலயங்களிலும், செல்வருடைய மாளிகைகளிலும் அழகிய ஓவியங்கள் எழுதப்பெறுதல் அக்காலவழக்கு. ஆலயங்களின் கோபுரங்களிற் காணப்படும் பலவகை அழகிய வடிவங்கள் தமிழருடைய ஓவியப் புலமையை விளக்குகின்றன. மொகஞ்சதரோ முத்திரைகளிற் காணப்படும் மனிதர் விலங்குகளின் வடிவங்கள் தமிழரின் 5000 ஆண்டுகளுக்கு முற்பட் ஓவியப் பயிற்சிக்கு உதாரணமாகும். போர்க்கருவிகளாகிய பரிசை முதலியவற்றிலும் ஓவியங்கள் எழுதப்பட்டன. கானப்படமென்பது காடு எழுதிய பரிசை; ஏனப்படமென்பது பன்றி எழுதிய பரிசை.

## வானாராய்ச்சி

தமிழர் வான் ஆராய்ச்சியில் தேர்ந்திருந்தனர். மொகஞ்சதரோ முத்திரைகளிற் கிடைத்த குறிப்புகளால் தமிழர் தொன்மையே வான சாத்திரத்தை நன்கு அறிந்திருந்தனர் எனப் புலனுகின்றது. தமிழர் பெரிதும் கடற்

[2] வேறுபட்ட வினை ஓவத்துவெண் கோயில் (பட்டினப் பாலை)
"...னை சுவர்ப் பாவையன்ன" (நற்றிணை)
"...வத்தன்ன வினைபுனை நல்லிற் பாவையன்ன
...ரா மாண்கவின் (அகம் 98)

பயணஞ் செய்தனர்.[3] பயண காலங்களில் மாலுமிகள் விண்மீன்களையும் திங்களையும் நோக்கித் திசை அறிந்து மரக்கலங்களைச் செலுத்தினர். வானத்தை நோக்கி நேரம் அறிந்துகொள்ளவும் அவர்கள் பயின்றிருந்தனர். சந்திரனது இயக்கத்தைக் கொண்டே அவர்கள் மாதங்களைக் கணக்கிட்டார்கள். மாதத்துக்கு மதி, திங்கள் என்னும் பெயர்கள் வழங்குகின்றன. தமிழ் நாட்டினின்றும் பிரிந்து சென்ற சாலதியர், அக்கேடியர்களும் தமிழர் கொண்ட முறையையே கையாண்டனர். சாலதியர் அக்கேடியரின் உற்பத்தியை அறியாத சரித்திராசிரியர்கள், தமிழர் வானசாத்திரத்தைப் பாபிலோனியரிடமிருந்து கற்றனர் எனக் கூறியிருக்கின்றனர். தமிழ் நிகண்டு நூல்களில் நாள்கோள் முதலியவற்றுக்குப் பல பெயர்கள் காணப்படுதலின், தமிழர் வானசாத்திர அறிவை நீண்ட நாட்களுக்கு முன்னரே உடையராய் இருந்தனர் என்பது விளங்கும். நாள் கோள் முதலியவற்றுக்கு வழங்கிய தமிழ்ப் பெயர்கள் பல மறக்கப்பட்டு விட்டன. அவற்றுக்குப் பதில் வடமொழிப் பெயர்கள் வழங்குகின்றன.

கிர்கங்களின் வலிமையால் மனிதனுக்கு நன்மை தீமைகள் உண்டாகின்றன என்னும் கொள்கை மிகப் பழமையானது. சோதிட அறிவு தமிழ் நாட்டிற் சரித்திர காலத்துக்குமுன் உண்டானது. விண்மீன் எரிந்து விழுவது சில துக்க சம்பவத்துக்கு அறிகுறி என்று கருதப்பட்டது. சூரிய சந்திர கிரணங்களும் சில தீமைகளுக்கு அறிகுறி என்று கருதப்பட்டன. கருப்பமெய்திய பெண்கள் அவற்றை ஒருபோதும் பார்ப்பதில்லை.

[3] உலகு கிளர்ந்தன்ன வுருகெழு வங்கம்
புலவுத்திரைப் பெருங்கட னீரிடை போழ
விரவு மெல்லையு மசைவின் றுகி
விரை செல லியற்கை வங்கூழ் ஆட்டக்
கோடுயர் திணிமண லகன்றுறை நீகான்



தமிழருடைய விழாக்காலங்கள் சூரியனாலேற்படும் பருவ காலங்களையும், சந்திரனாலுண்டாகும் நிலாக்காலங்களையும் பொறுத்தனவாயிருந்தன. சூரியன் சிங்க இராசியிற் புகும்போது அல்லது ஆவணி மாதத்தில் தமிழர்களுடைய புதுவருடம் ஆரம்பமாகி, ஆடியில் முடிவடைந்தது. பங்குனி மாதத்தில் விண்மீனொன்று எரிந்து வீழ்ந்தது என்றும், ஏழாவது நாள் அரசன் இறந்தான் என்றும் கூடலூர் கிழார் புறம் 229-ல் கூறுகின்றார். 'தமிழருடைய வானநூற் கணித முறையே வழக்கிலுள்ள எல்லாக் கணிதங்களிலும் நிதானமானது' என டாக்டர் சிலாட்டர் (Dr. Slater) கூறியிருக்கின்றார்.

தென்னிந்திய பரதவர் சந்திரனுடைய இயக்கத்தைக் கவனித்துப் பழைய காலத்திற் சந்திர மானமாகக் காலத்தை அளந்தனர். சமவெளிகளிற் பயிரிடும் மக்கள் பருவகாலங்களையும், சூரியனுடைய இயக்கத்தையும் கவனித்தனர். பிராமணர்களின் தொடர்பு ஏற்படுவதன் முன் தமிழர் மிகத் திருந்திய வான ஆராய்ச்சி அறிவைப் பெற்றிருந்தனர். 'வியாழன், இராசி வட்டத்தை ஐந்து முறை சுற்றி வருதலாகிய அறுபது வருடங்கொண்ட கால அளவை ஆரியருக்குரியதன்று'[4] என்று மக்லீன் என்னும் ஆசிரியர் கூறுவர்.

மாட வொள்ளெரி மருங்கறிந் தொய்ய
வாள்வினைப் பிரிந்தகாதலர் நாள் பல
கழியாமையே யழிபடரகலவருவர் (அகம் 255)

(இதன் உரை) உலகம் இடம்விட்டுப் பெயர்ந்தாற் போன்ற பெரிய தோணி, புலால்-நாறுகின்ற திரையுடைய பெரிய கடலிடை நீரைக் கிழித்து இரவும் பகலும் சோர்வின்றி, விரைந்து வீசும் இயற்கையுடைய காற்று உதைக்கப்போய் மணற்கும்பம் நிறைந்த பெரிய துறையை மீகாமன் பிடிக்க, வெளிச்ச வீட்டின் ஒளியைக் கண்டு பக்கத்தே தங்கும். இவ்வாறு பொருள் தேடுதற்குச் சென்ற நின் தலைவர் பலநாட்கழியமுன் வருவர்.

[4] Manuel of Administration of the Madras Presidency.

"செஞ்ஞாயிற்றினது வீதியும், அஞ்ஞாயிற்றினது இயக்கமும் அவ்வியக்கத்தாற் சூழப்படும் உலகமும், காற்று இயங்கும் திக்கும், ஓராதாரமுமின்றித் தானே நிற்கின்ற ஆகாயமும் என்று சொல்லப்பட்ட இவற்றை ஆண்டாண்டு போய் அளந்தறிந்தவரைப் போல நாளும் இத் துணையவை உடையனவென்று சொல்லும் கல்வியை யுடையோருமுளர்" என்னும் பொருள்பட வரும் புறம் 30 ஆம் பாடலாலும் பரிபாடலின் பதினோராஞ் செய்யுளாலும் தமிழ் மக்களின் வானியற் புலமையை அறிக. சோதிடர் கணிகள் என அறியப்பட்டார்கள். இவர்களைப் பற்றிப் பழந் தமிழ் இலக்கியங்கள் கூறுகின்றன.

## மருந்து

அரசருடைய உறுதிச் சுற்றத்தாருள் ஒருவர் மருத்துவர். சங்க காலத்துப் புலவர் சிலர் மருத்துவத் தொழிலை மேற் கொண்டனரென்பது மருத்துவன் தாமோதரனார், மருத்துவன் நல்லச்சுதனார் முதலிய பெயர்களால் விளங்கும்.* நாடி பார்த்து நோய் அறிதல், தமிழ் வைத்தியத்தின் சிறந்த இயல்பாகும். தற்காலம் வழங்குகின்ற வைத்திய நூல்களைக் கொண்டு அக்காலத்தில் மருந்துக்கலை மிக வளர்ச்சி அடைந்திருந்தமையை அறியலாம். பதார்த்த குண சிந்தாமணி என்னும் நூல் பிற்காலத்ததாயினும் அது தமிழர் மூலிகைகளின் பயன்களை எவ்வளவு தூரம் ஆராய்ந்து கண்டு பிடித்தார்கள் என்பதை அறிய உதவுகின்றது. சல்லிய கரணி, சந்தான கரணி, சமனியகரணி, மிருது சஞ்சீவினி முதலிய மருந்துகள் மிகச் சிறந்தன என்று

* *நாடி இருதயத் துடிப்பைக் காட்டுகின்றது.*
*சித்தராரூடமென்னும் விடவைத்திய நூல் சீவகசிந்தாமணி உரையில் கூறப்பட்டுள்ளது.*
*மருந்தாகித் தப்பாமரத்தற்றால் (குறள்)*
*மரஞ்சாம் மருந்துகொள்ளார் (பூங்குன்றனார்)*



சிலப்பதிகார உரையிற் சொல்லப்படுகிறது. வள்ளுவனாரும் மருந்து என்னும் ஓர் அதிகாரத்தைத் திருக்குறளுள் வைத் துள்ளார்.

*"நோய்நாடி நோய்முத னாடி யதுதணிக்கும்*
*வாய்நாடி வாய்ப்பச் செயல்"* (குறள்)

(இதன் பொருள்) மருத்துவனாயினான் நோயாளி மாட்டு நிகழ் கின்ற நோயை அதன் குறிகளால் இன்னதென்று துணிந்து பின், அது வருவதற்குக் காரணத்தை ஆராய்ந்து தெளிந்து, பின் அது தீர்க்கும் உபாயத்தினை அறிந்து அதனைச் செய்யும் வழி பிழையாமற் செய்க.

அலெக்சாந்தர் இந்தியாவுக்கு வந்தபோது இந்தியர் மருந்துக் கலையில் மிக முன்னேறி யிருந்ததைக் கண்டு ஆச்சரியப்பட்டார். கிரேக்கர் பாம்புக் கடிக்கு மருந்து அறியாதவர்களாயிருந்தனர். இந்தியர் அதனை எளிதாகக் குணப்படுத்தினார்கள், என்று ஆரியன் (Arrian) என்னும் கிரேக்க ஆசிரியர் (கி. பி. 100) கூறியுள்ளார். அலக்சாந்தர் திறமையுள்ள இந்திய வைத்தியர்களைத் தமக்கருகில் வைத்துக்கொண்டு பாம்பினாற் கடியுண்டவர்கள் அரச மாளிகையில் சிகிச்சை பெறலாம் என விளம்பரஞ் செய் திருந்தார் என்று அவருடைய தளபதியாகிய நீர்ச்சஸ் (Nearchus) என்பவர் கூறி இருக்கின்றார். இது கிறித்துவுக்கு 300 ஆண்டுகளுக்கு முற்பட்ட நிகழ்ச்சி.

## நகர்

நகர், மதிலினாற் சூழப்பட்டிருக்கும். மதிலின் புறத்தே சோலைகளும் ஆலயங்களும் துறவோர் பள்ளிகளும் காணப் படும். நகரின் வாயிலைக் கடந்து செல்லின் அதனைக் காவல் புரிவோர் நெருங்கி உறையும் வீதிகளும், மீன் விலைஞரும், உப்பு வாணிகரும், கள், பிட்டு, அப்பம்,

வாசனைப் பண்டம், இறைச்சி விற்போர் வாழ்கின்ற வீதிகளும் தோன்றும். இவ்வீதிகளை அடுத்து மட்கலஞ் செய்யும் குயவரும், செம்பு வேலை செய்வோர், வெண்கலக்கன்னர், பொற்கொல்லர், தச்சர், மட்பாவை செய்வோர், தையற்காரர், மாலை கட்டுவோர், சோதிடர், பாணர் முதலியோர் தெருக்களும், சங்கறுப்போர் இரத்தினப் பணியாளர் வீதிகளும், நாடகக் கணிகையர் வீதியும், நெல்லுப் புல்லு முதலிய கூலவகை விற்போர் தெருவும், சூதர், மாகதர், வைதாளிகர், பொதுமகளிர் தெருக்களும், ஆடை நெய்து விற்போர், பொன் வாணிகர், இரத்தின வியாபாரிகள் வீதிகளும், அந்தணர் அக்கிராகாரமும், இராச வீதியும், மந்திரிகள் வீதியும், பல்வகை அரசாங்க அதிகாரிகள் வாழும் தெருக்களும் அமைந்திருக்கும். இவையேயன்றி யாவரும் வந்து தங்குவதற்குரிய மரத்தடியும், அம்பலமும், முச்சந்திகளும் அருவியோடும் அழகிய செய்குன்றுகளும் விளங்கும். இவற்றின் மத்தியில் அரசனுடைய அரண்மனை, பொன் மயமான மேருவைப்போல் விளங்கும். அரண்மனையை வட்டமான மதில் சூழ்ந்திருக்கும். மதில், கோபுரத்தோடு கூடியது. மதிலின் உட்புறத்தே பொய்யாகிய பூமியும், ஏந்திர வாவியும் இளமரச் சோலையும் அந் தப்புர மகளிர் இருக்குமிடமும், ஆயுத சாலையும் தானியக் களஞ்சியங்களும், நடந்து செல்லும் பெரிய வாயில்களும், நுழைந்து செல்லும் குறுகிய வாயில்களும், சபை கூடும் மண்டபமும், நடன சாலைகளும், தேவாலயங்களும், குதிரைப் பந்தியும், யானைப் பந்தியும், படை தங்குமிடமும் மயில் விளையாடும் வெண்ணிறச் செய்குன்றும் இருட்டறையும் காணப்படும்.*

## கோட்டை

நகரைச் சூழ்ந்து மதிலும், மதிலைச் சூழ்ந்து வெள்ளிடை (மணல் பரந்த) நிலமும், வெள்ளிடை நிலத்தைச் சூழ்ந்து

* உதயணன் கதை.



அகழும், அகழைச் சூழ்ந்து மலையும், மலையைச் சூழ்ந்து காவற் காடும் அரண் செய்யும். மதில், செங்கட்டி சுண்ணும்பு முதலியவற்ருல் எடுக்கப்பெற்று, ஏணிக்கு எட்டாத உயரமும், பகைவர் தகர்க்க முடியாத திண்மையும், அகத்துள்ளார் மேலே நின்று போர் செய்யக்கூடிய அகலமுமுடையதாயிருக்கும். பெரும்பாலும் அது நாலு குதிரை பூட்டிய தேர்கள் போகவும் வரவுங்கூடிய அகலமுடையதா யிருக்கும். பழைய அசீரியர் பாபிலோனியருடைய கோட்டைகள் இவ்வாறிருந்தன. மதிலைச் சுற்றிப் பல வாயில்களும் கோபுரங்களும் இருந்தன. வாயில்களின் நிலைகள், பல வயிர மரங்களை ஒன்று சேர்த்துச் செய்யப்பட்டன. கதவுகள், இரும்பு அள்ளுகளினுற் பலப்பித்து, இரண்டாகச் செய்யப்பட்டன. அவை திரண்ட மரங்களால் உள்ளே தாளிடப்பட்டன. வீரர் மறைந்திருந்து அம்பெய்தற்குரிய பதுக்கிடங்கள் பல, மதிலைச் சூழ இருந்தன. பகைவர்மீது கல்லை வீசுவனவும், உலோகங்களை உருக்கிச் சொரிவனவும், கொதி எண்ணெயை இறைப்பனவும் நெருப்பைக் கொட்டுவனவும், அம்புகளை எய்வனவுமாகிய பலவகைப் பொறிகள் மதிலின்மேல் வைக்கப்பட்டிருந்தன. மதிலைச் சூழ்ந்த வெள்ளிடை நிலம் பகைவர் நின்று பொருதற்கரிதாய் வெப்பமுடையதாய் இருக்கும். இரும்பினுற் செய்யப்பட்ட யானை நெருஞ்சி (கப்பணம்) அதனிடத்தே பரப்பப் பட்டிருக்கும். இதனை அடுத்துள்ள அகழ், மிக ஆழமும் அகலமுமுடையதாயிருக்கும். மிக்க ஆழம் உடைமையின் நீர், நீல மணிபோன்ற தோற்றமுடையதாயிருக்கும். சில அகழ்கள் 40 அடி ஆழமுடையனவாயிருந்தன என்று சில பழைய சாசனங்களிற் காணப்படுகின்றது. அதனகத்தே பெரிய முதலைகளும் ஆனை விழுங்கும் பெரிய மீன்களும் வாழும். நகரில் பெருகும் கழிவு நீரெல்லாம் கற்படை (மதகு) வாயிலாக வந்து இவ்வகழிலே விழும். கோட்டை வாயிலினின்றும் வெளியே செல்வதற்கு

இவ்வகழ்மீது பலகை போடப்பட்டிருக்கும். போர்க்காலங்களில் இப்பலகை அகற்றப்படும். அகழின் புறத்தே உள்ள காவற்காடு முள்மரங்கள் பல உடையதாயிருக்கும். அதன் இடையிடையே வாள், இரும்பு முள் முதலியன பதிக்கப் பெற்றிருக்கும். அதனைக் காவல் செய்யும் வேட்டுவர் அரண்கள் அவ்விடத்துண்டு. அகழின் புறத்தே இயற்கையான மலை இல்லையாயின் செயற்கையான மலைகளை அமைத்தல் இயல்பு. மலை, வெள்ளிடை நிலம் முதலியன இல்லாத அரண்களுமுண்டு. மதிலின் அகத்தினின்றும் வெளியே செல்லும் கள்ளவழியாகிய சுருங்கைகள் பல உண்டு. மதிலின் வாயிலில் பந்தும், பாவையும் தூக்குவதும் அக்காலவழக்கு. இது, பகைவர்களைப் பெண்களென்று எள்ளுதற்கு அறிகுறியாகும்.

திருவள்ளுவர் அரணின் தன்மையைத் திருக்குறளில் நன்கு விளக்கியுள்ளார். அது வருமாறு :

மணிபோன்ற நீரும், வெள்ளிடை நிலமும் மலையும் குளிர்ந்த நிழலையுடைய காடும், ஏணி எய்தாத உயரமும் புறத்தார்க்கு அகழலாகா அடி அகலமும், புறத்தோரை எதிர்த்து நின்று போர் செய்ய இயலும் தலை அகலமும், செங்கட்டி, கல் முதலியவற்றாற்செய்தமையின் தகர்க்கலாகாத [1]திண்மையும் உடைய மதில் உடையது சிறந்த அரண் எனப்படும். அது, காக்கவேண்டிய இடம் சிறிதாயும், உள்ளே அகன்ற இடமுடையதாயும், அகத்தார் புறத்தார் மேல் அம்பு முதலியவற்றைச் செலுத்திப் போர் செய்தற்கு ஏற்ற தன்மை யுடையதாயும், அகத்தோர்க்கு வேண்டும் பொருள் எல்லாவற்றையும் உள்ளே உடையதாயும், புறத்தோரால் மதில் அழிவெய்தும் எல்லைக்கண் பகைவர்

[1] செம்பு புனைந்தியற்றிய சேணெடும் புரிசை (புறம்)



முகத்து எய்தா வகைகாக்க வல்ல [2]நல்லவீரரை யுடையதாயுமிருக்கும். அது, வீரர் உள்ளிருந்து வெளியே செல்லாவாறும், வெளியேயிருந்து உள்ளே புகாவாறும் நெருங்கிச் சூழ்ந்து முற்றுகை இட்டும், அங்ஙனம் சூழாது நெகிழ்ந்த விடம் நோக்கி ஒருமுகமாகப் போர் செய்தும், துணிவுடையோரை ஏவிக் கதவினைத் திறந்தும் (பகைவர்) அகத்தோரைக் கொள்ளுதற் கரிதாயிருக்கும். படைப் பெருமை வல்லவராய் வந்து சூழ்ந்த புறத்தோரை, அகத்தோர், தாம் பற்றிய இடம் விடாது நின்று பொருது வெல்லத் தக்கதும், அகத்தோர் செய்யும் தொழில் வேறு பட்டால் வீறுபெற்றுப் புறத்தோர் அறியாமற் புகுதல் போதல் செய்தற்குச் சுருங்கை வழி முதலியவுடையதும் சிறந்த அரணாகக் கருதப்படும்.

## முடிவுரை

இற்றைக்கு ஐயாயிரம் ஆண்டுகளின் முன்னரே தமிழ் மக்கள் எகிப்தியர், பாபிலோனியர்களைவிட உயர்ந்த நாகரிகம் எய்தியிருந்தார்கள் என்பதை மொகஞ்சதரோப் புதைபொருள் ஆராய்ச்சி வெளியிடுகின்றது. அக்கால நாகரிகம் கற்கால இறுதியிலும் உலோககாலத் தொடக்கத்திலும் உள்ளதாயினும், அது சங்ககால நாகரிகத்துக்கும் இன்றைய மக்களின் நாகரிகத்துக்கும் எவ்வாற்றுனும் தாழ்ந்தன்று. மொகஞ்சதரோப் புதைபொருள் ஆராய்ச்சியும் சங்க நூல் ஆராய்ச்சியும் வெளியிடுவது தமிழ்மக்கள் ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன்பிருந்தே வீழ்நிலை அடை

[2] "கலிமா ணேயே கலிமா ணேயே
நாகத் தன்ன நன்னெடுந் தடக்கைக்
காய் சின யானைக் கலிமா ணேயே
வெள்ளத் தானையும் வேந்தொப் பான்முன்
உள்ளழித்துப் புகேஎனுயினுள்ள
தோற்போன் சிறுமை யானுறுகவ்வே (தகடூர்யா)

யாது நாகரிக ஏற்றமுடையவர்களாய் வந்திருக்கிருர்கள் என்பதேயாகும். ஆனமையினுலேயே ஆரியர் கலப்பினுலும் தமிழர் நாகரிகம், மொழி ஆதியன சிதைவுபடவில்லை. இவர்களுடன் கலக்க நேர்ந்த ஆரியர், தாமும் இவர்களின் கலைகளையும், ஒழுக்கங்களையும், வழிபாட்டு முறைகளையும் பின்பற்றுவா ராயினர்.[1]

---

[1] This doctrine of the Aryan origin of the Indian civilization which finds no support in Indian literature, which does not consider the Dasyus as uncivilized, is the result of the theories of 'Indo-Germanic' scholars who held that everthing valuable in the world originated from the Aryans. Not only is Indian civilization pre-Vedic but the essential features of Hindu religion as we know is today were present in Mohenjodaro. "There is enough in fragments we have recovered" says Sir John Marshall about the religious articles found in the sites, "to demonstrate that......this religion of the Indus people was the lineal progenitor of Hinduism." In fact Siva and Kali the worship of Lingam and other features of popular Hinduism were well established in India long before the Aryans came.

—*A survey of Indian history - p. 5—K. M. Pannikkar.*

# 6. தமிழர் ஆரியர் கலப்பு

## இப்பொருளுரையின் வரலாறு

இப்பொருள் பற்றிய கட்டுரை இற்றைக்கு ஐம்பது ஆண்டுகளின் முன் பண்டிதர் சவரிராய பிள்ளை அவர்களால் ஆங்கிலத்தில் எழுதப்பெற்று சித்தாந்த தீபிகை என்னும் திங்கள் வெளியீட்டின் நாலாம் ஐந்தாம் புத்தகங்களில் வெளிவந்துள்ளது. இத்துணை ஆண்டுகளுக்குமுன் எழுதப் பட்டபோதும் அக்கட்டுரை புதுமையும் ஆராய்ச்சி நுட்பமும் பெற்று மிளிர்கின்றது. அது தமிழர் வரலாற்றில் மயக்கத்தைக் கொடுக்கும் பலவற்றுக்கு விடையளிப்பதாகவும், விந்தத்துக்கு வடக்கே உள்ள தமிழரின் வரலாற்றைக் கூறுவதாகவுமிருக்கின்றது. அக்கட்டுரை இதுவரை புத்தக வடிவில் வெளிவராமையாலும், சித்தாந்த தீபிகையின் பழைய இதழ்களைத் தேடிப் பெறுதல் அரிதினு மரிதா யிருப்பதினுலும் அவ்வரிய கட்டுரையை ஆராய்ச்சியாளர் படித்து மகிழ்தல் அரிதாயிருக்கின்றது. தமிழர் சரித்திரத்தை நிறைவாக விளங்கிக்கொள்வதற்கு அக் கட்டுரை இன்றி அமையாததா யிருக்கின்றமையின் அதனைச் சுருக்கித் தமிழில் தருகின்றேம்.

ஆசிரியர் கட்டுரை எழுதுகின்ற காலத்தில் மொகஞ்சதரோ, அரப்பா, நால் முதலிய விடங்களின் புதை பொருள்கள் அகப்படவில்லை. தமிழருக்கும் அசீரியர் பாபிலோனியர் சுமேரியருக்கு மிடையிலுள்ள தொடர்பைக் கவனித்த ஆசிரியர், சுமேரியரே தமிழ்நாட்டில் வந்து குடியேறினர் எனத், தமது கட்டுரையிற் கூறி இருக்கின்ருர். சமீப காலத்திற் கிடைத்த பல ஆதாரங்களைக் கொண்டு

---

[1] *Admixture of Aryan with* Tamilians - Light of truth, Vols. 4 & 5.

தமிழரே சுமேரியாவுக்குச் சென்று குடியேறினர் என்னும் கொள்கை நாட்டப்பட்டுள்ளது. தமிழர் சுமேரியா வினின்றும் வந்தவர்கள் என்று பொருள்பட வரும் பகுதிகளை யாம் மாற்றி எழுதியுள்ளோம்.

"சுமேரியர், சுமேரியாவின் பூர்வகுடிகளல்லர் என்றும் அவர்கள் புதிதாகக் கிழக்குத் திசையினின்று வந்து அங்கு குடியேறியவர்கள் என்றும் சரித்திராசிரியர்களின் சரித்திரம் என்னும் நூல் கூறுகின்றது. டாக்டர் ஹால் (Dr. Hall) என்னும் ஆசிரியர், சுமேரியர் சிந்து நாட்டினின்றும் பாபிலோனுக்குச் சென்றவர்களாகக் காணப்படுகின்றனர் என்று கிட்டிய கிழக்குத்தேசங்களின் பழைய வரலாறு, என்னும் நூலிற் கூறியிருக்கின்றனர்*. [1]பாபிலோனியர் அசீரியர் என்னும் சாதியார்களும் கிழக்குத் தேசங்களினின்றும் சென்று கி. மு. 5000 ஆண்டுகளுக்கு முன் மேற்கு ஆசியா-வில் குடியேறினவர்களே என்று சரித்திர அறிஞர் கூறு கின்றனர்.

சுமேரியர் என்போர் சிந்து நதியை அடுத்த நாடுகளி னின்று சென்றவர்கள் ஆவர் எனக் கருதப்படுகின்றனர். சிந்துநதிதீர மக்கள் அக்காலத்தில் 'குதிரையைப்பற்றி அறியார்கள்' எனச் சரித்திர ஆசிரியர்கள் கூறுவது உண்மையாகலாம். சங்க இலக்கியங்கள் கழுதைகளில் ஆட்கள் ஏறிச் செல்வதைப் பற்றிக் கூறுகின்றது.[2] கோவேறு கழுதை என்னும் பெயரால் மிகப் பழைய காலத் தில் அரசரும் கழுதையில் ஏறிச் சென்றார்கள் எனக் கருத இடமுண்டு.

* *The ancient history of the near East, pp. 173-4.*

[1] Havell என்னும் *ஆசிரியர் இந்தியாவில் ஆரியரின் ஆட்சி என்னும் நூலில்* (ப. 50) *சுமேரியர் இந்தியாவினின்றும் சென்ற திராவிடர் எனக் கூறியுள்ளார்.*

[2] *கொடுநுக நுழைந்த கடுத்தா ளத்திரி* (அகம் 350)



இத் தருணத்தில் எகிப்தியர் பினீசியர்களின் உற் பத்தியைக் குறித்துச் சரித்திர நிபுணர்கள் கொண்டுள்ள கருத்தையும் குறிப்பிடுகின்றோம். $பிளின்டேர்ஸ் பெற்றி என்னும் பேராசிரியர் எகிப்தியரும் பினீசியரும் ஒரே உற் பத்தியைச் சேர்ந்தவர்கள் என்றும் அவர்கள் பண்டு நாட்டி னின்றும் சென்று குடியேறியவர்கள் என்றும் சாதித்திருக் கின்றார். ஹீரென் என்னும் ஆசிரியர், எகிப்தியர் தமிழர் களுடைய மண்டை ஓட்டின் அளவு ஒரே அளவாயிருத் தலைக்காட்டி, எகிப்தியரின் இந்திய உற்பத்தியை நாட்டி யிருக்கின்றார்.[1] "பண்டு என்பது பாண்டிய நாடன்றி வேறு இடமன்று" என டாக்டர் அபினஸ் சந்திரதாஸ் என்னும் ஆசிரியர் இருக்குவேத இந்தியா என்னும் நூலிற் தாபித்திருக் கின்றார்.[2] பண்டு என்னும் நாடு, மலைகளும் பள்ளத்தாக்கு களும், கருங்காலி, வாசனை மரங்கள், தெங்கு, வாசனைப் பொருள்கள், சிறுத்தை, புலி, நாய்த்தலைக் குரங்கு, நீண்ட வால் மந்தி, விசித்திரமான பட்சிகள், கோயில்கள் நிறைந்த நாடு எனக் கருதப்பட்டது.[3] 'பண்டு' என்பது அராபியாவுக்

$ One of the most recent authorities, Prof. Flinders Petrie, inclines to the opinion that the Egyptians were of common origin with the Phoenicians, and that they have come into the Nile region from the land of Punt, across the Red Sea—*H. H. of the World, Vol. I, p. 77.*

[1] Among the earlier students of the subject, Heeren was prominent in pointing out an alleged analogy between the form of skull of the Egyptian and that of the Indian origin of the Egyptians.—*Ibid. p. 7.*

[2] This part of India could have been no other than the Malabar coast peopled by the Pandyas which was probably called the land of the Pandias afterwards corrupted in Egypt into the land of Punt—*Rig Vedic India—Dr. Abinas Chandra Das.*

குச் சமீபத்திலுள்ள சோமாலிலந்து என்று கருதப்பட்டது. எகிப்தியருக்கும் தமிழருக்கும் பழைய வாணிகத் தொடர்பு இருந்ததோடு இருசாரார்களின் பழக்க வழக்கம் தோற்றம் ஆதியனவும் ஒத்திருத்தலின் **பண்டு** என்பது தென்னிந்தியாவிலுள்ள பாண்டி நாடு ஆகும் என்பது தெளிவாகின்றது.

## தமிழர் ஆரியர் கலப்பு

ஆரிய நாட்டினின்றும் வந்த இடம் பெயர்ந்து திரியும் ஒரு கூட்டத்தினர் இற்றைக்கு நாலாயிரம் ஆண்டுகளின் முன் சிந்துநதிக்கரையிற் குடியேறினர். ஆரியர் என்னும் சொல்லுக்குப் பிரபுத்தனம் என்னும் பொருள் பிற்காலத்திற் கொடுக்கப்பட்டதாயினும், அதற்கு அவர் மொழியில் மிலேச்சர் என்பதே பொருளாகும். இப்புதிய மக்கள் எங்கிருந்து வந்தார்கள்? இப்பாரத பூமியிலுள்ள ஒவ்வொரு உயிருள்ள பிராணியும் இப்பூமிக்கே சொந்தமானது என்று நமது முன்னோர் நம்பினர். மொழி ஆராய்ச்சியால் ஒவ்வொரு மனிதக் கூட்டத்தின் உற்பத்தித் தானத்தையும் அறிந்து கொள்ளுதல் இலகுவாயிருக்கின்றது. ஒரு சாதியாரின் சரித்திரத் தொடர்பும், சரித்திரத்திற்குரிய ஆதாரமும் எங்கு நின்று விடுகின்றனவோ அவ்விடத்து, மொழி

[3] Under the name of Punt, the ancient inhabitants of Kamat understood a distant country, washed by the great sea full of valleys and hills rich in ebony and other valuable woods in incense balsam, precious metals and stones, rich also in animals, for there are camelopards, cheetas, panthers dogheaded apes and long tailed monkeys. Winged creatures with strange feathers flew up to the boughs of wonderful trees, specially of the incense tree and the cocoanut palm. According to the old dim legend, the land of Punt was the primeval dwelling of the Gods.—*H. H. of the World, Vol. 1, p. 108.*



சரித்திரத்துக்கு முற்பட்ட அவர் வரலாற்றையும், பிரிவதற்கு முன் அவர் வாழ்ந்த பொது இடத்தையும் அறிவிக்கின்றது.

சிந்து ஆற்றங்கரையிற் புதிதாக வந்து குடியேறிய புதிய மக்களின் மொழி பற்றிய ஆராய்ச்சி, அவர்களின் உற்பத்தியைப் பாரத பூமிக்கு அப்பால் கஸ்பியன், ஆரல் கடல்களை அடுத்த நாடுகளுக்குக் கொண்டுபோய் நம்மை விடுகின்றது. ஆரற் கடலோடு ஒருகாலத்து இணைக்கப்பட்டுக் கிடந்த கஸ்பியன் கடலும் தெற்கே கிடந்த வனுந்தரமும் இம்மக்களை நாகரிகத்தில் முதிர்ந்த பாபிலோனியரோடு கலந்து கொள்ளாதபடி தடுத்தன. தமது நாட்டினின்றும் கிளம்பிய ஒரு கூட்டத்தினர் நீண்டகாலம் தென் கிழக்காக அலைந்து திரிந்தனர். பின் தெற்கு நோக்கிச் சென்று சிந்து நதியின் மேற்குக் கரையிற் குடியேறினர். ஆரியர் சிந்துநதி தீரத்தில் வந்து கி. மு. இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் குடியேறினார்களென்பது மேல் நாட்டு ஆசிரியர்களுடைய கொள்கை.

ஆரியர் சிந்து ஆற்றங்கரையில் வந்து முதன் முதல் குடியேறும்போது குமரிமுதல் இமயம்வரை நாகரிகத்தில் முதிர்ந்த ஒரே இன மக்கள் குடியேறியிருந்தார்கள்[1]. பரதர் என்னும் இப் பூர்வசாதியார் குடியேறி இருந்தமையின் இந்நாடு பாரத வருடம் என்னும் பெயர் பெற்றது என்று விட்டுணு புராணம் கூறுகின்றது. இந்தியா முழுமையும் பரதர்வசம் இருந்தது. பரதர் என்னும் சொல், உச்சரிப்பு வேறுபட்டால் பிற்காலத்துப் பல மாறுதல்களடைந்தது. இந்துஸ்தானத்தில் இருந்தோர் கோடர்

[1] When the Aryans passed the Afghan passes, India was inhabited by a dark short statured, but civilized race called the Dravidians. These Dravidians had extensive commercial relations with Babylon, Phoenicia and the countries beyond the Arabian sea—*Outline of economical History of India, p. 8—M. P. Lohana.*

என்றும் தக்கணத்தில் வாழ்ந்தோர் திராவிடர் என்றும் அழைக்கப் பட்டனர்.

பரதவர் என்னும் பெயர் மலேயைக் குறிக்கும் [1]பார் என்னுமடியாகப் பிறந்ததென்பர் டாக்டர் ஒப்பேட் அவர்கள். பார் என்பதின் ஆதிப் பொருள் மலே என்பதை ஒத்துக் கொள்ளவேண்டி யிருக்கின்றது. தமிழருடைய ஆதி இடம் மலேயாகவே இருந்தது. பழைய தமிழ்நாட்டு அரசனுக்குச் சிறப்பாக ஒரு மலே உரியதாயிருந்தது. இது, அவனுடைய முன்ஞேர், மலேயிலுள்ளவர்கள் என்பதை ஞாபகப்படுத்துகின்றது. தமிழ்க் கடவுளாகிய முருகனது இருப்பிடங்கள் மலேகளாகக் காணப்படுகின்றன. அக் கடவுள் மலே உச்சிகளில் வணங்கப்படுகின்ருர். தமிழ் மக்களின் காதல், அரசியல்களேக் கூறும் அகப்பொருள் புறப்பொருள் நூல்கள் அவர்களுடைய பழைய பழக்க வழக்கங்களே விரித்துக் கூறுகின்றன. தலேவனும் தலேவி யும் சந்தித்துக் காதலிக்கும் காட்சி மலேயிடமாகவிருந்தது. போரின் ஆரம்பாகிய நிரைகவர்தலும் மலேயை அடுத்த நிலங்களில் நிகழ்ந்தது. இவையிற்ருல் தமிழரின் உற்பத்தி, ஏதோ மலேயிடமென்று தெளிவாகின்றது. தமிழர் தமது உற்பத்தித் தானத்திலல்லாமல் குடியேறிய நாட்டிலும் சலப்பிரளயம் சம்பந்தமாகவும் மலேயையே கொண்டனர். மனு என்னும் திராவிட அரசனின் பேழை மலேயக்குன்றில் தங்கியதென்றும், அவர் பேழையை விட்டிறங்கி மலேயத்தின் ஓர் இடத்தில் மக்களின் நன்மைக்காகக் கடுந்தவஞ் செய்தார் என்றும் மச்ச புராணம் கூறுகின்றது. முற்காலத்தவர் பல காரணங்களே முன்னிட்டு மலேகளேயும் உயர்ந்த இடங்களேயும் வாழும் இடங்களாகக் கொண்டனர்.

சமவெளிகள் அங்குமிங்கும் மக்களாற் குடியேறப் பெற்றிருந்தபோதும் பயமின்றி வாழக்கூடிய இடம் மலேயே. ஆரியர் அல்லாத எல்லாச் சாதியாரும் துரானிய வகுப்

[1] பரவை என்பதிலிருந்து பரதவர் என்னும் பெயர் வந்ததெனக் கூறப்படுவதுமுண்டு.



பைச் சேர்ந்தவர்கள் என்றும், அவர்களின் உற்பத்தி அத்லாந்திக் மலேகள் என்றும் ஒரு காலத்தில் கருதப் பட்டது. டாக்டர் கல்ட் வேல், "திராவிடர் துரானிய வகுப் பினர்; அவர்கள் மத்திய ஆசியாவினின்றும் தெற்கே வந்து இந்துஸ்தானத்திற் குடியேறினர்கள்; அவர்கள் ஆரியரால் வென்று தெற்கே துரத்தப்பட்டார்கள்; அவர் களே தென்னிந்தியாவிற் காணப்படும் தமிழர்" என்று கூறியுள்ளார். இக் கொள்கையைச் சாதிப்பதற்கு அடிப் படை ஆதாரம் எதுவுமில்லே.

தென்னிந்திய மாறவமிசமும், வட இந்திய பரதவமிசமும் ஒரே காலத்தில் இருந்தன. மாறவமிசம் பரதவமிசத் துக்கு முற்பட்டதெனக் கூறலாம். தமிழரின் உற்பத்தி இடம் மத்திய ஆசியாவன்று இந்திய நாடே.[1]

ஈலத்திலுள்ள பழைய அக்கேடியரோடும் சாலடியரோடும் ஒற்றுமையுடைய தமிழர், உலகில் முதற்கண் சீர்திருத்தமுற்ற சாதியாராவர். அக்கேடியர், சாலடியரின் கி. மு. 4000 ஆண்டுகளுக்கு அப்பாற்பட்ட இலக்கியங்கள் சிறிது சிறிதாக வெளிவருகின்றன. அவற்றுட் பல இன்றும் நிலத்துட் புதைந்து கிடக்கின்றன. இத்தாலி நாட்டுப் பழைய எற்ருஸ்கானியரும், கங்கேரிய மக்களும், பின்லாந்திற் பின்னியரும் கிழக்குத் தேசத் தமிழரின் பிரிவினராவர்.

[1] தமிழரே சிந்து நாட்டினின்றும் பாரசீகம் வழியாகவும், கடல் வழியாகவும் சென்று பாபிலோனிற் குடியேறினர்கள். பல வேறு காலங்களில் தமிழர் சுமேரியாவிலும், சுமேரியர் தமிழ் நாட்டிலும் சென்று குடியேறுவாராயினர். மிகப் பழங்காலத்தில் இந்தியா முதல் பாரசீகம், மேற்கு ஆசியா, எகிப்து வரை ஒரே மொழி, ஒரே சமயம், ஒரே பண்பாடு உள்ள மக்கள் வாழ்ந்தார்களென்றும் அங்கிருந்து இங்கும் இங்கிருந்து அங்கும் மக்கள் போக்குவரவு செய்தார்களென்றும் அண்மையில் சில ஆராய்ச்சியாளர் கூறியுள்ளனர்.

எகிப்தியர், தெற்கே வாழ்ந்த தமிழர்களாகிய பரதரைப்[2] பாண்டு என்று அழைத்தனர். பரதர் வாழ்ந்த பாண்டுநாடு மிகப் பரிசுத்த முடையதாக எகிப்தியரால் மதிக்கப்பட்டது.

சிந்துநதியின் மேற்குக் கரையில் ஆதியில் வந்து குடியேறிய ஆரியர், பாரதநாடு சீர்திருத்தமடைந்திருப்பதையும், அது வலிய அரசரால் நன்கு ஆளப்படுவதையும் கண்டனர். [3] இருக்குவேத பாடல்கள் அவர்களுடைய தொண்ணூறு கோட்டைகளையும் ஏழு வலிய அரண்களையும் பற்றிக் கூறுகின்றன. இவை பஞ்சாப்பில் இருந்தனவாகலாம்.[3]

ஆரியர் வருகைக்கு முற்பட்ட இந்திய அரசர், பரதர் எனப்பட்டனர். இருபது அரசரை உடைய இப்பரம்பரை ஐந்து நூற்றுண்டுகளாவது ஆட்சிபுரிந்து ஆரியர் வருகைக்கு முன் வீழ்ச்சி அடைந்திருக்க வேண்டும். இவர்களுக்குப் பின் இன்னொரு சந்ததியார் ஆண்டனர். இவர்களை ஆரியர் அசுரர் என்றழைத்தனர். அசுரர் என்பதற்கு இறைவன் என்பது பொருள். இது அரசு என்னும் தமிழ்ச் சொல்லின் உச்சரிப்பு வேறுபாடு எனக்கருத இட

[2] Punt has always been remarked and it has been assumed that Ophir was Punt and it is to be sought on the African Somali coast. Among the products of Ophir however there are certain things mentioned such as the apes and the pea-cocks, for instance, which are certainly Indian so that it is quite probable that Ophir is really the Konkan or Cochin Coast that Solomon's Phoenician sailors reached—*An ancient hisory of the near East, p. 424, R. H. Hall.*

[3] The Rigveda always refers to the forts and the clans of the Dasas ; Sambara is said to have been in possession of ninety, ninety nine and hundred forts whose strongholds are referred to as of metal walls or citadels of stone or mudbricks are mentioned. These citadels are the same as those found at Harappa. In the later period Asuras like



முண்டு. இருக்கு வேதத்தில் அசுரர் என்னுஞ் சொல் பெருமை அல்லது வலிமை என்னும் பண்பைக் குறிக்கின்றது; இருக்குவேதத்தின் பத்தாம் மண்டலத்தைத் தவிர ஏனைய இடங்களிலெல்லாம் கடவுளைக் குறிக்கப் பயன்படுத்தப் பட்டிருக்கிறது. இவ்வுண்மையைத் தத்தர் பண்டைக்கால இந்தியா என்னும் நூலின் 201-ஆம் பக்கத்தில் விளக்கியிருக்கின்றார். பிராமணங்களில் இச்சொல்வேறு பொருளில் ஆளப்பட்டிருக்கின்றது. அங்கு கடவுளின் பகைவரைக் குறிப்பதற்கு அது பயன்படுத்தப்பட்டுள்ளது.[1]

சமஸ்கிருதத்தில் அரசனைக் குறிக்கும் ராயன் என்னும் சொல் அரசு என்னும் சொல்லின் உச்சரிப்பு வேறுபாடு. அரசன் என்பதற்குச் சமமான சமஸ்கிருத பதம் பதி. இது விஸ்பதி (இராயனல்லாதவன்) என இவ்வாறு வரும் சொற்களால் அறியப்படும். தமிழ் இறை, உச்சரிப்பு முறையில், எகிப்திய 'றெ' என்னும் சொல்லாகிச் சூரியனைக் குறிக்கும். 'றெ' என்னுஞ் சொல்லோடு உரோமானிய-

Jarasandha, Bali. and others are described to have ruled the major provinces of India—*Religions of India-p 10-A, P. Karmakar.*

[1] God Varuna was himself an Asura. Mr. Banerji believes that the Asuras were different from Dasus but identical with Dravidians. The Dasus he points out were black, while Asuras were brown or rather golden. This synthesis he points out in the adoption of the cult of Siva which was the cult as a part of Vedic system of worship. Varuna and other Asura gods were incorporated into the Vedic Pantheon and the gods of the Asuras and the Gods of the trtsus became one. A social amalgamation came into existence with fruitful results. The Asuras and gods were made sons of the same Father God. Many Vedic kings and Rishis came to have Asura Blood as indicated by the colour. Sages like Vashita, Agastya and Visvamitra were given the same father Mitra-Varuna. Asura in Aryan means supreme God. —*Pre-Musalman India,-pp. 172, 174, 177-V. Rangacharya, M.A.*

ருடைய 'றெக்ஸ்' 'ரேய்' என்னும் சொற்கள் ஒற்றுமையுடையன. உரோமனியருடைய 'றெ' என்பதை மூலமாகக் கொண்டு இச்சொற்கள் பொது உற்பத்திக்குரியன என்று துணிந்து கூறலாம்.

சிந்துநதி தீரத்திற் குடியேறினோர் படையெடுத்து வந்தோரல்லர். அவர்கள் ஆடுமாடுகளுடன் புற்றரைகளை நாடி அலைத்து திரிந்த சாந்தமானவர்களே. விருந்தினரை வரவேற்று ஓம்புவது தமிழரின் இயற்கைப் பண்பு. அரசர், அன்னியருக்கு அன்பும் தயையுங் காட்டினர். பயிரிடாது விடு நிலமாய்க் கிடந்த நிலங்களைத் திருத்திப் பயிரிடுமாறு புதிய மக்கள் அனுமதிக்கப்பட்டனர். புதிதாக வந்தவர்களுக்கும் ஆட்சியாளருக்கு மிடையில் போர்கள் நிகழ்ந்தன. ஆரியருடன் போர்புரிந்தவர்கள் இருக்கு வேதத்தில் தாசுக்கள் என்றழைக்கப்படுகின்றனர். தாசுக்கள் என்பதற்குச் சத்துராதிகள் என்பது பொருள். வேத பாடல்கள் இவர்களை மூக்கில்லாதவர்கள், கடவுள் இல்லாதவர்கள் என்று கூறுகின்றன.

தத்தர் புதிதாக ஒன்றையும் ஆராய்ந்து கூறாது ஐரோப்பிய வரலாற்றாசிரியர்கள் எழுதியவற்றையே திரட்டி அழகிய நடையில் எழுதி யிருக்கின்றார்; ஆரியப் பிராமணருக்கு ஞானம் போதித்த இராசாயனர், பகவத் கீதையின் ஆசிரியராகிய கண்ணன், கீழ்த்திசையில் ஞானத்தை உதிப்பித்த புத்தர் ஆதியோர் யாவர் என ஆராயவில்லை. ஆரியர் பாரத பூமியில் ஒவ்வொரு அடியையும் வெற்றியினாலேயே முன்னுக்கு வைத்தார்கள் என்று கூறும் அவர் கூற்றில் ஏதும் உண்மை இருப்பதாகத் தெரியவில்லை. ஆரியர் தென்னிந்தியரை கி. மு. பத்தாம் நூற்றாண்டில் வெற்றி பெற்றனர் எனக் கூறும் அவர் கூற்று உண்மையிலிருந்து வெகு தூரத்திலுள்ளது. அக் காலத்துக்கு முற்பட்ட ஆரியர், உபநிடதங்கள் எழுதப்படுகின்ற காலத்தே சமயஞானங்களை விசாரித்தறிவதற்குத்



தெற்கே வந்தார்கள் என்பது உண்மையே. அதன் விளைவாக உபநிடதங்களுக்குப் பின் எழுதப்பட்ட சூத்திரங்கள் தென்னிந்தியாவில் எழுதப்பட்டன. சூத்திரங்களுக்கு உரை எழுதிய போதாயனரும், அபஸ்தம்பரும் முறையே கி. மு. 5, 6-ஆம் நூற்றாண்டுகளில் விளங்கியவர்கள். இவர்கள் கோதாவரி, கிருஷ்ணா நதிகளுக்கிடையே உள்ள [1]ஆந்திர நாட்டுக் கலைஞானக் கொள்கைகளைப் பின்பற்றிய தமிழர். "சமக்கிருதத்தையும் சமக்கிருத வரலாற்றையும் படித்து இந்திய நாகரிகத்தை அறிந்துகொள்ள முடியாது. முறையான ஆராய்ச்சி செய்யும் சரித்திர ஆசிரியர், கிருஷ்ணா, காவேரி, வையை முதலிய ஆறுகள் பாய்கின்ற நாடுகளைப் பற்றி அறிந்துகொண்ட பின் கங்காநதியை அடுத்த நாடுகளைப் பற்றி ஆராயவேண்டும்" என்று பேராசிரியர் சுந்தரம் பிள்ளை அவர்கள் ஓரிடத்துக் குறிப்பிட்டிருக்கின்றார்.

இனிப் பொருளிற் செல்வோம். ஆரியர் சிந்து நதிக் கரையிற் குடியேறியது முதல் கி. மு. 2000 த்திலிருந்து கி. மு. 1400 வரையுமுள்ள அவர்களின் வேத பாடல்கள் தொகுக்கப்பட்டதுவரை அறிந்துகொண்டோம். வேதபாடல்கள் பாடி முடிவதற்கு 600 ஆண்டுகள் பிடித்திருக்கின்றன. அப் பாடல்களால், ஆரியர், நாட்டின் கரை வழியாகச் சென்றும், சில சமயங்களில் படை எடுத்தும் பஞ்சாப்

[1]Telugu (1) North Indian Aryan tribe with an Aryan language but which adopted non-Aryan culture and thus incurred the contempt of the Aryans (2) a north Indian non-Aryan tribe which adopted the culture and language of the Aryans; and (3) a South Indian tribe who assimilated Aryan culture and some elements of Prakrit, but retained both racially and linguistically its essential Dravidian. The third of the above hypothesis seems to be closest to truth—*History of Indian people, Vol. 5, p. 372.*

முழுவதையும் கைப்பற்றி இருந்தார்களென அறிகின்றோம். இரு சாதியார்களுக்கும் இடையில் நட்பு முறையான தொடர்பு ஏற்பட்டிருத்தல் கூடும். புதிதாக வேறிடங்களுக்குச் சென்று வாழும் மக்களிடையே இவ்வகை நிகழ்ச்சி ஏற்படுவது இயல்பு. திருமணக் கலப்பினுல் இரு சாதியினரும் ஒன்றுபோல் சேர்ந்து பலமடைந்தனர். ஐந்து ஆறுகள் பாயும் நாட்டிலுள்ளவர்கள் கலப்பில்லாத சாதியாரென வெளி உலகிற் சொல்லப்பட்டாலும் அவர்கள் ஒரே இனத்தைச் சேர்ந்த ஆரியக் குழுவினர் என்று நம்ப முடியாது. புராண வரலாறுகளாலும் பிராமணருடைய செவிவழி வரலாற்ருலும் பஞ்சாப்பின் பூர்வ மக்கள் எட்டு வகையினர் என்றும் வெவ்வேறு கூட்டத்தைச் சேர்ந்தவர்கள் என்றும் விளங்குகின்றன. அவருள் மூன்றில் ஒரு பகுதியினர், ஒரே இனத்தைச் சேர்ந்தவர்கள் என்று ஆராய்ந்து கூறலாம். ஓரினத்தைச் சேர்ந்த அத்திரி, கண்ணுவர், விசுவாமித்திரர் என்னும் மூன்று வமிசத்தினரும் தமிழர் அல்லது பரதவராவர். பிராமணர் என்று கருதப்பட்டவருள் பலர் தமிழ் வகுப்பைச் சார்ந்தவர். பழைய காலத்தில் சாதித் தடை இருக்கவில்லை. கலப்பு மணங்கள் நடைபெற்றன. முன் இருந்தவரும் புதியவரும் கலந்தமையினுல் வலிமை ஏற்பட்டது. அரசாங்கம் பலப்பட்டது. உலக சரித்திரத்தில் இம்முறை புதுமையானதன்று.

ஈரானியர் என்னும் ஆரியரின் கிழக்குப் பிரிவினர், பாரசீகத்தை அடைந்து அங்கு வாழ்ந்த பாரசீகரோடு கலந்து ஒன்றுபட்டனர்.

தில்லிக்கு அண்மையில் கங்கைக் கரையிலிருந்த அத்தினுபுரியாகிய தமிழர் இராச்சியத்தால் ஆரியரின் வளர்ச்சி பஞ்சாப்பிற்கு வெளியிற் செல்லாமல் தடைப்பட்டது. பாஞ்சாலம், கோசலம், விதேகம், விஸ்வல, மதுரை, மகதம், மாளவம் முதலியன தமிழருடைய



மற்றைய இராச்சியங்களுள் முதன்மையுடையவை.[1] இந் நாடுகள் இமயமலை, விந்தமலை, கிழக்கு மேற்குக் கடல் ஆதிய எல்லைகளின் இடையே கிடந்தன. பாரசீகக் கரையிலுள்ள நாடுகள் அத்தினுபுரத்தரசனுக்குத் திறை அளித்தன. இது பாரத யுத்தகாலம் வரை நடைபெற்றது. அம்பல்லா என்னுமிடத்துக்கு 26 மையில் தொலைவிலுள்ள தனேஷ்வா என்னும் இடத்தில் கி. மு. 14-ஆம் நூற்ருண்டில் பாரதப் போர் நடந்தது. குரு, பாண்டவர் என்னும் ஒரே குடும்பத்தினருக்கிடையில் இப்போர் நிகழ்ந்தாலும் பாரத பூமியிலுள்ள அரசர் எல்லோரும் ஒவ்வோர் பக்கத்தைச் சேர்ந்து போர் செய்திருக்கின்றனர். இப்போர் வடக்கே இருந்த இராச்சியங்களுக்குத் தலை அடியாயிருந்தது. சிறு இராச்சியங்கள் சுயேச்சை பெற்றன. பஞ்சாப்பில் அடைபட்டிருந்த ஆரியருக்கு வழி திறந்தது. உல்லாச வாழ்க்கையால் தமிழர் போர் செய்யும் வீரத்தை இழந்தனர்.

இவ்விபரங்களை இருக்கு வேதத்திற் காணலாம். இருக்கு வேதம் பஞ்சாப், கபூல் என்னும் இரு இடங்களைப் பற்றிச் சொல்லுகின்றது. சொல்லப்பட்டவற்றுள் கங்கா நதியும் யமுனையும் அரிதிற் கூறப்படுகின்றன. ஆகவே பஞ்சாப்பிலிருந்த ஆரியர் அவற்றை நன்கறிந்திருக்கவில்லை என்று விளங்குகின்றது. அப்பொழுது ஆரியர் வானம், விண், புயல், இடி முதலிய இயற்கைப் பொருள்களை வணங்கினர்.

[1] Several of the places afterwards celebrated in Indian history such as Taksasila, Mathura and Unjin were said to have been founded by these non-Aryan people who were Dravidian race and perhaps connected with the ancient Sumerians, the people of southern Babylonia, whose history has been traced back to the fourth millennium B.C. These Dravidians, called by the Aryans as Asuras, Daityas, Dasas or Nagas were mostly maritime and trading people —*A short history of India, p. 26—E. B. Havell.*

மிருக பலி கொடுத்தனர். அவர்கள் சமயச்சடங்குகளும் யாகங்களும் புரியுமிடங்கள் சிந்து நதிக்கரையும், அதன் கிளைகளும், சரசுவதி நதியுமாக விருந்தன. அவர்கள் தமிழர்க்குரிய சிவ வணக்கத்தையும், சமயக்கொள்கையை-யும் அறியாதவர்களா யிருந்தனர்.

பழைய வேத பாடல்களில் சிவனைப்பற்றிச் சொல்லப் படவில்லை என முதன் முதலில் கூறியவர் டாக்டர் ஸ்டிபின் ஆவர். உருத்திரன், அக்கினி என்று சொல்லப்பட்-டாலும் அக்கினியையும் உருத்திரனையும் சிவன் என்று கூற முடியாது. தக்கன், சிவனை யாகத்துக்கு அழைக்க வில்லை என்றும் ஆனால் பதினொரு உருத்திரரும் யாகத் துக்குச் சென்றிருந்தனர் என்றும் சொல்லப்படுகின்றன. சிவன் தமிழர் கடவுள். அவர் இரண்டு வகையான வழி பாட்டுக்குரியவர். ஒன்று கண்ணுக்குப் புலப்படாத தியான வடிவம், மற்றொன்று கண்ணுக்குப் புலப்படும் இலிங்க வடிவம். பூவும் புகையும் கொண்டு கடவுளை வழிபடுதல் தமிழரின் பழைய முறை. பூ இதயத்தையும், புகை அது இளகுவதையும் குறிக்கும். இலங்கை அரசனும், இராவணீ-யம் என்னும் இசைநூல் செய்தவனுமாகிய இராவணன், பொன் இலிங்க மொன்றைத் தன்னுடன் கொண்டு திரிந்து பூவும் புகையும்கொண்டு வழிபட்டான். இராவணன் மாத்திர-மல்லன், வாணன், வாலி முதலாயினோரும், தமிழ் முனிவர் களும் சிவ வணக்கத்துக்குரியோராவர். அவர்கள் சிவனைத் தியானவடிவாகவும், மூர்த்திவடிவாகவும் வழிபட்டார்கள். தமிழர் மதத்தை இன்னும் பின்பற்றாத பஞ்சாப்பிலிருந்த ஆரியர், சிவ வழிபாட்டை அறியாதிருந்தனர். ஆரியருக்கும் தமிழருக்கும் பகை ஏற்பட்டால் அது சமயத்தைப் பொறுத்த தாயிருந்தது. ஆரியருடைய தெய்வங்கள் கீழாக மதிக்கப் பட்டதோடு அவர்கள் புரியும் யாகங்களும் அழிக்கப்பட்-டன. இக்காரணத்தினாலேயே, உயர்ந்தோரைக் குறிக்கும் 'அசுரர்' என்னுஞ்சொல் 'தேவர்களின் எதிரிகள்' என்னும்



பொருளைக் குறிக்க இருக்கு வேதத்தின் பத்தாம் மண்டலத் திலும், பிராமணங்களிலும் வழங்கப்பட்டிருக்கின்றது. ஆரியருடைய இயற்கைப் பொருள்களின் வணக்கத்தோடு தமிழருடைய உயர்ந்த வழிபாட்டு முறைகளை ஒப்பிட்டுப் பார்க்குமிடத்துப் பின்னவை மிகச் சிறந்தன என்று எவர் மனதிலும் படுதல் இயல்பு. ஆரியர் தங்கள் கடவுளைப் பிரகாசமுள்ளவன் என்னும் பொருளில் தேவன் என்றழைத் தனர்; தமிழர் எல்லாவற்றையும் கடந்த பொருள் என்னும் பொருளில் கடவுள் என வழங்கினர். 'சிவம்',[1] என்னும் சொல் சிவ என்னும் அடியாகப் பிறந்து நல்லது, இனியது, அழகியது முதலிய பொருள்களைக் கொடுக்கும்.

ஆரியர் இந்தியாவை அடைந்தபின் முதலிற் பாடிய நூல்[2] இருக்குவேத சங்கிதை என்பதை இந்திய சரித்திரா-சிரியர் எல்லோரும் ஒப்புக்கொள்கின்றனர். பஞ்சாப்பில் வாழ்ந்த கலப்புச் சாதியினர் சுற்லெஸ் என்னும் நதியை இன்னும் தாண்டவில்லை என்றும், அவ்வாற்றுக்கு அப்பால் அவர்கள் வாழ்ந்ததைப் பற்றி அவர்களின் வேத பாடல்கள் கூறவில்லை என்றும் முன் ஓரிடத்திற் குறிப்பிட்டுள்ளோம்.

ஆகவே, கி.மு. 2000 முதல் 1400 வரையுள்ள 600 ஆண்டுகளிலும் அவர்கள் பஞ்சாப், கபூல், காந்தாரம் முதலிய நாடுகளில் வாழ்ந்தார்களென்று தெளிவாகப் புலப் படுகின்றது. ஆரியர் குடியேறி வாழ்ந்த நாட்டுக்கு எதிர்ப் புறத்தில் வாழ்ந்த மக்கள் ஆரியரோடு கலக்கவில்லை என்ப-தும், அவர்கள் முற்றாக வேறு கூட்டத்தினராகவிருந்தனர் என்பதுமே இதனாற் பெறப்படுகின்ற முக்கிய முடிவாகும்.

[1] "சிவனெனு நாமந் தனக்கே யுரிய
செம்மேனி யெம்மான்" —திருநா—தே

[2] The hymns which are collected in this work are 1028 in number and were composed during several centuries - *The Civilization of India—R. C. Dutt.*

அக்கூட்டத்தினர், முன் நாம் கூறிய தமிழர், அல்லது பரதர் ஆவர்.

பிராமணங்கள், ஆரணியகங்கள், உபநிடதங்கள் ஆதியன கி.மு. 1400 முதல் கி. மு. 10-ஆம் நூற்றுண்டுவரை செய்யப்பட்டன. இவ்விரண்டாங்காலப் பகுதியிற் செய்த நூல்கள் மாத்திரம் கங்கைக் கரைப்பள்ளத்தாக்குகளில் வாழ்ந்த, குரு பாஞ்சால, காசி, கோசல, விதேகர்களைப் பற்றிச் சொல்லுகின்றன. பாரத யுத்தத்தில் சிறு இராச்சியங்கள் சுயேச்சை பெற்றன. அப்பொழுது ஆரியர் பஞ்சாப்பை விட்டுக் கீழே சென்றனர். கோசலத்தைக் கைப்பற்றிய இக்காலத்திலேயே அவர்கள் கங்கா நதிப் பள்ளத்தாக்கில் பெரிய சாதியாராக அறியப்பட்டார்கள்.

தசரதனின் பாட்டனுகிய புகழ்படைத்த இரகுவே, கோசலத்திலுள்ள சகேதாவில் ஆரிய பரம்பரையை முதலில் நாட்டினுன். சகேதாவை முதலில் ஆண்ட அரசருள் தசரதன் மிகப் புகழ் படைத்தவன். இவன் நீண்ட காலம் அரசு புரிந்தான். அக்காலத்தில் கோசல இராச்சியம் உச்ச நிலை அடைந்திருந்தது. அதன் இராசதானியாகிய சகேதா (அயோத்தி-வெல்லப்படாதது) என்னும் புதிய பெயர் பெற்றது. இராமாயணத்தையும் இதுபோன்ற நூல்களையும் எழுதிய ஆசிரியர்கள் இராமனின் தந்தையாகிய தசரதனை ஆரியவம்சத்தின் 56-வது அரசனுகக் கூறுகின்றனர். ஆரிய பரம்பரைக்கு முன் சகேதாவை ஆண்ட பழைய தமிழ் ஆரசரோடு சேர்த்து இவர்கள் தவருன கணக்குச் செய்திருக்கின்றனர். பாரத யுத்தத்துக்கு முன் குரு குலத்தவருக்கு இராசதானியாயிருந்த அத்தினுபுரம் மற்ற இராச்சியங்களுக்குத் தலைமை பெற்றிருந்த தன்மையை இழந்துவிட்டாலும் கங்காநதி தீரத்திலுள்ள செழிப்பான இடமாகக் கருதப்பட்டது. குரு, பாஞ்சாலம் விதேகம், காசி முதலிய இராச்சியங்கள் ஒன்றோடு ஒன்று நட்புக் கொண்டிருந்தன. போர் முடிந்தபின் பாண்டவர் முன் நாள் தமிழர் வழக்கப்படி



தவஞ் செய்யக் காட்டுக்குச் சென்றனர்*. அருச்சுனனின் பேரனுகிய பரிச்சித்து அத்தினுபுரத்துக்கு அரசனுனன். அவனுக்குப்பின் சனமேசயன் பட்டமெய்தினுன். பரிச்சித்துவும் சனமேசயனும் கல்விப் பிரியர்களாயிருந்தனர். ஆரியர்களுடைய இலக்கியங்களைப் பிரகாசமடையச் செய்தவர்கள் இவர்களே. பரத வமிசத்தவன் அல்லது தமிழனுகிய சனமேசயன் ஆரியர் இலக்கியங்களை ஆதரித்தான் என்பது வியப்புக்கிடமாயிருக்கலாம். இவ்வகை நிகழ்ச்சிகள் எப்படி நிகழ்கின்றன என்பதற்கு சில எடுத்துக் காட்டுகளைக் கூறுகின்றேன். திருதராட்டிரன் காந்தார அரசனின் புதல்வியாகிய ஆரிய கன்னிகையை மணந்தபின், அத்தினுபுர அரண்மனைமொழி ஆரியமாக இருந்தது. இது, புதுக்கோட்டை இளவரசரொருவர் திருச்சிராப்பள்ளியிலுள்ள நாய்க்க கன்னியை மணந்ததினுல், முன் அரண்மனையில் வழங்கிய தெலுங்கு மொழியினிடத்தைத் தமிழ் ஏற்றுக் கொண்டது போலாகும். திருதராட்டிரனின் புதல்வனுகிய துரியோதனனது அரசாட்சி நன்கு அமைக்கப்பட்டிருந்தது. அவனுடைய சபையில் தமிழரும் ஆரியருமாகிய மூதறிஞர் பலரிருந்தனர். அவருள் அங்கதேய அரசனுகிய கர்ணன், தமிழருடைய தன்னலமற்ற நடுநிலைமைக்கு உதாரணமானவன். காந்தார இளவரசனுகிய சகுனி தன்னலமுடைய ஆரியருடைய குணத்துக்கு எடுத்துக்காட்டானவன். இவ்வகைக் கலப்பு மணங்களாலும், அவற்றுலேற்பட்ட உறவாலும் முற்கால ஆரியர், தமிழ் நாட்டில் உபசரிக்கப் பெற்

*இருக்கு வேத பாடல்களில் காட்டிற் சென்று தவஞ் செய்யும் வழக்கத்தைப்பற்றிக் காணப்படவில்லை எனத் தத்தர் கூறியிருக்கிருர்.

காமஞ் சான்ற கடைகோட் காலை
ஏமஞ் சான்ற மக்களொடு துவன்றி
யறம்புரி சுற்றமொடு கிழவனும் கிழத்தியும்
சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே.
சிறந்தது - துறவு. (தொல்)

றனர். குருச்சேத்திரத்தில் வசிக்க ஆரியருக்கு வீடுகள் அளிக்கப்பட்டன. நாட்கள் செல்லச் செல்லக் குடியேறிய ஆரியருக்கும் தமிழருக்கும் ஒரே வகை உரிமைகள் வழங்கப்பட்டன. இதனால் இருசாதியினரும் ஒரே சாதியினராய்க் கலந்து வாழும் வாய்ப்பு ஏற்பட்டது. தாம் வென்றுகைப்பற்றிய கோசலநாட்டிற் போலவே ஆரியர் அத்தினாபுரத்திலும் வாழத்தலைப்பட்டனர். இவ்வாறு சேர்ந்து நடத்தும் வாழ்க்கையினால் மொழி, சமயம், பழக்க வழக்கம் ஆதியனவும் கலந்தன. ஆரியர் தமிழரிடம் கற்றுக்கொண்ட பல தமிழ்ச் சொற்கள் ஆரிய மொழியிற் காணப்படுகின்றன. இருபிரிவினரும் கலந்து வாழ்ந்தார்களென்பதற்கு இது அறிகுறியாகும்.

குரு குலத்தினர் பாஞ்சாலர் பாண்டவர் ஆதியோர் சிவனை வழிபட்டனர். இவர்களுக்குப் பின் வந்த அரசர் ஆரியரின் ஆதிக்கத்தால் கடவுள் பத்தியில் தளர்ந்தவர்களாயினர். அவர்கள் ஆரியரின் தெய்வங்களைத் தங்கள் கடவுளர் களாகக் கருதியதோடு யாகங்களிலும் நம்பிக்கை வைத்திருந்தனர். இக் கொள்கை இவர் முன்னோரால் கடியப்பட்டது.

இதுவரை ஆரியர் தமிழரோடு கலப்புற்ற வகையினைக் கூறினோம். இனிச் சனமேசயன் காலத்து ஆரியருடைய நூல்கள் பிரகாசமடைந்த வகையினைக் கூறுவோம். பஞ்சாப்பில் வாழ்ந்த மக்கள் இயற்றிய யாகங்கள் ஆடம்பரமில்லாதிருந்தன. பெரிய விருந்து கொண்டாடுவதற்காக அசுவயாகங்கள் செய்யப்பட்டன. ஆடம்பரத்தோடு கூடிய யாகங்கள் அரசர் அரண்மனைகளிலும், கங்காநதிப் பள்ளத்தாக்கிலுள்ள நாடுகளிலும் நடைபெற்றன. அசுவமேத யாகம் பாவத்தைப் போக்கி அரச பதவியை அளிக்கும் என்று நம்பப்பட்டது. முன்னோருடைய பாவங்களையும் தனது பாவங்களையும் போக்குவதற்குச் சனமேசயன் யாகங்களைச் செய்தான். யாகங்கள் புரியும்



விதிகளைக் கூறும் பெரிய நூல்கள் எழுதப்பட்டன. இவை திரட்டப்பட்டு 'பிராமணம்' என்னும் பெயரைப் பெற்றன. பிராமணம் சனமேசயன் காலத்தில் தோன்றியதாகும். மாபாரதமும் இவன் காலத்திற் செய்யப்பட்டது. வைசம்பாயனர் சனமேசயனுக்குப் பாரதப் போரின் வரலாற்றைக் கூறினர். பாரதஞ் செய்தவர் கிருட்டிண வியாசர் என்பது நம்பத்தக்கதாயில்லை. வியாசரின் புகழை நிலை நாட்டுவதற்கு அவர் மாணக்கர் சிலர் அவர் பெயரால் வேதங்களைத் தொகுத்தும் மாபாரதத்தை இயற்றியும் போந்தார்கள் என்று கருத இடமுண்டு. இவ்வாறு செய்தல் அக்கால மரபு. கிருட்டிண வியாசர் என்னும் [1]பரதவகுப்பினர், வேதங்களைத் திரட்டியவரும் மாபாரதத்தைச் செய்தவருமாயிருந்தால் அவர் காலம் மாபாரதத்துக்குப் பிந்தியதாதல் வேண்டும். மாபாரதம் ஒருவரால் ஒருகாலத்துச் செய்த நூலாகக் காணப்படவில்லை. பிற்காலத்துப் புலவர்களும் தாம் பாடிய பாடல்களைப் பாரதத்துட் சேர்த்து அதனைப் பெரிதாக்கியிருக்கின்றனர். பிற்காலத்திய ஒவ்வொரு கொள்கைக்கு உரியோரும் தத்தம் கொள்கைகளை நூலிற் புகுத்தியிருக்கின்றனர். "குரு பாஞ்சாலப் போருக்குப் பிற்பட்ட கிருட்டிண வணக்கம் பாரதத்திற் புகுத்தப்பட்டிருக்கின்றது" எனத் தத்தர் கூறியிருக்கின்றார்.*

மாபாரதம் எழுதப்பட்டது மாத்திரமல்லாமல், வேதங்களின் தொகுப்பும் சனமேசயன் காலத்தில் நிகழ்ந்திருத்தல் கூடும். இத் தொகுப்புக்கள், ஆரியர் சிந்துநதி தீரத்திற் குடியேறியது முதல் யாகங்கள் ஆடம்பரமாகச் செய்யப்பட்டது வரையுள்ள காலத்தைக் குறிப்பிடுகின்றன. தமிழர் வழிபாட்டுப் பூசைகளிற் தோத்திரப் பாடல்களைப் பாடுதல் மரபு. ஆகவே ஆரியருடைய யாகசாலைகளிலும் துதிபாடும்

[1] Krishna is represented in the Mahabharata as black and so is Arjuna - so also is Vyasa who related the story *Epic India - C. V. Vaidya.*

முறை கொண்டுவரப்பட்டது. இருக்கு வேதத்தினின்றும் தெரிந்தெடுக்கப்பட்ட பாடல்களோடு சில பாடல்களையும் சேர்த்துத் தொகுத்து அதற்குச் சாமம் என்று பெயரிடப் பட்டது. இருக்கு வேதத்தினின்றும் எடுக்கப்பட்ட, கிரியை களிற் படிக்கும் மந்திரங்களோடு சிலவற்றைச் சேர்த்துத் தொகுத்து அதற்கு யசுர் என்று பெயரிடப்பட்டது. இவ்விரண்டும் இருக்கு வேதத்தோடு சேர்த்துத் 'திரயம்' என்று வழங்கப்பட்டன. சாமவேதத்தை ஓதும் இசை வகுப்புக்கு ஆரியர், தமிழ் இராவணனுக்கு மிக்க கடமைப் பட்டவர்களாவர்.

அதர்வம் அல்லது இறுதியில் சேர்க்கப்பட்ட வேதம், பல மந்திரங்களின் தொகுப்பை உடையது. அம் மந்திரங்கள் இந்தியாவின் பல பாகங்களினின்றும் திரட்டி ஆரிய மொழியில் எழுதப்பட்டனவாகும். சனமேசயனுடைய தந்தை பரிச்சித்து நாகம் தீண்டி இறந்தான். பாம்புகளை முற்றாக ஒழிக்கக் கருதிய சனமேசயன், இந்தியா முழுமையிலுமுள்ள மந்திர வித்தைவல்லாரை அழைத்து, அவர்கள் வாயிலாகப் பாம்பு யாகஞ் செய்தான். அக்காலத்தில் அதர்வண வேதமென்பது நூலாகச் செய்யப்பட்டது. இத்தொகுப்பு நூல் பிற்காலத்தில் ஒரு வேதமாகக் கொள்ளப்பட்டு, வேதங்கள் நான்கு என்னும் வழக்கு உண்டாயிற்று.

* Ancient India P. 130.

*தமிழர் மந்திரவித்தையிற் றிறமை யடைந்திருந்தனர். அவர்கள் இதனை ஆரியருக்குக் கற்பித்தனர். பழங்காலந்தொட்டு மலையாளம், மந்திர வித்தையிற் சிறந்த நாடாகக் கருதப்பட்டது. அருச்சுனன் பாரதப் போரில் வெற்றியடைந்தது இவ்வித்தையினாலேயே. ஒவ்வொரு வீரனும் மந்திர வித்தையிற் பயின்றிருப்பது பழைய நாள் வழக்கு. தேவாஸ்திரங்கள் என்று சொல்லப்பட்டனவெல்லாம் மந்திர வித்தையாற் செலுத்தப்பட்ட அம்புகளே. அதர்வண வேதத்தில் பகைவரை அழிக்கும் மந்திரங்கள் காணப்படுகின்றன. இவற்றைச் சிலர் மறைத்து வைத்து அரிதிற் வகையாளுகின்றனர்.



கி. பி. முதல் நூற்றாண்டு வரையிற் செய்யப்பட்டதென்று கொள்ளப்படும் மனு நூலில், 'வேதம் மூன்று' என்றே கூறப் படுகிறது. இவ்வாறு சனமேசயனுடைய ஆட்சியில் ஆரியர் இலக்கியங்களுக்கு மதிப்பு ஏற்பட்டது.

சனமேசயனுடைய ஆளுகை, பாரதப்போருக்கு ஒரு நூற்றாண்டு பிற்பட்டது. ஆரியர் கங்கை யாற்றங்கரையிற் குடியேறி ஒரு நூற்றாண்டிற்குள் அவர் மிக முன்னேற்ற மடைந்தனர். அக்காலத்திற் கட்டுப் பாடான சாதி வேறுபாடு உண்டாகவில்லை. மனுவின் நீதி நூலும் தோன்றவில்லை. மக்கள், இராசாயனர், வைசியர் என்னும் இரு பிரிவினராக இருந்தனர். இராசாயனர் இராச்சிய மாள்பவர்களாகவிருந்தனர். இவர்கள் ஒரு காலத்தில் அசுரர் என்று அழைக்கப்பட்டனர். பஞ்சாப்பில் வாழ்ந்த பழைய ஆரியரின் மொழியில் அசுரர் என்பதற்குப் 'பிரபுக்கள்' என்பது பொருள்; இவர்களல்லாத மற்றவர்கள் வைசியரென்றழைக்கப்பட்டனர். பஞ்சாப்பில் குடியேறிய மக்கள் எல்லோருக்கும் புதிய காரணங்களால் இது பொதுப் பெயராயிருந்தது. புதிய கடமைகளைச் செய்யும் அவசியம் நேர்ந்தது. ஆகவே ஆரியருக்குள் பல வகுப்புகள் தோன்றின. பிராமணங்களில் நன்கு பயின்றோரும் யாகக் கிரியைகளியற்றும் கிரியைகளில் திறமையுடையோரும் பிராமணர் எனப்பட்டனர். பிராமணர் யாகக் கிரியைகளைப் புரிந்தனர். அதனால் அவர்கள் ஏராளமான பொருள் பெற்றனர். அரசர்களும் செல்வரும் தமது செல்வங்கள் எல்லாவற்றையும் யாகம் என்னும் பெயரால் இக்கூட்டத்தாருக்கு இறைத்தனர். பிராமணங்களின் அறிவைக் கொண்டு அவர்கள் மிக்க பொருள் திரட்டிய போதும், பலர் பயனற்ற இக்கிரியைகளால் திருப்தியுறாமல் உண்மை ஞானத்தைத் தேடி அதனைப் பெற முயன்றனர்.

சனகனுடைய அரண்மனையிலேயே சதபதப்பிராமணம் ஆரம்பிக்கப்பட்டது. தமிழருடைய பழைய கதைகளும்,

சமயக் கொள்கைகளும், ஞானமும் வெள்ளப் பெருக்கோடு சம்பந்தப்பட்ட திராவிட அரசனுகிய மனுவின் வரலாறும், மறுபிறப்புப் பேரின்பம் முதலிய உண்மைகளும் இதனிடத்துக் காணப்படுகின்றன. இவை எல்லாம் ஆரியர் அறியாத கருத்துக்கள்[2]. இவை முதன் முறையாகச் சதபதப்பிராமணத்திற் காணப்படுகின்றன. சதபதப் பிராமணம் யாக்ஞவல் கியராற் செய்யப்பட்டது.

காசி அரசனுகிய அயதசத்துரு சனகனைப் போல் கல்வியறிவுடையவனும், கல்வியை ஆதரித்தவனுமாவான் என்று கோசிதகி உபநிடதம் கூறுகின்றது. கிரகபாலகி என்னும் கல்வியறிவுடைய பிராமணன் அயதசத்துருவிடம் வந்து "நான் உனது மாணுக்கனுக வரட்டுமா?" எனக் கேட்டான். அரசன், "இராசாயனனுக்குப் பிராமணன் மாணுக்கனுய் இருத்தல் முறையன்று; வேண்டியவற்றைக் கேள் விளக்குகின்றேன்" என்முன். யாக்ஞவல்கியரைப் போல் மதிக்கப்பட்ட பிராமணருள் கௌதமர் அல்லது உடலகர் என்பவர் ஒருவர். இம்முனிவர் ஆரியஞானிகளுள் சிறப்புடையவரெனக் கருதப்பட்டார். இம்முனிவர் இராசாயனரிடமிருந்து நேர்மையாகவும் உறுதியாகவும் ஞானத்தைக் கற்முரென்று உபநிடதங்கள் பல விடங்களில் தெளிவாகக் கூறுகின்றன. உபநிடதங்களின் பல பகுதிகள், இராசாயனர் அல்லது தமிழர் ஞானமுள்ள குரவர்கள், மதிநுட்பமுடையவர்கள், என்று கூறுகின்றன. பிராமணர், இவர்களிடமிருந்தே ஞானத்தைப் பெற்றனர். சாந்தோக்கிய உபநிடத்திற் காணப்படும் பின்வரும் வரலாறு இவ்வுண்மையை வலியுறுத்துகின்றது. மேலே

[2] Trace of the doctrine of transmigration is entirely absent from the Vedas and early Brahmanas. It seems probable that the Indian Aryans borrowed the idea from the aboriginies—*Cambridge History of India, Vol. I, p. 108—Prof. Macdonald.*



கூறப்பட்ட கௌதமர் இராசானுச பிரவாகனனுல் வினுவப்பட்ட ஐந்து கேள்விகளுக்கு விடை அறியாது, பிரவாகனன் வாயிலாகவே விடைகளைப் பெற்முர். பிரவாகனன், விடையளிக்கும்போது "உனக்குச் சொல்வதன் முன் இந்த ஞானம் பிராமணன் எவனுக்கும் போதிக்கப்படவில்லை. இதனைப் போதிக்கும் உரிமை இவ்வுலகம் முழுமையிலும் இராசாயன வகுப்பினருக்கே உரிய குருநாட்டிலும், வென்று கைப்பற்றப்பட்ட கோசல நாட்டிலுமே பெரும்பாலும் தொடங்கின" என்று கூறினுன். கங்காநதி தீரத்திலிருந்த தமிழரசர்களின் அரண்மனைகளில் பிராமணரின் எத்தனங்கள் பயனளிக்கவில்லை. அங்கு பிராமணரும் பிராமணங்களும் கவனிக்கப்படவில்லை.

முற்காலத்தில் ஒவ்வொரு தமிழரசனது அரண்மனையிலும் அறிஞர்களின் சபை ஒன்றிருந்தது. அக்கால இலக்கியங்கள், தமிழரசரின் அரண்மனைகளிலிருந்த அறிஞர் சபைகளைப் பற்றி அடிக்கடி கூறுகின்றன. முதன்மையாகக் காசி அரசன் அயதசத்துரு, பாஞ்சால அரசன் பிரவாகனன், விதேக அரசன் சனகன் முதலியோரின் சபைகள் கூறப்படுகின்றன. இவருள் இராசாயனனுகிய சனகனது அரண்மனையிலிருந்தவர்களே முதன்மையானவர்கள். சனகன் சாத்திரஞான முடையவனும், ஆசாரியனுமாவன். தமிழர்களுடைய உண்மையான தத்துவ ஞானங்களடங்கிய உபநிடதங்களுக்குப் பெருமை அளித்தவர் இவராவர். வேறு நாடுகளிலிருந்தும் பல அறிஞர் இவனது அரண்மனைக்கு உண்மை ஞானத்தை விசாரித்தறியச் சென்றனர். அவருள் யாக்ஞவல்கியர் என்னும் ஓர் பிராமணர் சிறப்பாகக் குறிப்பிடத் தக்கவராவர். சனகர் இவருக்கு, உண்மையான தத்துவ ஞானத்தைப் போதித்தார். யாக்ஞவல்கியர் பிராமண மதத்திலிருந்து தர்க்க முறையான தமிழ் மதத்துக்குத் திருப்பப்பட்டார்.

யாக்ஞவல்கியர் இரண்டு பிராமணர்களுடன் சனகனிடஞ் சென்றார். சனகன் 'அக்கினி கோத்திரம் செய்யும் முறை யாது' என வினவினான். யாக்ஞவல்கியரின் மறுமொழி ஏறக்குறையப் பொருத்தமாக இருந்தது; முற்றும் பொருத்தமாக இருக்கவில்லை. மற்று இருவரும் கூறிய விடை பிழையாகவிருந்தது. அதன்மேல் சனகன் அக்கினி கோத்திரத்தைப் பற்றி விளக்கினான்; விளக்குதலும், யாக்ஞவல்கியர் தமது குருவாகிய பிருகுவின் உபதேசங்களிற் திருப்தியடையாதவராய் அவரிடம் கற்ற எல்லாவற்றையும் வாந்தி எடுத்தார். அவர் வாந்தி யெடுத்தது கிருஷ்ணயசுர்வேதத்தை. பின், தன் குருவை விட்டு நீங்கிச் சூரியனை அடைந்து சுக்கில யசுர் வேதத்தைக் கற்றார். இவ்வாறு சதபதப் பிராமணங் கூறுகின்றது. சூரியன் என்பது தமிழாசிரியனைக் குறிக்கும். இதனால் ஆரியர், பல தெய்வக் கொள்கையை விட்டுத் தமிழருக்குரிய ஒரு தெய்வக் கொள்கையைப் பின்பற்றினர் என்று விளங்குகின்றது. கடவுள், உயிர் என்பவற்றின் இயல்புகள் எவை என்று எவ்விடங்களிலும் விவாதிக்கப்பட்டன. கடவுள் எங்கும் நிறைந்திருக்கிறார் என்பது தமிழரது கொள்கை. இறைவன் எல்லாப் பொருள்களிலும் செறிந்திருக்கின்றானென்றும் அவனுக்குள்ளே தோற்றம் ஒடுக்கம் ஆதியன நிகழ்கின்றனவென்றும் கூறப்பட்ட உண்மை, கடவுள் எல்லாப் பொருளும் ஆகின்றானென்றும், ஒவ்வொரு பொருளும் கடவுளின் பகுதி யென்றும் பிற்காலத்துத் திரிபு பெற்றது.

தமிழரின் ஞானத்தை எடுத்துக் கூறும் உபநிடதங்கள் அக்கால ஆரியர் நூல்களுள் சிறந்து விளங்கின. உபநிடதங்கள் தோன்றிய பின், பிராமணருடைய நூல்கள் மங்கத் தொடங்கின. இதற்கும், ஆரியர் தமிழர் மதத்தைத் தழுவுவதற்கும் காரணமாயிருந்தவர் சனகரேயாவர். இவர் அரசருக்கெல்லாம் அரசனாக விளங்கினார். இதற்கு



அவரது உண்மை ஞானமே காரணம். அவர் அரசாண்ட காலம் இன்னதென்று நினைவில் வைத்திருத்தல் நன்று. இவர் சகேதாவில் அரச பரம்பரையைத் தாபித்த இரகுவின் பேரனாகிய தசரதன் காலத்தவர். சனகன் காலத்தில் பரிச்சித்துவின் பரம்பரை மறைந்துவிட்டது. ஆனால் அவ் வமிசத்தைப் பற்றிய ஞாபகம் மறக்கப்படவில்லை. யாகங்கள் வாயிலாகப் பரிச்சித்துவின் வமிசத்தவரின் பாவங்கள் போக்கப்பட்டன. இது சனகன் காலத்தில் ஆச்சரியப்படத்தக்கதும் தர்க்கத்துக்குரியதுமாகவிருந்தது.

யாக்ஞவல்கியரின் எதிர் கட்சியினர் ஒருவர் யாக்ஞவல்கியரை நோக்கிப் பரிச்சித்துக்கள் சென்றுவிட்டார்களோ ? என்னும் கேள்வியைக் கேட்டார். 'அவர்களின் அஸ்வமேதம் இப்பொழுது எங்கே போய்விட்டது ?' என்று யாக்ஞவல்கியர் மறுமொழி கூறினார். பரிச்சித்துகள் என்றது அவர் காலத்து நூல்களை. இதனால் பிராமணங்களின் காலம் உபநிடத காலத்துக்கு முற்பட்டதென விளங்குகின்றது. சனகன் பிராமணரை ஆதரித்த சனமேசயன் காலத்துக்குச் சில ஆண்டுகள் பிற்பட்டவனெனக் கூறலாம். *பாரத யுத்தத்துக்குப் பின்னர் பரிச்சித்துவுக்குப் பின் வந்தவன் சனமேசயன். ஆகவே இவன்

* மாபாரதம் 5000 வருடங்களுக்கு முற்பட்ட நிகழ்ச்சி யென்று சொல்லப்படுகின்றது. ஆராய்ச்சியாளரெல்லாம் இது கி. மு. 14-ஆம் நூற்றாண்டில் நிகழ்ந்ததென்று கூறுகின்றனர். இது கிட்டத்தட்டப் பொருத்தமானதென்று சொல்வதற்குரிய ஆதாரங்கள் சில உண்டு. மகத நாட்டரசனாகிய பிம்பசாகரன் புத்தர் காலத்தவன். இவன் பாரத யுத்தத்திற் கலந்துகொண்ட யுரசந்தாவுக்குப்பின் 52-வது அரசனாவன். புத்தர் காலம் கி. மு. 5-ஆம் நூற்றாண்டு. 51 அரசரின் ஆட்சிக்காலத்துக்கும், ஒவ்வொருவருக்குச் சராசரி 20 வருடங்களை வைத்துக் கணக்கிட அது பாரதப்போரைக் கி. மு. 15-ஆம் நூற்றாண்டிற் கொண்டு போய் விடுகின்றது. எவ்வகையிலாவது பாரதப்போர் கி. மு. 14-ஆம் நூற்றாண்டுக்குப் பிற்பட்டதன்று எனச் சாதிக்கலாம்.

காலம் கி. மு. 14-ஆம் நூற்றுண்டின் பிற்பகுதியாகும். ஆகவே சனகன் கி. மு. 13-ஆம் நூற்றுண்டின் முற்பகுதியில் இருந்தவனுவன். சகேதாவை ஆண்ட ஆரிய அரசருள் தசரதன் கீர்த்தி வாய்ந்தவன். கங்காநதி தீரத்தில் ஆட்சி புரிந்தவர்களுள்ளும் இவன் சிறந்தவன். இவன் சனகனுகிய தமிழரசனேடு சம்பந்தப்பட்டவனென்று அறிகின்றேம். தசரதனின் புத்திரன் சனகனின் ஒரே புதல்வியை மணந்த-தால், தமிழர் ஆரியர் என்னும் இரண்டு வம்சங்களுக்கும் உறவு ஏற்பட்டது. குலகுருவாகிய வசிட்டரின் அனுமதியைப்பெற்ற தசரதன் தனது புதல்வன் இராமனை விசுவாமித்திரர்* என்னும் தமிழ் முனிவரிடம் ஒப்பித்தான். கோசலம்,

* விசுவாமித்திர வசிட்ட குடும்பங்களுக்கிடையில் நீண்ட பகை இருந்ததென்பதற்குப் பல கதைகளுண்டு. விசுவாமித்திர குடும்பத்தினர் ' பரதரின் புதல்வர், என்றும் ' பரதரில் விசேடமுள்ளவர்கள், என்றும் வேதங்கள் கூறுகின்றன. விசுவாமித்திர குடும்பத்தினர் விரித்த சடையுடையவர்களென்றும், வசிட்ட குடும்பத்தினர் வலப்பக்கத்தே முடிந்த கொண்டையுடையவரென்றுஞ் சொல்லப்படுகின்றனர். வசிட்டர் 'ரிற்றஸ்' ஆரிய வகுப்பினராயினும் அவர்கள் சூத்திரர் என்று சொல்லப்படுகின்றனர். வசிட்ட குடும்பத்தின் முன்னேராகிய 'ரிற்றஸ்' என்னும் வகுப்பினர் ஆரியரில் உயர்ந்தவர்களா யிருந்தபோதும் வசிட்ட குடும்பத்தினர் சூத்திரரென்னும்படியான கீழ்நிலையை அடைந்தனர். பிற்காலப் புராணங்கள் விசுவாமித்திரரைச் சத்திரியரென்றும், வசிட்டரைப் பிராமணரென்றும் கூறுகின்றன. சத்திரியன் பிராமணன் என்னும் பதங்கள் முறையே தமிழரையும் ஆரியரையும் குறிக்கின்றன. வசிட்டர் பிரா-மணரின் நட்பைப் பெற்று அவர்களாற் பாராட்டப்பட்டார். அவர்கள் வணக்கங் கூறி அவருக்குப் பல பெருமைகளைக் கொடுத்தனர். அவர்களிடத்தில் தரும சிந்தை கிடையாது. அவர்கள் விசுவாமித்திரர் மீது பல பழிகளைச் சுமத்தினர். விசுவாமித்திரர் அவர்களுடைய எதிரியாக இருந்தார். இது உண்மையன்று. விசுவாமித்திர வமிசத்தவர்கள் பிறப்பில் தமிழர் அல்லது பரதர். வசிட்ட குடும்பத்தினர் 'ரிற்றஸ்'



விதேகம் என்னும் இரண்டு அரச குடும்பங்களின் இணைப்பு பன்னிரண்டாம் நூற்றுண்டுக்கு முன் ஒரே மயமாய்விட்டது. ஆரியர் பஞ்சாப்பிலிருந்து வந்து குடியேறியபின், பஞ்சாப்பிற்குக் கிழக்கு, சோணை ஆற்றுக்கு மேற்கு, அராவலி மலைக்கு வடக்கு அதன் கிழக்கே உள்ள 'பிரியற்ரா' (**Pryatra**) முதலிய எல்லைகளுக்குட்பட்ட நாடுகளில் இரண்டு சாதிகளுக்கு மிடையில் வேற்றுமை ஒன்றுமில்லாமல் மறைந்துவிட்டது. மேற்குறித்த எல்லைக்குட்பட்ட நாட்டைப் பிற்காலத்தார் ஆரியவர்த்தம் என்று அழைத்தனர். இக் கலப்புச் சாதியார் மிக்க சீர்திருத்தமடைந்த பின்பு ஆரியர் முதன் முதல் குடியேறிய நாடாகிய பஞ்சாப்பை முற்ற மறந்துவிட்டனர். ஆரியவர்த்தம் என்பதில் பஞ்சாப் சேர்க்கப்படவில்லை. ஆரியர் குடியேற்றத்தின் பின் தோன்றிய இரண்டாவது கால நூலாகிய பிராமணங்கள், ஆரணியகங்கள், உபநிடதங்கள் ஆரியவர்த்தத்தைப் பற்றிக் குறிப்பிடுகின்றன.

வகுப்பினர். அக்காலத்தில் தமிழரசர் கூடிய அதிகாரமுடையவர்களாயிருந்தனர். ஆகவே பிறப்பினுலும் படிப்பினுலும் விசுவாமித்திர வமிசத்தவர், ஆரியர் வீடுகளிலும் வணக்கத்தோடு போற்றப்பட்டனர். இது வசிட்ட குடும்பத்தினரின் பொருமையை மூட்டியது. இப்பொருமைகளால் ஒருவர் ஒருவர் மீது பழிகளைச் சுமத்தியதுமல்லாமல் அடிதடிகளிலு மிறங்கினர். கல்வியினுலும் உடல் வலியினுலும் விசுவாமித்திர குடும்பத்தினர் வசிட்ட குடும்பத்தினரிலும் அதிக வலிமையைப் பெற்றனர். ஆகவே தசரதனது அரண்மனையில் விசுவாமித்ரர் மிக்க செல்வாக்கும் பெற்றனர்.

[2] Again the Rigvedic story of conflict between Vasistha and Visvamitra is that of conflict between two cultures of which amalgamation is indicated by the Kshatrya becoming a Brahman. There is also reference to non-Aryan Rishis in later traditions—*Hindu Civilization, p. 138—R. K. Mookerjee*

ஆரியர், இவ்வாறு தமிழ் மயமானபின் உபநிடதத்திற் கூறும் தத்துவஞான ஆராய்ச்சியில் ஆவல்கொண்டவர்களாய், ஞானத்துக்குப் பிறப்பிடமாகிய தென்னிந்தியாவுக்கு யாத்திரை செய்தனர். இவர் தமிழ் அறிஞராலும் அரசராலும் வரவேற்கப்பட்டனர். ஆகவே அவர் தமிழ் அரசரின் அரண்மனையை அலங்கரித்த அந்தண ஆசாரியர்களிடமிருந்து தமிழ் ஞானத்தைக் கற்றனர். ஆரியர், தமிழரோடு இவ் வகை உறவு வைக்கத் தொடங்கிய பின்னரே [1]சூத்திர வடிவான இலக்கியங்கள் எழுதப்பட்டன. அவ்விலக்கியங்கள் பலவற்றின் பிறப்பிடம் தென்னிந்தியாவாகும். இதுவரை வசன நடையில் எழுதப்பட்ட ஆரியரின் இலக்கியங்கள் இப்பொழுது செய்யுள் நடையில் எழுதப்படலாயின. இம்முறை தமிழரைப் பின்பற்றிச் செய்யப்பட்டதென்பதைச் சூத்திர இலக்கியங்களைப் பார்த்து அறியலாம். வடக்கே உள்ளவர்களுக்கும் தெற்கே உள்ளவர்களுக்கு மிடையில் கி. மு. 10-ஆம் நூற்றாண்டு முதல் இவ்வகை உறவு ஏற்பட்டதை அறிகின்றோம். தெற்கே வந்த பிராமணரிற் பெரும்பாலோர், தமது நாட்டுக்குத் திரும்ப விரும்பவில்லை. ஆகவே அவர்கள் தென்னாட்டில் தங்குவாராயினர். தமிழ் அந்தணரின் மாணாக்கராகத் தென்னாட்டில் தங்கிய ஆரியப் பிராமணர், அந்தண வகுப்பினரோடு கலந்தனர். தென்னிந்தியாவிற் காணப்படும் பிராமணரிற் பெரும்பாலோர் தமிழர் என்பதில் ஐயமில்லை.

தெற்கே முதன் முதல் அடி எடுத்து வைத்த ஆரியன் இராமனென்று நாங்கள் படிக்கின்றோம். இக்கொள்கை ஆட்சேபத்துக்கு இடமானது. இராமன் சனகன் காலத்தவனாயின் அவன் கி. மு. 13-ஆம் நூற்றாண்டில் விளங்கிய-வனாவன். இராமாயணம் கி. மு. 8-ஆம் நூற்றாண்டுக்கும் ஐந்தாம் நூற்றாண்டுக்கு மிடையில் எழுதப்பட்ட நூலென்

[1] சூத்திரப்பாவினாற் செய்யப்பட்டவை.



பதிற் சந்தேகமில்லை. தென்னிந்திய பழங்கதை ஒன்றை எடுத்துக்கொண்டு[1] அதனோடு கோசலதேசத்து இராமனையும் பிணைத்து இராமாயணம் பூர்த்தி செய்யப்பட்டிருக்கிறதெனத் தெரிகிறது. அந்நூலாசிரியர் வடக்கே இருந்த தசரதனையும் சனகனையும் ஒரே காலத்தவர்களாக வைத்துக்கொண்டு, தென்னாட்டு இராவணன் அகத்தியர் முதலியோர் காலங்களையும், இடங்களையும் கவனியாது நூல் செய்திருக்கின்றார். ஆரியர் சிந்து நதியின் மேற்குக் கரையில் வந்து குடியேறுவதன் முன் அகத்தியர், வாழ்ந்தவராவர்.

ஆரியர் வந்து பஞ்சாப்பிற் குடியேறிய முதலாம் குடியேற்ற காலத்துத் தமிழரும் ஆரியரும் கலந்து ஒன்றுபட்டனர். கங்கா நதி தீரத்திற் குடியேறிய இரண்டாங் காலத்தும் இரு சாதியாரும் கலந்து ஒன்று பட்டனர்; ஆகவே இரண்டு சாதியாருக்குமிடையில் வேற்றுமை காண முடியாத கலப்பு ஏற்பட்டது. தற்கால மக்களின் மொழியையும் சமயத்தையும் ஆராய்ந்தால் தமிழருக்கும் ஆரியருக்குமிடையில் எவ்வளவிற் கலப்பு ஏற்பட்டிருக்கிறதென்பது விளங்கும்.

முதலிற் பஞ்சாப்பிற் குடியேறிய ஆரியர் எப்படித் தமிழரோடு கலந்து கொண்டார்களென்று சரித்திர சம்பந்தமாக அறிந்து கொண்டோம்.[2] இரண்டாவதாக இவர்கள். பல காரணங்களாற் கிழக்குத் திசை நோக்கிச் சென்று

[1] The Ramayana narrates...the war between Rama and the Rakshasas...This event it appears to be connected with the life of another Rama, who is distinguished as the Rama of Dekkan—*Wheeler's History of India, Vol. II, Part IV.*

[2] Nevertheless there is reason to believe that extensive Dravidian races were once to be found even in North India...Dravidian races in the north have gradually

கங்காநதிப் பக்கங்களில் வாழ்ந்த தமிழர் அல்லது பரதரோடு எப்படிக் கலந்தார்களென்று அறிந்தோம். சரித்திர சம்பந்தமான ஆராய்ச்சியை விட்டு இனிச்சமயம் மொழி என்பவற்றை ஆராய்வோம். ஒரு சாதியாரின் பழைய வரலாற்றை அறிந்து கொள்வதற்குச் சமயத்தையும், மொழியையும் பற்றிய ஆராய்ச்சிகள் நம்பத்தக்க ஆதாரங்களாக இருக்கின்றன.

இரண்டாவது குடியேற்ற காலத்தில் கலப்பு ஆரியர், தமிழரின் நியாய முறையான சமயத்தை தழுவினார்களென அறிந்தோம். அவர்களின் சமயமாற்றம் சடுதியாக ஏற்பட்டதன்று. அக்கால நிலைமைக்கேற்றபடி சிறிது சிறிதாக ஏற்பட்டாலும் உறுதியாக இருந்தது. தமிழருடைய மதம் ஞாயத்தைத் தழுவியிருந்தது. ஆரியருடைய மதம் கற்பனையைத் தழுவி இருந்தது. பஞ்சாப்பில் ஆரியர் குடியேறிய காலம் முதன் வேதபாடல்களில் தமிழர் கொள்கைகள் நுழைந்திருக்கின்றன. இருக்குவேதத்தில் பழைய தெய்வங்களுள் வருணனும், இந்திரனும், (இரவும் பகலும் அல்லது இருண்டவானமும் ஒளியுடையவானமும்) காணப்படுகின்றனர். ஆரியர் இந்தியாவை அடைவதன் முன் அவர் வாழ்ந்த பூர்வ ஆரியநாட்டில் இத்தெய்வங்கள் வழிபடப்பட்டன. பழைய ஆரியர் வானத்தையும், அது அடையும் பல மாறுதல்களையும், பலதெய்வங்களையும் வழிபட்டனர். இந்தியாவையடைந்த ஆரியர் தமிழரின் ஒரே தெய்வ வழிபாட்டைக் கண்டனர்; கண்டு, இந்திரனை எல்லாத் தெய்வங்களுக்கும் தலைவனாகக் கொண்டனர். இந்திரன் எல்லாக் கடவுளருக்கும் தலைவனாகவும் கொள்ளப்பட்டான். இந்திரன் என்னுஞ் சொல் இறைவன் என்னுந் தமிழ்ச் சொல்லின் உச்சரிப்பு வேறுபாடாகவிருக்கலாம்.

fused with and merged into a Hindu population, losing all definitely separate languages or dialects—*Indian Village Community, p. 16—B. H. Baden Powell.*



அவர்கள் புதிதாகப் பழகிய பரதர் அல்லது தமிழரிடமிருந்து சூரியவணக்கத்தையும் கைக் கொண்டனர். சூரிய வணக்கத்துக்குரிய காயத்திரி பாடல்களைச் செய்தவர்கள் பரதரில் சிறந்தவர்கள் எனப்பட்ட விசுவா மித்திரர்களே. பஞ்சாப்பிலுள்ள 'மல்தான்' (Maltan) என்னும் நகரில் சூரியனுக்குப் பழைய கோயிலொன்று இருந்ததென அறிகின்றோம். ஔரங்கசீப் என்னும் முகமதிய மன்னனின் கட்டளையால் அவ்வாலயத்திலிருந்த சூரியக் கடவுளின் தங்கச்சிலை உருக்கிக் கருவூலத்தில் சேர்க்கப்பட்டது. மல்தான் என்னும் இடம் மல்லர் அல்லது மள்ளர் வாழ் இடமாகவிருந்தது. இந்தியாவின் மேற்குப் புறத்தில் மள்ளர் முதன்மையான சாதியாராவர். தமிழரின் ஒரு பிரிவினராகிய இவர்கள் மல்தான், மர்வ மல்வ என்னும் எல்லைக்குட்பட்ட நாடுகளிலும் இராச புத்தானாவிலும் காணப்பட்டனர். பள்ள என்பது மள்ள என்பதன் உச்சரிப்பு வேறுபாடு. சௌராஷ்டிரத்தில் வாழும் சாதியினருக்கு இப்பெயர் வழங்கும். அங்கு சூரியவழிபாடும், அவ்வழிபாட்டுக்குரிய பலகோயில்களுமிருந்தன.

ஆதிகாலந் தொட்டுத் தமிழருக்கிடையில் சிவ வணக்கத்தைப் போலவே [1]சூரிய வணக்கமும் இருந்தது. தத்துவ ஞானத்தை அறிவதன்முன் அவர் சூரியனையே வணங்கினார்கள் எனக் கூறலாம். ஈலம் அல்லது அக்காட்டிலுள்ள

[1] The Garuda Purana describes The Sivarchana in which Siva and Surya are brought together and invoked as one person e.g. (Siva - Suryaya namah). There are again references where in Siva is addressed only in the name of the Sun.

The Padma purana states that Uma Maheswara should be worshipped with (by uttering) the names of Surya and there is no difference between Siva and Sun—*Religions of India, p. 41—A. P. Karnakar.*

கட்மிரா (Cadmira) என்னுமிடம் தமிழரின் குடியேற்ற நாடாகும். பேபெல் (Babel) என்னும் இடம் சூரியன் கோயிலுக்குப் பேர்பெற்றது. பேபெல் என்பதற்குக் 'கடவுளின் வாயில்' என்பது பொருள். ஆகவே கட்மீரா என்னும் நகரம் பேபெல் என்னும் பெயரைப் பெற்றதோடு பேபெல் என்னும் கோயிற் பெயரிலிருந்து பாபிலோன் என்னும் பெரை ஈலம் பெற்றது. மேல் நாட்டறிஞர் கட்மீரா என்னும் பெயர் துரானிய உற்பத்திக்குரியதென்றும், பேபெல் செமித்திய உற்பத்திகுரிய தென்றுங் கூறு கின்றனர். ஆனல் பேபெல் என்னும் பொருளே கட்மீரா என்பதற்கும் உளதுஎன்று அவர் கூறுகின்றனர். அவர்கள் இரண்டு சொற்களுக்கும் ஒரே பொருள் கொண்டாலும் அவற்றின் உற்பத்தியைக் கூறும் முறையில் பிழை படுகின்றனர். கட்மீரா என்பது கதிரவம் என்னும் தமிழ்ச் சொல்லின் உச்சரிப்பு வேறுபாடு எனக் கூறலாம். பேபெல் என்பது பகல் என்னும் அடியாகத் தோன்றியது. வாய் என்பது வாயிலை உணர்த்தும். ஆகவே (பகல்+வாய்) சூரியனின் வாயில் என்னும் பொருளைத் தரும் 'பேபெல்' பாபிலோன் என உச்சரிப்பு வேறுபாட்டால் திரிபடைந்தது.

தமிழர் இரண்டு சாதியாராகப் பிரிவதற்குச் சமயமே காரணமா யிருந்ததெனத் தெரிகிறது. தென்னிந்தியாவில் தங்கினோர் சிவவழிபாட்டினர்; வட இந்தியாவில் தங்கினோர் சூரிய வழிபாட்டினர். தெற்கே இருந்து அகத்தியர் வடக்கே சென்று காசியில் அல்லது வாரணவாசியில் சைவ சமயத்தைப்பரப்பும் வரை வடக்கே சூரியமதமேயிருந்தது. ஐரோப்பாவிற் போலச் சமயம் தெற்கிலிருந்து மேலே பரவிற்று. வடக்குப் பிரிவினருள் மதுரை, பாஞ்சாலம், குரு முதலிய நாடுகளிலிருந்தவர்கள் சிவ வணக்கத்தைக் கைக்கொண்டனர். ஆற்றின் மறு கரையிலிருந்வதர்கள் பழைய கொள்கையுடன் வாழ்ந்தனர். சூரியனை வணங் கினோர் சூரியவமிசத்தினர் எனப்பட்டனர். சிவனை வணங்



கினோர் சந்திரவமிசத்தினர் எனப்பட்டனர். சிவபெருமான் முடியிற் சூடியிருக்கும் பிறை தமிழரைக் குறிப்பதோடு, அதைச் சூடுவதால் அவர் தமது மக்களைக் காப்பாற்று கின்ருர் என்பதையும் விளங்குகின்றது. இவர் இருபிரி வினரா யிருந்தபோதும், இவர் தாம் மனுவின் சந்ததியாகிய பொது உற்பத்திக்குரியவர்கள் என்னும் பழைய வரலாற்றை மறந்து விடவில்லை. கர்ணபரம்பரைக் கதைகள் பல வற்றைத் தொகுத்துக் கூறும் புராணங்கள் மனு என்னும் திராவிட அரசனைப் பற்றிக் கூறுகின்றன. சந்திர வமிசம் பழமை தொட்டே சூரியவமிசத்தைவிடப் பெருமை பெற்று விளங்கிற்று. இருபிரிவினரும் கொள்கையில் மாறுபட்ட போதும் ஒரு கடவுள் வணக்கமுடையவரா யிருந்தனர்.

தமிழரின் ஒரு தெய்வ வழிபாட்டைப் பார்த்து ஆரியர் சிருட்டித்த இந்திரன், தமிழர் கூறும் எல்லாம் வல்ல எங்கும் நிறைந்த கடவுளோடு ஒப்பிட முடியாமலிருந்தமையின் அவர் அதிதி என்னும் பிறிதொரு தெய்வத்தை உண்டு பண்ணினர். இத்தெய்வமும் முதன்மை எய்தியதாக இருக்கு வேத பாடல்களிற் சொல்லப்படவில்லை. அதிதி என்பதற்குப் பிரிக்கப்படாதது, முடிவில்லாதது, என்று முள்ளது என்னும் பொருள் வேதத்திற் சொல்லப்படுகின்றது. இந்திரன், வருணன் மித்திரன் சூரியன் ஆதியோர் முடிவில்லாத சத்தியாகிய தாயின் புதல்வர்வளென்றும், ஆதித்தர்க ளென்றும் சொல்லப்பட்டனர். அதிதியோடு ஒப்பிடத் தக்க கடவுளர் மற்றைய பழைய ஆரிய வகுப்பினரிடையே காணப்படவில்லை. இப்பெயர் இந்திய நாட்டில் தோன்றியது என்பதற்கு அறிகுறியாக அப் பெயரில் கடவுள் என்னும் சொல்லின் பொருள் தொனிக்கின்றது. கடவுளைத் தாய், அவன், அவள், அது என வழங்கும்முறை தமிழர்களுக்கு மாத்திரம் உரிய தொன்ருகும். வேதங்களில் இவ்வாருன புதிய வழக்குகள் காணப்படுகின்றன. இது இரண்டு சாதி

யார் ஒருமித்துக் கலந்தமையால் ஏற்பட்டது[1]. இப்பொருள் பற்றி ஐரோப்பிய ஆசிரியர்கள் வேண்டியளவு எழுதியிருக்கின்றனர். கடவுள், படைத்தல் காத்தல் அழித்தலாகிய இறைவனின் முழுமுதற் றன்மை, மறுபிறப்பு, வினைப்பயன் முதலிய கொள்கைகளை ஆரியர் அறியாரென்றும், அவற்றையெல்லாம் பிறரிடமிருந்து அறிந்திருக்கிறார்களென்றும் அவ்வாசிரியர்கள் கூறியிருக்கின்றனர். இதை நாம் வழிமொழிகின்றோம். ஆரியர் பூர்வ குடிகளோடு கலந்தபின் தமது பழைய மதத்தையும் நாகரிகத்தையும் கைவிட்டுப், பூர்வ குடிகளுக்குரிய கொள்கைகளைப் பின் பற்றினார்களென்று முன் விளக்கியுள்ளோம்[1]. இந்து ஆரியருக்கும் மற்ற ஆரியருக்கும் உள்ள சமயத் தொடர்பு அறியமுடியாமலிருப்பது ஆச்சரியப்படத்தக்கதன்று.[2]

ஒன்றைக் கொடுத்து ஒன்றை வாங்குவது போலக் கடவுளுக்குச் சிலவற்றைக்கொடுத்துப் பதில் உபகாரமாகச் சிலவற்றைக் கேட்பதாகிய வழிபாட்டு முறையையே ஆரியர் அறிந்திருக்கின்றனர். அவர் கடவுள், உயிர் என்பவற்றின் தத்துவங்களை அறியவில்லை. அவர் இயற்றிப் போந்த

[1] Among such dense Dravidian masses the small Aryan influxes would make slow progress and we must not be misled by their adopting as their own the chiefs, heroes, Gods and histories of Turanian; for all people have acted so whether they arrived as conquerors or colonists among settled countries—see specially the histories of Babylonia or Akkadia, Assyraya —*S. S. I. S. O. Comparative religions—G. R. Forlong.*

[2] They accepted the Dravidian doctrine of Karma (deeds) as governing the nature of birth and rebirth. In *samsara* (the universe) and declared Moksha (release of birth and rebirth) released through direct spiritual experience about by contemplating of goal of life—*The Hindu view in art, p. 14—Maluk Ray Anand.*



கிரியைகளால் இவையிற்றை அறிய முடிவதன்று. தமிழரின் ஞானம் உயர்ந்த உண்மைகளை அடிப்படையாகக் கொண்டதாதலின் அது அசைவில்லாதிருந்தது. இராசபுத்தானத்தில் வாழ்ந்த ஆரியர் தமிழ் மதத்தைத் தழுவி, அதன் வளர்ச்சிக்குப் பெரிதும் முயன்றிருக்கின்றனர். கி. மு. 1000-க்கும் 200-க்கு மிடையிலுள்ள சூத்திர காலத்தே பல சூத்திர இலக்கியங்களை அவர்கள் செய்தனர். இராசபுத்திரரின் அதிகாரத்தில் பிராமணர் மிக்க ஆதிக்கம் பெற்றனர். திருத்தம் என்னும் பெயருடன் இவர் பல கேடுகளைச் செய்தனர். குருக்கள்மாரின் அதிகாரத்தால் பல நற்கருமங்கள் விலக்கப்பட்டன. புராணமதம் ஆரம்பித்தது. புதிய சத்திரியராகிய இராசபுத்திரர் நிலைநாட்டிய புராணமதம் கி.பி. ஐந்தாம் நூற்றுண்டில் ஆரம்பமாயிற்று. முற்காலத்தில் சத்திரியர், பிராமணரிலும் மேலானவர்களாகக் கொள்ளப்பட்டனர். பிராமணர், சத்திரியரின் மேற் பார்வையின் கீழ் பொருளுக்காக யாகங்களை நடத்தினர். இக்கிரியைகளைச் செய்வதற்காக அவர் அம் மந்திரங்களையும், பாடல்களையும் மனப்பாடஞ் செய்தனர். பலர் மந்திரங்கள், பாடல்களின் பொருளை அறியார். கல்வி சத்திரியனுக்கு உரியதாயிருந்தது. பொதுவான பிராமணனைவிடச் சத்திரியன் கல்வி அறிவுடையவனாக விருந்தான். சமய உண்மைகளும் ஞானங்களும் சத்திரியராகிய இராசாயனரால் வெளியிடப்பட்டன.

படை எடுத்து வந்தவர்களாகிய இராச புத்திரர் பிற்காலத்தில் இந்திய நாட்டுக்குத் தலைவராயினர். இவர்களுக்குப் பழைய சரித்திரமாவது, சத்திரியருக்குரிய சரித்திரப் பெருமை யாவது இல்லை. இவர் பிராமணர் தமக்கு மேலானவர் எனக் கொண்டனர்; தாம் சத்திரியர் என்று அழைக்கப்படும் புகழை விரும்பி இராச்சியங்களைப் விரிவுப்படுத்தினர். பிரமாணர் தாம் மேலானவர் என்பதை எல்லா இடங்களிலும் நாட்ட முடியவில்லை. வட இந்தியாவில் தங்கள் முதன்மையை நாட்டுவதிலும் நூல்களைத் தம் எண்ணப்படி கையாளுவதி

லும் அவர்களுக்கு வில்லங்கம் ஏற்படவில்லை. தென் இந்தியாவில் இவ்வாறிருக்கவில்லை. அங்கு கி. பி. 10-ஆம் நூற்றண்டுவரை பிராமணர் கீழாகவே கருதப்பட்டனர். ஆகவே அவர்களுடைய வாழ்க்கை சிறப்படையவில்லை. இன்றும் அவர்களைக் குரவர்களாகத் தென்னிந்தியர் ஏற்றுக் கொள்வதில்லை. கி. பி. 8-ஆம் நூற்றண்டு முதல் 10-ஆம் நூற்றண்டு வரையுள்ள காலம் சரித்திரத்தின் இருட் காலமாகும். இராசபுத்திரர் பழைய இராச்சியங்களை வென்று கைப்பற்றியபோது ஒவ்வொரு சாதியினரும் (Caste) முதன்மைக்காகப் போராடினர். இராச புத்திர அரசரின் துணையைக்கொண்டு பிராமணர், அரச அவைகளிற் குருக் களாக அமர்ந்தனர். இராச்சிய சம்பந்தமான கலகங்க ளெல்லாம் சமயத்தின் பெயரால் நடந்தன. இக்கலகங்கள் நாட்டின் நன்மைகளைப் பலவழியில் தடுத்தன. இக் காலத்தில் தமது பெருமையை நாட்டுவதற்குப் புராணங்கள் பிராமணரால் எழுதப்பட்டன ; வட இந்தியாவிற் செய்தது போலவே தென்னிந்தியாவிலும் தமக்கு இடையூறு எனக் கண்ட நூல்களை இனி ஒரு போதும் உலவாதபடி அழித் தனர் ; மாற்றியும் கூட்டியும் திருத்தியும் எழுதினர். பிரா மணரும் பிறரும் முதன்மைக்காகப் போராடிய காலத்துத் தோன்றிய பாடல்கள் பல தமிழிற் காணப்படுகின்றன. சிவ வாக்கியர் கொங்கணர் முதலானேர் ஒரு தெய்வக் கொள்கையை வற்புறுத்தியும் பிராமணருடைய பல தெய்வக் கொள்கையை மறுத்தும் பாடல்கள் செய்தனர்.

இவ்வாறு தமிழரின் வலிகுன்றிய காலத்தே பழைய தமிழ் முனிவர்களால் தீது என ஒதுக்கப்பட்ட சாதிக் கோட் பாடு தலை எடுத்தது. சாதிப் பிரிவினையால் தமிழ்ச் சாதியின் வளர்ச்சி குன்றிற்று. இது பிராமணரின் ஆதிக்கம் மேற் பட்ட புராண காலத்தில் ஆரம்பித்தது. தமிழ் நாட்டில் ஒழுக்கமும் தொழிலும் பற்றிச் சில பிரிவுகள் தோன்றி யிருந்தபோதும் எல்லோ ரிடையும் உண்பதும்



மகட்கொடை முதலியனவும் நின்று விடவில்லை. அந்தண மரபினராகிய சுந்தரர், பரவை சங்கிலியார் என்னும் இரு தாழ்ந்த வகுப்புப் பெண்களை மணந்ததும், வேளாளராகிய அப்பர் அடிகளை அந்தணராகிய அப்பூதி அடிகள் உடன் வைத்து உண்டதும் போதிய சான்றுகளாம். 10-ஆம் நூற்றண்டு வரை இவ்வாறன நிழ்ச்சிகள் நடைபெற்ற தற்குப் போதிய பிரமாணங்களுண்டு. 13-ஆம் நூற்றண்டில் அந்தணராகிய அருணந்தி சிவாச்சாரியார் வேளாளராகிய மெய்கண்ட தேவரிடத்தில் தீட்சை பெற்றார். அந்தணராகிய உமாபதி சிவாச்சாரியார், வேளாளராகிய மறைஞான சம்பந்தர் என்னும் குரு உண்ட சேடத்தை உண்டார்.

அக்காலத்தே ஒவ்வொருவனது விலை மதிப்புக்குரிய செல்வம் சமயமும் கல்வியுமாக விருந்தது. எல்லா வகுப்பி னரும் சாதிபேதமின்றி ஆலயங்களில் வைக்கப்பட்டிருக்கும் மூர்த்திகளுக்கருகில் தடையின்றிச் சென்று வணங்கினர். அறுபத்துமூவர் எனச் சைவர்கள் போற்றும் அடியார்கள் பலசாதிகளைச் சேர்ந்தவர்களாகக் காணப்படுகின்றனர். "ஆவுரித்துத் தின்றுழலும் புலையரேனும் கங்கைவார் சடைக்கரத்தார்க் கன்பராகில்—அவர் கண்டீர் நாம் வணங்கும் கடவுளாரே" என அப்பர் சுவாமிகள் கூறுகின்றார்.

பிற்கால அரசரால் பிராமணருக்குப் பெருமை ஏற்பட் டாலும், மக்கள் பிராமணரை ஏற்றுக்கொள்ளவில்லை. பிராமணர் நடந்து கொள்ளும் முறையை மற்றவர்கள் விரும்பவில்லை. ஆகவே அவர் பிராமணரைத் தம்மினின்றும் நீக்கினர். மற்றவர் எல்லோரும் வீடுகளிற் கூடி உடனிருந்து விருந்து கொண்டாடினர். புதிதாகக் கிடைத்த மதிப்பைப் பாதுகாப்பதற்காகப் பிராமணரும் மற்றவர்களின் தொடர்பை விட்டனர். இதுவே தென்னிந்தியாவில் முதன் முறையாகத் தோன்றிய சாதிப் பிரிவாகும். தென்னிந்திய

பிராமணர் தமிழர் என்றே முன்னேரிடத்திற் கூறியிருக்கின்றோம். வட இந்திய பிராமணருக்கும், தமிழருக்கும் சில சந்ததிகள் தோன்றியிருக்கலாம். காலப் போக்கில் இருபகுதியினருக்கும் பகைமை அற்றுப் போனாலும் இப்பொழுதும் மாறுன நிலைமையே இருந்து வருகின்றது. மற்றவர்களுக்கும் இவர்களுக்கும் இடையில் உடனிருந்து உண்பதும், பெண்கோடல் முதலியனவும் இன்றும் நடைபெறுவதில்லை. உணவும் தண்ணீரும் கொடுக்க மறுப்பது சாதிப் பிரட்டத்துக்கு அறிகுறியாகும். இவ்வுண்மை மறக்கப்பட்டு, அவை உயர்ந்த சாதிக்குரிய அறிகுறிகள் என்று தவருகக் கருதப்படுகின்றன. கம்மாளர், பிராமணர் வீடுகளில் உண்பதில்லை; இதனல் அவர்கள் தாம் பிராமணரிலும் மேல் எனக் கருதுகின்றனர். பிராமணன் வீட்டிலும் வேளாளன் வீட்டிலும் உணவு கொள்ளும் வண்ணான், கம்மாளன் வீட்டில் உணவு கொள்ள மறுக்கிறன். இவையெல்லாம் அன்னியருடைய பார்வைக்கு ஆச்சரியமாகத் தோன்றும். தமிழ் நாட்டில் ஒவ்வொருவனும் தனது சாதியைப் பற்றிப் பெருமை பாராட்டுகின்றன். பறையன் தனது குலத்தைப் பெருமை பாராட்டிப் "பார்ப்பானுக்கு மூப்பன் பறையன் கேட்பாரின்றிக் கீழ்ச்சாதியானேன்" என்னும் பழமொழியை எடுத்துக் கூறுகின்றன்.

சாதிப் போராட்டம் மூன்று நூற்றாண்டுகளாக நடந்தது. கொள்கைகள் எப்போதும் ஒரு மாதிரி இருப்பதில்லை. பிராமணரை ஆலயங்களினின்றும் நீக்கவும் அவர்களுடைய அதிகாரத்தைக் குறைக்கவும் முடியாமல் போகவே ஒவ்வொரு வகுப்பினரும் தமது சமயச் சடங்குகளை இயற்றுவதற்குத் தங்களுக்குள் கல்வி அறிவு ஒழுக்கங்களிற் சிறந்த ஒவ்வொருவரைக் குருக்களாகத் தெரிந்தெடுத்தனர்.

தென்னிந்திய சமயநிலையங்கள் ஒவ்வோர் குருவின் கீழ் இருந்தன. அக்குரு பிராமண வகுப்பைச் சேர்ந்தவராயிருப்பது அரிது. தென்னிந்தியரின் சமயக் கொள்கைகளை



அறியாத மேல் நாட்டார் புராண மதமும் சங்கராச்சாரியாரின் மாயாவாதமுமே அவர்களுடைய சமயம் என்று எழுதுகின்றனர். இந்தியாவைக் குறித்து எழுதிய மேல் நாட்டு ஆசிரியர்கள் வட இந்தியாவில் இருந்தே எழுதியிருக்கின்றனர். பிராமணர்களிடமிருந்தே அவர் நூல் எழுதுவதற்கு ஆதாரங்களைப் பெற்றிருக்கின்றனர்; இன்னும் சங்கரர் சமக்கிருதத்தில் எழுதிய சமயக் கோட்பாடுகளை மாத்திரம் படித்து அவர் தமது கருத்துக்களை வெளியிட்டிருக்கின்றனர். சங்கரர் தென் இந்தியராயிருந்த போதும் அவரது கொள்கையைத் தென்னிந்தியர் ஏற்றுக்கொள்ளவில்லை. தமிழரிற் பெரும்பாலோர் சித்தாந்த சைவர். அதனேடு மாறுபட்ட சங்கரரும், அவர் கொள்கையும் தெற்கிற் கவனிக்கப்படாமையால் அவர் வடக்கே சென்றர். அங்கு அவருடைய மதத்துக்குப் பெருமை அளிக்கப்பட்டது. இதனல் சங்கரர் செல்வதன் முன் வடக்கே உள்ளவர்கள் சிறந்த மதக் கொள்கை இல்லாதிருந்தார்களென விளங்குகின்றது. சங்கரரின் மதத்தைப்பற்றி ஆராய்ந்து எழுதிய மேல் நாட்டார் இந்தியாவிற் கவனிக்கக் கூடிய மதக்கொள்கை இது ஒன்று மாத்திரம் எனக் கருதினர். இதனிலும் மேலான மதக்கொள்கை ஒன்று தெற்கே உண்டு என்பதை மேல்நாட்டவர் இப்பொழுது தான் உணர ஆரம்பித்திருக்கின்றனர். தென்னிந்தியரின் சிவமதம் அந்நாட்டுக்கே சொந்தமானது. அதன் கொள்கைகள் தமிழ் மதத்தைப் பின்பற்றியன. சாத்திர-மும் சமயமும் ஒன்றோடு ஒன்று அணைந்து சென்றன சங்கராச்சாரியார் தமது மதக் கொள்கைகளை வடக்கே பரப்புவதற்கு 2000 ஆண்டுகளுக்கு முன், அகத்தியர் காசியில் (வாரணவாசி) பரப்பியதும் பழைய முனிவர்களால் ஆதரிக்கப்பட்டதுமாகிய சமயமும் இதுவே. இச்சமய உண்மைகள் ஆகமங்கள் என்னும் சைவ நூல்களிற் பொதிந்து கிடக்கின்றன. சமக்கிருதத்தில் மொழி பெயர்க்கப்படாத ஆகமங்கள் அழிக்கப்பட்டன. சமக்கிருத

மொழி பெயர்ப்புகள் மூலத்தைச் சரியாகப் பின்பற்றிச் செய்யப்பட்டனவோ என்பது ஐயத்துக்கு இடம். பிற் காலத்திற் புராணமெழுதியவர்கள் காமிகம், காரணம், சுப்பிரபேதம், ரௌரவம், சுவாயம்புவம், வாதுளம், யோகசம், சிந்தியம், அசிதம், தீப்தம், சூக்குமம், சகச்சிரம், அஞ்சுமான், விசயம், நிச்சுவாசம், ஆக்கினேயம், வீரம், மகுடம், விமலம், சந்திரஞானம், முகவிம்பம், பாரமேசுவரம், புரோற்கீதம், இலளிதம், சித்தம், சந்தானம், சர்வோத்தம் கிரணம் என ஆகமம் இருபதெட்டு என்று கூறியிருக்கின்றனர். புராணங்களுக்குத் தலைமையான ஸ்கந்தத்தின் ஒரு பகுதியான சூதசங்கிதை ஆகமங்களின் பெயர்களை முதலிற்கூறி, அவற்றை ஆக்கியோன் ஈசுவரன் என்று கூறுகின்றது; அது புராணங்களை மனிதர் செய்தார்கள் என்றும் குறிப்பிடுகின்றது. ஆகமங்கள் சரித்திர காலத்துக்கு முற்பட்ட பழமையுடையன என்பது உண்மை. அவை இருக்கு வேதத்தை ஒத்த பழமையுடையன, அல்லது உபநிடதங்களுக்கு முற்பட்டன. ஆரியர், தமிழ் மதத்தைப் பின்பற்றிய போது எழுதப்பட்ட உபநிடதங்களில் ஆகம உண்மைகள் காணப்படுகின்றன.

'சிவன் தமிழர் கடவுள்' என்பதை எல்லோரும் ஒப்புக்கொள்கின்றனர். சிவமதம் அல்லது தமிழ் மதம் தமிழருக்குரியதென ஒப்புக் கொண்டால், ஆகமங்கள் தமிழரால் தமது மொழியில் எழுதப்பட்ட நூல்கள் என்று ஒப்புக்கொள்ள நாம் ஏன் பின்நிற்க வேண்டும்.[1] மதசம்பந்தமான

[1] "தமிழ் மண்டல மைந்துந் தாவியஞானம்"
"உமிழ்வது போல வுலகந் திரிவர்
அவிழு மனமுமெம் மாதியறிவுந்
தமிழ் மண்டல மைந்துந் தத்துவமாமே"
"சதா சிவந் தத்துவ முத்தமிழ் வேதம்"
"செந்தமிழாதி தெளிந்து வழிபடு
நந்தியிதனை நவமுரைத்தானே"



எல்லாத் தமிழ் நூல்களும் ஆகமங்களையே ஆதாரமாகக் கொண்டன. மத இலக்கியங்கள் மாத்திரமல்ல, பாரதநாட்டில் தோன்றிய சமயக் கொள்கை ஒவ்வொன்றுக்கும் ஆதாரம் இத் தமிழ் ஆகமங்களில் தானுண்டு. திருமூலர், தமது திருமந்திரம், ஆகமங்களின் சாரம் எனக் கூறுகின்றார். இவர் கி. பி. ஐந்தாம் நூற்றாண்டில் விளங்கியவரெனக் கருதப்படுவர். இக்காலம் ஸ்கந்தத்துக்கு முற்பட்டது. ஸ்கந்த புராணத்துக்குச் செய்தது போலவே, பின்வந்தவர்கள் திருமந்திரத்திலும் பலவற்றைச் சேர்த்தும் திருத்தியும் மாற்றியும் இருத்தல் கூடுமென்று கருத இடமுண்டு. திருமந்திரத்தாலும் புராணங்களாலும் புராணகாலம் வரை ஆகமங்கள் இருந்தன என்று கருத இடமுண்டு. புராண மதத்தில் நம்பிக்கை பரவத் தொடங்குதலும், அக்கொள்கைகளுக்கு மாறாயிருந்த ஆகமங்கள் இறந்தன போலும்.

மேல்நாட்டாசிரியர்கள் ஸ்கந்தம் கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டில் எழுதப்பட்ட நூலெனக் கூறுகின்றனர். பேராசிரியர் பண்டால் (Prof. Bandall) கி. பி. 6-ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்ட பிரதி ஒன்று தமக்கு நேபாளத்திற் கிடைத்ததென அறிவித்திருக்கின்றார். இதனால் புராணங்கள் கி. பி. 9-ஆம் நூற்றாண்டில் இருந்தன என்பதில் ஐயமில்லை. தென்னிந்திய ஆலயங்களைப் பற்றியும், தென்னிந்திய சமயக் கொள்கைகளைப் பற்றியும் புராணங்கள் கூறுகின்றமையின் அவை தென்னிந்தியாவில் எழுதப்பட்டனவே. இவை, புராணம் என்னும் பெயர் பெற்று வடக்கே செல்ல இரண்டு நூற்றாண்டுகளாவது பிடித்திருக்கும். ஆகவே புராணங்கள் கி. பி. நாலாம் நூற்றாண்டில் எழுதப்பட்ட நூல்கள் எனக்

"ஈறுல கன்னி குமரியே காவிரி
வேறு நவதீர்த்த மிக்குள்ள வெற்பேழுட்
பேறுன வேதாகமமே பிறத்தலான்
மாறுத தென்றிசை வையகஞ் சுத்தமே"
(திருமந்திரம்)

கூறுதல் நியாயமாகும்.[1] அவை ஒன்பது அல்லது பத்தாம் நூற்றாண்டு வரை பலரால் எழுதிச் சேர்க்கப்பட்ட பலவற்றைக்கொண்டு தொகுக்கப்பட்டனவாகும். நேபாளத்திற் காணப்பட்ட புராணம் சங்கராச்சாரியரால் எழுதப்பட்டதாகுமெனக் கருதுகின்றோம். டெலாங் (Mr. Telang) என்னும் ஆசிரியர், சங்கராச்சாரியர் கி. பி. ஆறும் நூற்றாண்டில் இருந்தாரென் ப்தற்குப் பல ஆதாரங்கள் காட்டியிருக்கின்றனர். * கி. பி. ஏழாம் நூற்றாண்டின் முற்பகுதியில் ஹர்சவர்தன என்னும் நேபாள அரசன் சங்கராசாரியரின் மாணவன் ஆனான். இவன், தன் மகனுக்குச் சங்கரவர்தான என்று பெயரிட்டான். சிவ புராணங்களும் ஸ்கந்த புராணமும் ஆகமங்களைவிட ஸ்மிருதிப் பிரமாணங்களைப் புகழ்ந்து ஆரிய வேதங்களுக்கு முதன்மை கொடுக்கின்றன. புராணங்களின் பெயரால் இவ்வாறு கூறும் பகுதிகள் சங்கராச்சாரியாரால் அல்லது அவர் மாணவரால் சேர்க்கப்பட்டனவாதல் வேண்டும். சங்கராச்சாரியரும் அவர் மாணவரும் சைவசமயத்தவராயினும், அவர்கள் மிருதிகளைப் பிரமாணமாகக் கொண்டனர். அவர்களின் சாதனை ஆகமங்களுக்கு மாறாக இருந்தது. ஆகமங்களைக் கீழ் நிலையில் உள்ளவர்களுக்கும் வேதங்களை மேல் நிலையிலுள்ளவர்களுக்குமாகக் கடவுள் அருளிச்செய்தார் என அவர்கள் நம்பினார்கள்.

---

[1] The Puran in an earlier form were known to the Dharmasastra warriors of the 6th century B. C. But undoubtedly the text of the great epic as it has come down to us and of the major Puranas were re-arranged added and edited in the Gupta period in such a manner as to make them completely new literature.—*A Survey of Indian history—p. 67.—K. M. Panikar.*

* Indian antiquary, Vol. XIII, p. 95.

*இவர் காலம் கி. பி. 8-ஆம் நூற்றாண்டு எனக் கொள்ளப்படுகின்றது.*



ஆகமக் கொள்கையாகிய தமிழ் மதத்துக்கும் வேதக் கொள்கையாகிய ஆரிய மதத்துக்கும் போராட்டம் இருந்ததெனப் புராணங்களைக் கொண்டு அறியலாம். இவ்விரண்டையும் சந்துபடுத்தவே புராணங்கள் எழுதப்பட்டன. புராணங்களை எழுதினோர் ஸ்மார்த்தராகக் காணப்படுகின்றனர். அவர்கள் ஆகமங்களிற் பற்றில்லாமற் போனதோடு ‘கடவுளைப் பற்றிய உண்மைகளை வேதங்களில் மாத்திரம் காணலாம், ஆகமங்களாற் பெறப்படும் ஞானம் பயனற்றது’ என்று துணிவாக எழுதியிருக்கின்றனர். இவ்வாறு சூத சங்கிதையிலும் சொல்லப்படுகின்றது. இக்கொள்கை மறுக்கப்படாமலிருக்கவில்லை. “கடவுளைக் கண்டு கொண்டும் வேதங்கள் கடவுளைத் தேடுகின்றன” என்று தமிழ் முனிவரெல்லோரும் கூறினர்.

புராணக் கதைகள், புராணங்கள் எழுதப்பட்ட காலத்து நிகழ்ச்சிகளல்ல. புராணம் என்பதற்குப் பழமை யுடையது என்று பொருள். புராணங்களில் தமிழரின் பழைய கர்ண பரம்பரைக் கதைகள் காணப்படுகின்றன. தமிழருக்கும் அவரது பிரிவினராகிய அக்கேடிய சாலடியர்களுக்கும் பொதுவா யுள்ளவற்றுள் சலப்பிரளயம், உலக சிருட்டி, உகம் முதலிய வரலாறுகள் சில. இச்செவி வழிக் கதைகளோடு கட்டுக் கதைகளும், பொய்க் கதைகளும் சேர்க்கப்பட்டுள்ளன.

பிராமணரின் பெருமையை விளக்குவதற்காகவே புராணங்கள் எழுதப்பட்டன.[1] கடவுள் மணஞ் செய்து மக்களைப்

---

[1] Pargiter in his Puranic traditions in Indian history has brought together a volume of evidence which establishes that the claim of Brahmin superiority was for long resisted by the warrior classes—many of whom were non-Aryans—and a later day idea of unquestioned Brahman superiority in caste is the outcome of a large scale of rewriting of books and the use of the systems of education for this purpose —*A survey of Indian history—K. M. P.*

பெறுதல், ஐயனுர் பிறத்தல், முருகக் கடவுளின் இயற்கைக்கு மாருன பிறப்பு ஆதியவற்றைக் கூறுதல் புராணமெழுதியவர்களின் மனுேபாவனையைப் பொறுத்ததாகும். புராணமெழுதியவர்கள் சில சமயங்களிற் கடவுளைப் பசாசுகளுக்கும் கீழான நிலையிற் கொண்டுவந்து விட்டிருக்கின்றனர்.

ஆரிய வேதங்களைச் சூத்திரராவது பெண்களாவது தொடுதல் ஆகாது. சூத்திரர் அல்லது எந்த வருணத்துப் பெண்ணுவது வேதங்களை வாசிக்கவும் கேட்கவும் கூடாது. ஆகவே பெண்களும் சூத்திரரும் மோட்சத்துக்கு அருகரல்லர். தமிழருடைய சமயம் ஆடவர் மகளிர் என்ற வேற்றுமையின்றி எல்லோருக்கும் பொதுவானது. பிரதி பலனை விரும்பாத அன்பே தமிழர் சமயம். யாகங்கள் வாயிலாகக் கடவுளருடைய பசியையும் தாகத்தையும் தணித்தால் அக் கடவுளர் பதில் உபகாரமாகச் சில நன்மைகளைப் புரிவர் என்று ஆரியர் கருதினர். தமிழரின் கடவுள் அன்பே:

*"அன்புஞ் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்*
*அன்பே சிவமாவ தாரும் அறிகிலார்*
*அன்பே சிவமாவ தாரு மறிந்தபின்*
*அன்பே சிவமாய் அமர்ந்திருந் தாரே"*

எனத் திருமூலர் கூறுகின்ருர்.

முற்காலச் சைவத்துக்கும், இக்காலச் சைவத்துக்கும் வெகுதூரம் உண்டு. தமிழர் ஆரியர் கலப்பும், பொய்யும் புளுகும் புனைந்து பிராமணர் கட்டிய புராணங்களுமே இதற்குக் காரணம். முற்காலப் பிராமணர் உண்மை ஞானத்தில் ஆர்வங் கொண்டிருந்தனர். அவருக்குப் பின் தோன்றினுேர் ஞானமின்றிப் பிறப்புரிமையைத் தமது பெருமைக்கு அடிப்படை எனக்கொண்டனர். பிறர் குற்றங் காணுவார்கள் என்ற அச்சத்தால் தம் முன்னுேர் மறைத்து வைத்திருந்த வேதங்களையும் பிராமணங்களையும், பிற்போக்குடைய இவர்கள் ஆதரிப்பதோடு, தாம் தமிழரிடம் கற்றுக் கொண்ட ஞானங்களும் வேதங்களில் உண்டு, எனக் கூறினர்.



இடியையும் முழக்கத்தையும் உண்டுபண்ணும் பயங்கரமான [1]உருத்திரனைச் சாந்தமும் அன்பும் வடிவாகிய சிவன் என்று கூறினர். பின் விட்டுணு பிரமா என்னும் இருவரோடும் சிவனைச் சமமாக வைத்து இழிவு படுத்தினர். இவ்வாறு மும்மூர்த்திகள் எனக்கொண்டு சிவனுக்கு அழித்தற்றெழிலை உரிமையாக்கினர். சிவனே* ஐந்து தொழில்களையும் செய்கின்ருர் என்று இன்றும் தமிழர் கொள்கின்றனர். 'அவர் மும்மூர்த்திகளுக்கும் அப்பாற்பட்டவர்' என்று முனிவர்கள் பாடியிருக்கின்றனர்.

*"அரியுமல்ல அரனுமல்ல அயனுமல்ல வப்புறம்*
*கருமை வெம்மை செம்மை கடந்து நின்ற காரணன்*
*பெரிதுமல்ல சிறிதுமல்ல பெண்ணு மாணுமல்லவே*
*துரிதமுங்கடந்து நின்ற தூரதூர மே."*

எனச் சிவவாக்கியர் கூறுகின்ருர்.

தமிழர் அன்பைக் 'கடவுள்' என்றனர். அன்பினின்றும் பிரிக்கவொண்ணுத அருளைச் சத்தி உமை அல்லது அம்மை என்றனர். உருத்திரனைச் சிவனெனக் கூறியது

[1] Rudra seems to have been another God of the Dravidian speaking tribes. His name, too, Rudra meaning the Red One seems to be a translation of the Dravidian name Siva (which is the Dravidian word for red) later on adopted for the same God. His (Vishnu's) name is probably derived from the Dravidian root *Vin* the sky. Probably Varuna who was the God of the tribes living in the borders of the sea, to whom the Rishis accorded a place in their pantheon. The etymology of the name is obscure —*The age of the Mantras, pp. 124, 125.*

* *படைத்தல், காத்தல், அழித்தல், அருளல், மறைத்தல்.*

மன்றிப் பயங்கரமான துர்க்கை அல்லது காளியைச் சிவனது மனைவியாகவும் புராணகாரர் எழுதிவைத்தனர். துர்க்கை, காளி முதலிய பெயர்கள் அக்கினியின் ஏழு நாக்குகளுக்குப் பெயராக வேதங்களிற் சொல்லப்படுகின்றன. அங்கு சொல்லப்பட்ட உருத்திரன் அக்கினியாவான். அன்பும், அருளுமெனத் தமிழர் கொண்டமுறை புராணங்களுக்கும் பிராமணருக்கும் விரோதமாயிருந்தது. ஆகவே அவர்கள் சத்தியென்பது வேறு பெண் தெய்வம் எனக் கருதினர். சிவபெருமானது மனைவியைப்பற்றி அவர்கள் விநோதமான கதைகளைக் கற்பித்திருக்கின்றனர். சதபதப்பிராமணத்தில் 'பார்வதி யாகம் செய்தார்,' என்று சொல்லப்படுகின்றது. ஆனல் சிவனுடைய மனைவியும் தக்கனுடைய மகளுமாகிய பார்வதி யாகத்தில் உயிர் விட்டாள் என்றுபுராணகாரர் சேர்த்து எழுதியிருக்கின்றனர். கேனோ உபநிடதத்தில் உமாஹய்மாவதி இந்திரனுக்குப் பிரமனுடைய தன்மையைக் கூறுகின்றார். இந்த உமாஹய்மாவதி இமயமலையிற் பிறந்தாளென்று புராணங்கள் கூறுகின்றன. இவையெல்லாம் புராணக் கற்பனைகள்.*

பழைய சித்தாந்த முறையாற் கடவுளை விளக்குவதற்கும், பிராமணருடைய புராண முறையாற் கடவுளை விளக்குவதற்கும் உள்ள தூரம் மிகப் பெரிது. கடவுள் "அம்மை அப்பர்" என்னும் தன்மையரென்பது சித்தாந்தத்தின் துணிபு. புராணமதத்துக்கு முன் இதுவே தமிழர் கொள்கையாகவிருந்தது. தமிழர்களின் மனம் உண்மை நெறியை நாடுவதாயிருந்தது. எல்லா உலகங்களும் கடவுளின் ஆணையால் நடைபெறுகின்றன என்றும், அவை எல்லாம் அவரிடத்தில் ஒடுக்கம் என்றும், தன்னயமற்றிருத்தலினல் மோட்சம் கைகூடு மென்றும், மற்றவர்களுக்குத் தருமஞ் செய்ய வேண்டு மென்றும் தமிழ் மக்கள் நம்பினர்கள்.

*Ancient India, p. 651—R. C. Dutt.



ஆரியருடைய பிராமணங்கள் அல்லது பிற்காலப் புராணைக் கொள்கைகள் தமிழருடைய நியாய முறையான கொள்கைகளைத் தமிழ் நாட்டினின்று அகற்ற முடியவில்லை. ஆரிய மதக் கலப்பினல் தமிழர் சமயம் நிலை குலைந்தது. அப்பொழுது பௌத்த சமயந்தோன்றி அக்காலத்துக்கேற்றவாறு பொய்யான கொள்கைகளை எதிர்த்தது. ஓர் ஆயிரம் வருடங்களுக்குப்பின் பிராமணர் அதை நெருப்பாலும் வாளாலும் போராலும் இந்தியாவினின்றும் துரத்தினர். இம்மதத்தை எதிர்த்த மதங்கள் சீவனைப் பெற்றன.

புராண மதந்தான் சரியான இந்துமதமென அயல் நாட்டவர்கள் நினைக்கின்றனர். அதில் தமிழருடைய கொள்கைகள் முற்றுக இருக்கின்றனவென்று கூறமுடியாது. இப் புராண மதத்தை முனிவர்கள் எதிர்த்தார்கள். ஆயினும் அறியாமையுடைய மக்களின் உள்ளத்தில் புராணக் கொள்கைகள் பதிந்து விட்டன. பிராமண மதத்தினற் கெடுதியுற்றபோதும் தென்னிந்திய சமய ஞானம் சித்தாந்தம் என்னும் பெயரோடு இன்றும் வழங்குகின்றது.

சித்தாந்த சாத்திரம் மெய்கண்ட தேவரால் 13-ஆம் நூற்றுண்டிற் செய்யப்பட்டது. அச்சாத்திர ஞானம் ஆகமங்களை ஆதாரமாகக் கொண்டது. இந்தியாவில் எவ்வகையான சமயந்தோன்றினுலும் அதற்கு அடிப்படையாயுள்ளது தமிழ் ஞானத்தைக்கூறும் ஆகமமே. ஆகமங்கள், தமிழ் ஞானத்தையும்[1] தெக்கணமூர்த்தியாயிருந்து அவையிற்றை அருளிச்செய்த கடவுளைப் பற்றியும் கூறுகின்றன. தெக்கணமூர்த்தி என்பதற்குத் தென் தேசத்துக் கடவுள் என்பது பொருள். [2]ஆகமங்களைக் கடவுள் மகேந்திரமலையிலிருந்து

[1] அஞ்சோடிருப த்துமூன்றுள வாகமம் (திரும)
"சதாக்கிய மென்னுந் தத்துவத்தில் வீற்றிருந்து
சதாசிவ னமலன் ருன்"
"நயந்தாருயி ரேல்லா நண்ணை வறமாதி
யியபமபின முகமநா லேழு" (சைவசமயநெறி)

சொன்னார் என்று ஐதீகம் உண்டு. மகேந்திரமலை, திருநெல்வேலிக்கும் திருவிதாங்கூருக்கு மிடையில் மேற்குக் காற்றாடிமலையிலுள்ள பொதிய மலையிலுள்ளது. மூல ஆகமங்களில்லாமையால் இதைப்பற்றி அதிகம் கூறமுடியாமலிருக்கின்றது. இப்போது கிடைத்திருக்கும் விபரங்களால் ஆகமங்கள் பல இருந்தனவென்றும் அவற்றுள் இருபத்தெட்டு முதன்மையுடையவை என்றும் அறிந்து கொள்ளுதல் ஆகும். அவை எல்லாம் காலத்தின் வாய்ப்பட்டு மடிந்தன. இரண்டொரு சைவ ஆகமங்களைத் தவிர வேறு கிடைக்கவில்லை. அவ்வொன்று இரண்டும் சமக்கிருத மொழி பெயர்ப்பாயுள்ளன. மற்றவை மொழி பெயர்க்கப்படாமலே இறந்தன. பல நூற்றாண்டுகளாகச் சைவத்தை எதிர்த்த மதமே கிடையாது. சரித்திர காலத்துக்கு முன்தொட்டு ஆகம ஞானத்தைத் தழுவிய மதமே இந்தியாவில் இருந்தது. பௌத்த சைன மதங்கள் தோன்றித் தெற்கே சென்று சைவசமயத்தை நசுக்கத் தொடங்கினதினாலும், புராண இலக்கியங்களாலும் உண்மையான சைவம். தனது பரிசுத்த நிலையை இழந்து கட்டுக்கதை அளவில் நிலவத் தொடங்கிற்று. அப்போது தமிழருக்குத் தமது மதக் கொள்கைகளை நாட்டிப் பிற மதங்களைக் களைவது அவசியமாயிற்று. அப்பொழுது ஆகமஞானங்கள் திரட்டப்பட்டுத் சித்தாந்த நூல்கள் எழுதப்பட்டன. இவற்றின் தொகை பதினான்கு. அவற்றில் பிற்காலத்திய பல சமக்கிருதச் சொற்கள் காணப்படுகின்றன.

புராண கால ஆரம்பத்திலிருந்து சமக்கிருதத்துக்கு மேன்மை ஏற்பட்டது. இம்மேம்பாட்டால் சமக்கிருதம்

[2] கேவேட்டாகிக் கெளிறது படுத்தும்
மாவேட் டாகிய ஆகமம் வாங்கியும்
மற்றவை தம்மை மகேந்திரத் திருந்து
உற்ற வைம்முகங்களாற் பணித்தருளியும்

(திருவாசகம்)



தெய்வத் தன்மை உள்ளது என்னும் மூடக்கொள்கையும் எழுந்தது. அம்மொழியில் எழுதப்பட்ட வேதங்களில் எல்லாவகை ஞானமும் உண்டென்னும் நம்பிக்கையும் ஏற்பட்டது. இடைக்காலத்தில் இலாத்தின், கிரீக் முதலிய மொழிகள் ஐரோப்பாவில் எப்படி மதிக்கப்பட்டனவோ அப்படியே வடமொழி, தமிழிலும் சிறப்புடையதாகக் கொள்ளப்பட்டது. கிரேக்கு இலாத்தின் மொழிகளைப்போல வடமொழி, சமய மொழியாகவும் வந்தது. தமிழ் ஞானத்துக்குச் சித்தாந்தம் என்னும் பெயரிடப்பட்டது நூதனமன்று. சித்தாந்த சாத்திரத்தில் பதி பசு பாசம் என்னும் முப்பொருள்களின் உண்மை கூறப்படுகின்றது. தமிழருடைய ஞானமுதிர்ச்சியைத் தேவார திருவாசகங்களைக் கொண்டறியலாம். கி.பி. ஐந்தாம் நூற்றாண்டில் விளங்கியவரென்று கருதப்படும் திருமூலர் இச்சாத்திர உண்மைகளைத் திருமந்திரத்தில் விளக்குகின்றார்[1]. திருமூலர் கூறுவது போலத் திருமந்திரம் ஆகமங்களின் சுருக்கமாகும். ஆகவே ஆகமங்கள் திருமூலர் திருமந்திர காலத்தும் சித்தாந்த சாத்திரங்கள் செய்தவர்கள் காலத்தும் இருந்தன என்று தெரிகிறது. பழைய தமிழர் சமய ஞானத்தைக் கூறும் நூல்களின் தொகைகள் ஆகமங்களெனப்படும். அத்தகைய நூல்களை எழுதியவர்களின் பெயர்கள் மறக்கப்பட்டன. மனிதர் பிழைபடும் இயல்பினர் என்னும் எண்ணத்தினாலேயே, அவை கடவுளால் அருளிச் செய்யப்பட்டன என்று முன்னோர் கருதினர். வேத பாடல்களைச் செய்த ஒவ்வொரு முனிவரின் பெயரும் காணப்படுகின்றது.

[1] இலிங்கம், மச்சம், கூர்மம், காருடம், ஸ்காந்தம், பத்மம், பிரமாண்டம், வராகம், பிரமம், வைணவம், வாமனம், சைவம், பிரமகை வர்த்தம், பாகவதம், நாரதீயம், மார்க்கண்டேயம், ஆக்கினேயம், பௌடிகம்.

என்னை நன்றாக இறைவன் படைத்தனன்
தன்னை நன்றாகத் தமிழ் செய்யுமாறே (திருமந்திரம்)

வடக்கே வாழ்ந்த தமிழர் ஞாயிற்றை வணங்கினார்க-ளென்றும், தெற்கே உள்ளவர்கள் சிவனை வணங்கினார்க-ளென்றும், அகத்தியர் வடக்கே சென்று சைவத்தைப் பரப்பினாரென்றும் முன் ஓரிடத்திற் கூறினோம். ஆகவே சைவத்தைப் போலவே ஆகமங்களும் தெற்கே மகேந்திரத்தில் தோன்றின என்று கருத இடமுண்டு.*

வேதம் பசு என்றும் ஆகமம் அதன்பாலென்றும் சிலர் கூறுவதுண்டு. ஆராய்ச்சி முறையில் வேதமும் ஆகமமும் நேர் விரோதமுடையனவாய்க் காணப்படுகின்றன. வேதங்கள், பல தெய்வ வணக்கம், இயற்கைப் பொருள் வணக்கங்-களைக் கூறுகின்றன. ஆகமங்கள், ஒரே கடவுளை முழு முதலாகக் கொண்டு வழிபடும் முறையைக் கூறுகின்றன. 'ஆகமங்கள் வேதங்களுக்கு விரோதமானவை. ஆகம-

---

* *திருவாசகத்திற் பல இடங்களிற் ஆகமகங்கள் மகேந்திரத்தில் தோன்றின என்று சொல்லப்படுகின்றது. "மன்னுமாமலை மகேந்திரவெற்பன்" "தென் பாண்டி நாட்டான்." மகேந்திர மலை மந்தர மலை எனப்படும். அதற்குக் "குருவாய்" என்று பெயர். குருவாய்க்கு எதிர் கரையிலுள்ளது அலைவாய். இங்கு குமரன்கோட்டமிருக்கிறது. செந்தில், திருச்செந்தூரென்பன அதற்கு மறு பெயர்கள்.*

*குருவாய், சிவனுக்கு இடமென்று கருத இடமுண்டு. இதனையே சமக்கிருத புராணகாரர் இமயமலைச் சிகரங்களில் ஒன்றெனக் கொண்டனர். மனுவின் பேழை தங்கியதாகச் சதபதப் பிராமணம் கூறும் வடமலை பொதியில் அல்லது ஸ்ரீபருவதமென அறியக் கூடாமலிருக்கின்றது. தென்னாட்டுக் கதைகளை வட நாட்டார் பார்த்தெழுதுமிடத்துத் தென்னிந்தியாவில் நிகழ்ந்தவற்றை எல்லாம் வடநாட்டில் நிகழ்ந்தனவாக எழுதியிருக்கின்றனர்.*

*" இருபது மெட்டும் மூலமுப்பேத*
*மிருநூறு மேழுமென வெண் (சைவசமயநெறி)*
*மூலாகமங்கள் 28 ; உபாகமங்கள் 207.*



ஞானம் வேத அறிவைவிட மிக மேலானது' என என். நாராயணசாமி ஐயர் கூறுகின்றார்.

புராணங்கள், வேதங்களைப் புகழ்வதில் ஆச்சரியம் ஒன்றுமில்லை. புராணங்கள் தமிழ்க் கொள்கைகள் சிலவற்றோடு வேதக் கொள்கைகளையும் கலந்து எழுதப்பட்ட நூல்-களாகும். புதிய மக்களுக்கு வேதங்கள் ஆதாரமாயின. புராணப் போக்குக்கு ஆகமங்கள் இடங் கொடாமையால் அவர்கள் ஆகமங்களிலும் பார்க்க வேதங்களே பிரமாணமெனக் கூறினர். 'வேதங்களுக்கு முன் ஆகமங்ளுண்டு' என்னும் உண்மை ஆராய்ச்சியாற் பெறப்படுதலின், வேதத்தினின்றும் ஆகமம் பிறந்தது என்னும் கொள்கை பொய்யாகின்றது. யாகங்களைக் கூறும் ஆரியர் நூல்கள் வழக்கிறந்தபின் ஆலய வழிபாட்டைக் கூறும் ஆகமங்கள் தமிழராலும் தமிழ் மதத்தைத் தழுவிய ஆரியராலும் கைக் கொள்ளப்பட்டன.

வேத பாடல்களில் கோயில் வழிபாடு கூறப்படவில்லை. ஆலயங்களும் ஆலயவழிபாடும் ஆரியருக்குரியவையல்ல. பழைய நாள் தொட்டுக் கடவுளின் இருப்பிடமாகிய ஆலயங்களிருந்த தென்னிந்திய, அசீரிய, பாபிலோனிய ஆலயங்களின் அமைப்பு ஒரேவகையாகக் காணப்படுகின்றன. தமிழரின் சரித்திரத்தை அறியாமையால் மேல் நாட்டாசிரி-யர்கள், தமிழர் கட்டிடமமைக்கும் முறையை அசீரியர், பாபிலோனியர்களிடம் கற்றார்கள் எனக் கூறினர். பௌத்த சமயத்துக்குப்பின்தான் தமிழர் கட்டிடமமைக்கும் முறையைப் பயின்றார்கள் என்னும் ஐரோப்பிய ஆசிரியர்களின் கூற்று முற்றும் பிழையானது. மாபாரதம் சிவாலயங்களைப் பற்றிக் கூறுகின்றது. அருச்சுனன் சிவபெருமானைக்

---

* " From the little I have seen of them they (the Agamas) seem to be opposed to the Vedas and almost aspire to arrogate to themselves position much superior.

கயிலாயத்திற் சென்று வழிபட்டான். கயிலாயமென்பது குருக்ஷேத்திரத்துக்குப் பக்கத்தில் ஓர் குன்றின் மேலுள்ள ஆலயமாகும். யுத்த காலத்தில் ஓர் இரவில் அருச்சுனன் கிருட்டிணனோடு கயிலாயத்துக்குப் போய்த் திரும்பி வந்தான் என்று சொல்லப்படுகின்றது. கயிலாயம் என்பது கோயில் என்பதன் திரிபு ஆதல் கூடும்.

[1]பிராமணர்களின் தமிழ் வெறுப்பு, தமிழ்மொழி குன்றுதற்கும் தமிழ் நூல்கள் பலவற்றின் அழிவுக்கும் ஏதுவாயிருந்தது. தமிழ் நாட்டின் பல பகுதிகளை வாய்ப்படுத்திக் கொண்ட கடல், பல நூல்களையுங் கொண்டது. கி. பி. 10-ஆம் நூற்றுண்டிற் பிராமணராலும், 14-ஆம் நூற்றுண்டில் மகமதியராலும் அநேக நூல்கள் அழிக்கப்பட்டன. "அரசரின் பரிபாலனத்தின் கீழ்த்தோன்றிய நூல்கள் காணப்படவில்லை. அந் நூல்கள் 14-ஆம் நூற்றுண்டில் மகமதியரால் அழிக்கப்பட்டன" என்று வின்சுலோ பாதிரியார் கூறியுள்ளார்.

"பிராமணர் தாம் அழிக்க முடியாத நூல்களைச் சிதைவுபடுத்தினர். வெள்ளத்தாலும் நெருப்பாலும் நேர்ந்த

[1] In the 4th century A. D. Buddhism declined and there was a Brahmanical revival and the Brahmans re-edited some of the books on the religious and civil laws and gave a new and popular shape to them. The old Puranas were also recasted about the same period and good many new ones written—*Collected works of Bhandarkar, Vol. 2, p. 444.*

In the earlier epoch prior to A-D 1000 pre-Aryan legends were rendered from current Prakrit versions into Sanskrit and found a place in one or the other numerous Puranas, Upapuranas, Stalapuranas and Mahatmyas, Tantras or even into Mahabharata and so were raised up to as level of pan-Indian acceptance—*The history and culture of India, Vol. 5, p. 379.*



கொள்ளையில் இது மேலானது. தமிழ் நூல்களை எடுத்துச் சமஸ்கிருதத்தில் மொழி பெயர்த்துப் பல கேடு செய்திருக்கின்றனர். பிழையான வழிகாட்டியிலும் வழிகாட்டியில்லாமலிருப்பது நன்று" என கோவர் (Gover) என்னும் ஆசிரியர் கூறுவர். முண்டகோப உபநிடதத்தில் "சிவன் என்னும் நாமத்தைக் கூறுகிறவன் புலையனுயினும் அவனோடு உண்; இரு" என்று வரும் பகுதி மாக்ஸ் மூலரின் மொழி பெயர்ப்பிற் காணப்படவில்லை என்று காசிவாசி செந்திநாதையர் கூறியிருக்கின்ருர். இவ்வாறே நூல்களில் மாற்றங்களும் இடைச் செருகல்களும் நுழைந்தன.

முற்றும்

---

[28]Oriental scholars who are practically acquainted with India, have too long silently accepted the popular European opinion that all that is best in Indian literature, languages, religion and mythology is Aryan or due to Aryans; and that Indian languages from the base of the Himalayas to Central India and Bombay and the high lands of the Indus to the mouth of Hugly are either Aryan or based thereon, whereas the contrary is true, or nearly so—an opinion now more frequently voiced by many scholarly Indian administrators. Those not infatuated with Sanskrit or misled by the glorious literature it has given us, now see that neither the Hindu of the Bangas (Bangalis) of Ganges nor of Panjabis nor the language of the western Maharattas or even of Rajputs are Aryan, though Aryanised by some of the upper classes—*Short Studies in the science of comparative religions p. 47—J. G. R. Forlong (1897).*

## தமிழணங்கு

பொதியை யென்னும் முதுமலைக் கண்ணே
திருவுரு வாகித் தென்னன் புகழாந்
தொட்டிலிற் கிடந்து துகடீர் சங்கப்
புலவர் மடிதோள் புடை சேருக் களை
மாறி மாறி மகிழ்வுட னிருந்து
வைகை யேட்டில் வளமுடன் றவழ்ந்து
தீமே னின்று செந்தமி ழறிஞர்
நினைவி னடந்து நிலவி யியலிசை
நாடக மென்ன நவிலு முத்திற
வரங்கிற் திருநட மாடித் திகழ்ந்து
தவமக னமுத சாகரன் சமைத்த
யாப்பருங் கலமா மெழிலட் டிகையுந்
தண்டி மாறன் றகவுட னிழைத்துக்
கோத்த பதக்கமுங் கொலுவுட னணிந்து
நம்பி இறையனுர் நனியுழைத் தீந்த
பொருளிற் றேங்கிப் போகம் பொலிந்து
கன்னடந் தெலுங்கு கவின் மலையாளந்
துளுவ மென்னுஞ் சூழலி னுலவும்
மக்களை யீன்று மரபு வழுவா
தன்று மின்று மதே பெற்றித்தாய்
நாவலர் தமது நாவா கனத்தும்
பாவலர் தமது பாவா கனத்தும்
புலவர் தமது புலவா கனத்தும்
பண்டிதர் தமது பாண்டித் தியத்தும்
மேற்றிச் சுமந்து போற்றிச் சாமரை
வீசிட நின்று வீறுகொள் கன்னிக்
கோலஞ் சிறிதுங் குறையா தொளிரும்
பைந்தமிழ் அணங்காம் நந்தமிழ் அணங்கை
நந்துத லின்றிச் சந்தத நச்சிப்
பரிபா லித்தது பார்முழு தும்மே.''

## NOTES ON SIVAGAMAS

The Sivagamas or siddhantas are supposed to have been originally written by Maheswara, probably in Sanskrit. But it is said in Siva-Dharmottara that they were written in Sanskrit Prakrit and local dialects. This explains the fact that the Agamas are available both in Sanskrit and some Dravidian languages such as Tamil, Telugu and Kanarese. It also explains the controversy as to whether the Agamas or Siddhantas were originally written in Sanskrit or in the Dravidian tongue. The present writer had the good fortune to collect a large number of the Agamas either as complete wholes or in fragmentary portions. Many of the manuscripts are in a decaying state and some of them have been completely lost...........It is difficult to ascertain the respective dates of the Agamas. We only feel that most of the Agamas mentioned above were completed by the 9th century A.D.

Schomerus points out that it is sometimes claimed that the Agamas were written in the Dravidian languages in prehistoric times and that they owe their origin to revelation of Siva to Nandiemperuman in the form of Srikantha Rudra in the Mahendra Parbata in Tinnevelly district. Owing to a great flood much of the twenty-eight Agamas were lost. That is now available in Sanskrit Translations.

*—A history of Indian Philosophy, Vol. 5—Surendranath Das Gupta, pp. 15-18.*

The twenty-eight primary Sivagamas must be distinguished from the Tantras or Saktagamas which though Saivite are not favoured in Southern India. There are also about 120 Upagamas recognised. But even of the primary Agamas about only 20 have been presented in fragments, these being such portions only as treat of temple worship and ritual. Of the Upagamas only two or three are found entirely. Strictly each Agama must contain four Padas Charya Kriya Yoga and Vidya Padas; but now only the Kriya portion is ever found. Our knowledge of the philosophy taught by them is mainly restricted to Vidya or Jnana Padas of the two Upagamas, Mirigendra and Pouskara and of a dozen slokas, reputed to be from Rouravagama, the commentary upon which forms the Sivajna Botham of

Meikanda Deva which is again the source of a series of Tamil commentaries constituting as it styles itself; *Sudda Advaita Saiva Sidhanta* scheme.........But one thing at least is certain; that the Mirigendra must be considerably posterior to Buddhism and Jainism, to which it refers as if well known. The general style of composition is also such that we cannot put it earlier than Gaudapada, Sankara and others whose metrical works it so much resembles.

*—Light of Truth, Vol. IV, No. 4—N. Narayanasami Aiyer.*

During the Vedic age we have reason to infer that the Tamilians or Dravidians inhabited this land from the Himalayas to Cape Comorin and beyond and several of the Tamil princes in Northern India were well versed in the Philosophy of the Arrivars. Probably it was to one of these rulers that the four Brahmans of the Chandokya upanishad resorted for spiritual enlightenment. In the process of time it came to pass that many of the ideas and words of this system found a prominent place in some of the Vedic songs and Upanishads, and a cycle of Sanskrit literature called Tantric or Agamic came into being as adoptions of the mystic lore of Tamil hymns.

*—The Hindu Culture and Modern Age, p. 381, Ramasamy Sastri.*

The original faith of the country was a kind of Saivaism the prominent feature of which was the worship of Siva Sakti in the form of Ardhanari-Nateswara. Some investigators hold that this was the aboriginal faith of the whole of India prior to the advent of the Aryan tribes with their Vedas. Considerable support is lent to this view by the fact that the archaelogical excavations in Mohenjodaro seem to point unmistakably to the prevalance in that millenniums old civilization of a fullfledged cult of Siva with the characteristic accompaniments of Lingam and Bull. The religion which may have pervaded India centuries before the advent of foreigners was mainly based on traditions of antiquity signifies by the works Agama and Purana.

*—Hindu Culture, p. 118—Guru Dutt.*

# APPENDIX

## ANCIENT GEOGRAPHY

1. Peninsular India was at first a part of a different continent to which the Gondwana is given by geologists. It extended from South Africa through Australia as far as South America as shown by identity of fossil remains and vegetable in all this area. The Western Ghats formed the watershed separating the eastern from the western part of Gondwana. That is why we find the rivers of peninsular India flowing from sources in sight of the Arabian Sea in the opposite direction till they fall into the Bay of Bengal. In the North an extensive Eurasiatic ocean called the Tethys engulfed the whole area from Central Europe through the Asia Minor to Northern India and Burma. In India it was only the Aravalis that looked the seas. To the free migration of the ocean are to be traced the affinities found in the fossil centres of places so far apart from China, Himalaya and Burma. After long interval the first tremors of mountain build was felt. The Tethys retreated westward with its floor rising and the lands on the opposite sides approaching each other.

*—Hindu Civilization, p. 7—Radha Kumud Mookerji.*

2. The most ancient part of the vast country is the Deccan which was an island when Hindustan was still under the sea. That land of Gondwana as prehistorians call it was itself the result of the dislocation of an Austral continent which may have extended from Australia to South Africa and has left remnants in Ceylon, the Andaman and Nicobar Islands and the Malay Peninsular. A volcanic upheaval which submerged very ancient lands, gave the Deccan its peninsular shape, which in the north cretaceous sea bottoms not only appeared mountains above the water but also rose to heights nearly double those of the peaks of Europe. By that tipping of the scales India, hitherto joined to an Austral continent became an integral part of northern hemisphere. A wide deep gulf extended on each side of the

plain only just raised above sea level which connected the Deccan with the Himalaya and the waters which streamed tumultously off the huge newly arisen massif, the five rivers the upper Indus basin on one side and the multitude of torrents which feed Ganges on the other brought with them great masses of slit which transformed great part of the two gulfs into two river basins.

*—Ancient India and Indian Civilization, p. 2—Paul Masson Oursel.*

3. In the chapter devoted to immigration and distribution of organisms Haeckel in referring to the continual changing of the distribution of land and water on the surface of the earth says, "The Indian ocean formed a continent which extended from the Sunda Islands along the southern coast of Asia to the east coast of Africa. This large continent of former times Sclater has called Lemuria from the monkey like animals which inhabited it, and it is at the same time of great importance from being the probable home of the human race". The important proof which Wallace has furnished by the help of chronological facts, that the Malayal archipelago consists in reality of two completely different divisions is peculiarly interesting. The western division the Indo-Malayan archipelago, comprising the large islands of Borneo, Java and Sumatra was formerly connected by Malaca with the Asiatic continent and probably also with Lemuria continent just mentioned. The eastern division, on the other hand, the Austro Malayan Archipelago, comprising Celebes, the Moluccas, New Guinea, Solomon's Islands etc., was formerly directly connected with Australia.

*—Castes and tribes of Southern India, Vol. I, Introduction, pp. 20-22—E. Thurston.*

4. At a time when coal measures were found in Europe there flourished in Australia, India and South Africa and South America alike a number of distinctive forms of plants. It was therefore concluded that all these regions then formed part of an immense continent called 'Gondwana land'. But an interesting new theory has quite recently been advanced by Prof. Wegenar, who suggests



that in past ages these continents were very much nearer to each other than at the present time. South America, Antarctica, Australia and India can readily be fitted round South Africa like piles jagsaw puzzle, so as to form a single land mass of far less astonishing size ; that is the vast Gondwana land. Prof. Wegenar regards the continental masses as blocks of higher granitic rock floating like an ice floe in water, upon a sphere of heavier basaltic rock, which lies below the floor of great ocean. It is in tertiary epoch not very long ago in geological time these blocks became separated.

*—Outline of Science, p. 641—Prof. Arthur Thomson.*

5. The eastern archipelago once formed a part and parcel of the continent of Asia. But by the gradual subsidence of land from valcano action to the bottom of the sea portions of the south and south-eastern Asia got detached from the mainland and became islands.

........It will appear from the study of the map of Asia that the subsidence took place in a latituderal level belt amongst parallel to the equator, on both sides of it separating Ceylon, Sumatra, Java, Borneo, Celebes, and a host of islands from the main land of Asia. It will also appear that the Malaya Peninsula very narrowly escaped complete detachment from the volcanic disturbance. It will also appear from a study of geographical distribution of animal and vegetable life in the south and south-eastern part of Asiatic continent, and the islands, that most of them have got detached from the mainland by subsidence, and that some of them on the other hand, have sprung up from the bottom of the sea by upheaval.

—Vide *Wallace's Malay archipelago, Island life and geographic distribution of animals—Vol. 2—Haeckals History of Creation, Vol. 2—quoted in ancient Geography of Asia by Nibon Chandra Das.*

6. Bhagavat Purana represents that Lanka which is identified with Ceylon formed at one time a part of the reat Indian continent, which was detached and broken off

from the summit of Mount Meru and hurled into the sea by the God of Wind. This, in plain words, refers to some cataclysm or cyclone so frequent in tropical regions. It is not improbable that at one time or other of world history, Asia and the vast group of islands including the Indian archipelago, Australasia and Polynesia (Oceania) and the continent of America were in closer communication with one another by land than they are at present.

*—Hindu Civilization—K. Basu.*

7. He (Dr. Basedow) reiterates the theory that once a chain of lands linked together Australia, India and South Africa, the continental masses which in passed eras supplied this link, zoologists have christened Lemuria, while Geologists refer to the lost land as Gondwana ; it is somewhere within the area once occupied by this submerged continent......that we must look for the cradle of the species *Homo.*

*—India and the Pacific World, p. 222—Kalidas Naig.*

## Cradle of human race

8. The cradle of the human family lay most probably in Malaysia (Java man). From this central area of dispersion the first migratory movements ranged north to Asia, west to Africa and east and south over the whole of the Oceanic world by land connections which have since been greatly reduced by subsidence.

*—Keane.*

9. The locality of the origin of the earliest race from recent researches appears to have been on lands now submerged beneath the Indian Ocean.

*—Science of man, Australia, Dec. 1900.*

10. The large continent of former times Sclater, an Englishman has called Lemuria from the monkeylike animals which inhabited it and it is at the same time of great importance from being the probable cradle of the human race which in all likelihood here first developed apes.

*—Ernst Haeckel.*



11. After inspecting the evidences Keith wrote "It is hard to resist the notion that in course of about one million years the ape browed *pithecanthropus* had been converted into ape browed aborigines of the continent of Australia."

*—Outposts of Science—Bernard Jaffee.*

12. Prof. Lull points out that Asia is, to the oldest known human remains (in Java) and Asia was the seat of the most ancient civilization and the original home of many domesticated animals and cultivated plants. The probability is that the cradle of human race was Asia.

*—Outline of Science, Vol. I, p. 109—H. G. Wells.*

13. But was Java therefore the region of human origin ? May this not more probably have occurred in India where we know there were anthropoid apes once existing. That seem to have been the common stock from which gorilla, chimpanzee and orangoutang were developed.

*—The world we live in, Vol. I, p. 134—Graeme Williams.*

14. India was an amazing breeding ground for the evolution of life forms. Man himself may have struggled upwards out of the anthropoid within the limits of India.

*—Ibid, p. 104.*

15. India, Pitland says, was never an uninhabited land, over which a flood of comparatively late civilizations was to flow with the first races to occupy it. From quarternary onwards the soil of India has been trodden by the foot of man.

*—Ancient India and Indian Civilization (Foreword), p. 13.*

16. It has been suggested the apes are mostly tropical, and anthropoid apes are now confined almost exclusively to the vicinity of the equator. We should expect the ancestral forms of man to have inhabited the same localities.

*—Natural Selections—Darwin.*

